கழக வெளியீடு ; ௧௮0௫

# சங்க இலக்கியத்தில்
# செடிகொடி விளக்கம்



ஆசிரியர் :
திரு பி எல் சாமி, பி.எஸ்ஸி



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.
1967

1967 THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED

Ed 1 Dec 1967



SANGA ILAKKIATHIL
SEDIKODI VILAKKAM

Appar Achakam, Madras - 1.

# பதிப்புரை

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சங்க இலக்கிய மாகிய பத்துப் பாட்டு, எட்டுத்தொகை நூல்கள் நல்லிசைப் பெரும் புலவர்கள் பலர் பாடிய பாட்டுக்களின் தொகுப்புக் களே யாகும். அப்புலவர்கள் பாடிய பாட்டுக்களத்தனையும் கிடைக்கப்பெற்று வெளிவந்தனவாகவுமில்லை. ஒவ்வொரு புலவரும் எத்தனை பாட்டுக்கள் பாடியுள்ளனர் என்பதும் தெரிவதற்கில்லை. புலவர் சிலர் பாடியதாக ஒன்றிரண்டு பாட்டுக்களே வெளிவந்துள. அப் பெரும்புலவர்கள் தாங்கள் வாழ்ந்த காலத்தில் ஓரிரு பாட்டுக்களை மட்டுமா பாடியிருப் பார்கள்? தொகுத்தவர் காலத்திலே கிடைக்கப் பெற்ற பாட் டுக்களே பத்துப் பாட்டு, எட்டுத் தொகை நூல்களாக வெளி வந்திருக்கின்றன. அப்படி வெளிவந்த பாட்டுக்கள் சிலவற் றிலுங்கூட சில வரிகள், தொடர்கள் விடுபட்டிருக்கின்றன.

இச் சங்க இலக்கியப் பாட்டுக்களிலே மேலை நாட்டறி ஞர் வெளியிட்டிருக்கிற மரஞ் செடி கொடி இன நூல் (Botany), புள் விலங்கின நூல் (Zoology) ஆகியவற்றி லுள்ள அரிய கருத்துக்கள் இலை மறை காய்போற் காணப் படுவது மிகவும் வியந்தின்புறுதற் குரியது. இதிலிருந்து சங்கப் புலவர்கள் வாழ்ந்த காலத்திலும் தமிழில் செடியின நூல், விலங்கின நூல் போன்ற அறிவியல் நூல்கள் பல இருந்திருக்க வேண்டுமென்பதும் அவற்றை அக்காலப் புல வர்கள் படித்தறிந்திருக்க வேண்டுமென்பதும் நன்கு புல னாகின்றன.

பண்டைத் தமிழ்நாட்டில் கட்டிடக் கலை, சிற்பக் கலை, ஓவியக் கலை, மருத்துவக் கலை, வானநூற் கலை, நாடகக் கலை, இசைக் கலை, நகரமைப்புக் கலை, சமையற் கலை, ஆட்சிக் கலை, போர்க் கலை, வாணிகக் கலை, கப்பற் கலை முதலிய கலைகளெல் லாம் தலைசிறந்து விளங்கித் தமிழ்மக்கள் சீரும் சிறப்புமாய்

வாழ்ந்தார்களென்னும் மெய்ம்மையைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

இளங்கோவடிகள் அருளிய சிலப்பதிகாரத்திலும், அதற்கு அடியார்க்கு நல்லார் இயற்றிய உரையிலும் குறிக்கப்பெற்றிருக்கும் அவை நூல், எண்ணூல், கனு நூல், கோழி நூல், குதிரை நூல், யானை நூல், புதையல் நூல், யோகநூல், கலந்துறை கணக்கு, கோலங்கோடல், காவல் நூல், கரவட நூல், கூப நூல் ஆகிய பலகலை நூல்களில் ஒன்றேனும் இப்போது கிடைப்பதற்கில்லையே! நெருப்பாலும், நீராலும், பகைவராலும் அழிக்கப்பெற்றன போக எஞ்சியிருக்கும் சில தமிழ் நூல்களே பண்டைத் தமிழ்ப் பண்பையும், சிறப்பையும், தந் நேரில்லாப் பெருமையையும் உணர்த்தித் தமிழ் மக்களைத் தலைநிமிர்ந்து நிற்கச் செய்கின்றன என்பது திருவருட் செயலேயாகும்.

அழிந்துபோன நூல்களில் முழு நூலாகத் திருவள்ளுவப் பெருநாவலர் அருளிய திருக்குறள் மட்டும் பிழைத்திருந்து தனக்கொப்பான பிறிது நூல் உலகத்திலேயே இல்லை என்று மிளிர்ந்து, எந்நாட்டினரும், எச்சமயத்தினரும், எம்மொழியினரும், எக்காலத்தினரும் போற்றுந் தகையதாய்த் தமிழின் தனிப் பெருமையைப் பகலோன் போன்று ஒளிர்ந்து காட்டிக் கொண்டிருப்பது தமிழ் மக்கள் செய்தவப்பயனேயாகும்.

இத் தெய்வத் திருக்குறளில் பொருளாதாரம், அரசியல், மெய்யுணர்வு (தத்துவம்), உளவியல், அறவியல், சட்டவியல், இன்பியல் ஆகிய துறைகளின் அடிப்படைக் கருத்துகள் செறிந்து காணப்பெறுகின்றன வென்பது அத்துறைகளில் ஆராய்ச்சிமிக்க பேரறிஞர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்திலே ஆற்றிய சொற்பொழிவு நூல்களிற் கண்டு மகிழ்தற்குரியது.

1962 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 3 ஆம் நாள் சென்னையிலே கழகவழிக் கல்வி நிதி அமைச்சராயிருந்த மாண்புமிகு எம். பக்தவத்சலம் அவர்கள் தலைமையில்

நடாத்திய சூளாமணி உரை வெளியீட்டு விழாவிலே இப்போதைய தமிழகவரசு மாண்புமிகு கல்வியமைச்சர் நாவலர் நெடுஞ்செழியனவர்கள் பேசியபோது "சங்க இலக்கியத்திலும் திருக்குறளிலும் எடுத்தாளப் பெற்றிருக்கும் அனிச்சம், வெட்சி, காந்தள், கொன்றை முதலிய மலர்களை நேரிற் காணாதவர்கள் படத்தைப் பார்த்தேனும் அவற்றின் தோற்றத்தை உணர்வர். அவற்றை ஓவியமாகப் பார்த்துவிட்டு இலக்கியம் படித்தால் இலக்கியச் சுவை மிகுதிப்படும். அதனைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகந்தான் செய்ய முடியும். அதனாலேதான் திரு சுப்பையாபிள்ளையை மீண்டும் மீண்டும் அதனைச் செய்து நிறைவேற்றும்படி வற்புறுத்திக் கூறுகின்றேன்" என்றார்கள்.

கழக ஆட்சியாளர் திரு சுப்பையாபிள்ளை நன்றி தெரிவிக்கும்போது "அன்பர் நெடுஞ்செழியனவர்கள் சில கருத்துக்களைத் தெரிவித்தார்கள். அவையெல்லாம் என் மனத்திலும் உண்டு. அவற்றைச் செயலாக்குவதற்குத் தக்க புலவர்களும் சூழ்நிலையும் அமையாமையால்தான் அவை நிறைவு பெறவில்லை. ஆனால் சில ஆண்டுகளாக இறைவன் யான் எண்ணிய எண்ணங்களைக் காலந் தாழ்த்தேனும் நிறைவேறும்படி செய்தருளுகின்றான். எனவே அவர்கள் கூறிய கருத்துக்களும் விரைவிலே முற்றுப்பெறும் என நம்புகிறேன்" என்று கூறினர்.

'எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்'

என்ற பொய்யாமொழியின்படி அடுத்துச் சில திங்களில் மேலைநாட்டு அறிவியற் புலமையும், செந்தமிழ்ப் புலமையும் ஒருங்கே நிரம்பிய 'மாகி (Mahe)' யின் ஆட்சித் தலைவர் உயர்திரு பி. எல். சாமி, பி. எஸ்ஸி அவர்களின் தொடர்பு திரு சுப்பையாபிள்ளை அவர்கட்குத் திருவருளால் கிடைத்தது. அதன்பின் அவர்கள் செந்தமிழ்ச் செல்விக்குச் சங்க இலக்கியத்தில் செடி கொடி மரங்கள், விலங்குகள் முதலியன பற்றி மேலைநாட்டு அறிவியல்நூற் கருத்துக்களோடு ஒப்பிட்டு ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி வருவாராயினர்.

நம் தமிழ் நூல்களிலுள்ள அறிவியற் கருத்துக்களை அறிந்து இன்புறுதற்கு ஆங்கிலக்கல்வி மிகவும் இன்றியமையாதது என்பது இந்நூலால் நன்குணரக் கிடக்கின்றது.

உயர்திரு **பி. எல். சாமி** அவர்களால் எழுதப் பெற்ற **சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்** படங்களுடன் என்ற தலைப்பில் இது முதற் புத்தகமாகும். இன்னும் இதே தலைப்பில் இரண்டு புத்தகங்கள் வெளிவரும். அடுத்துச் **சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கமும், புள்ளின விளக்கமும்** தனித்தனி ஒவ்வொரு புத்தகம் வெளியிடப்பெறும்.

இத்தகைய அரிய அறிவியல் நூல்களை யாம் விரும்பிய படி எழுதித் தரும் நுண்மாண் நுழைபுலமிக்க அறிவியற் புலவர் **உயர்திரு. பி. எல். சாமி** அவர்கட்குக் கழகத்தினரும், தமிழ்ப் பெருமக்களும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையர். அவர் பல்லாண்டு பல்லாண்டு பல வளங்களுடன் வாழ்ந்து மேலும் பல அறிவியல் நூல்களை எழுதுவதற்குத் திருவருள் புரியும்படி எல்லாம் வல்ல இறைவன் இணையடிகளை வாழ்த்தி வணங்கி வேண்டுவோமாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# அணிந்துரை

மாண்புமிகு. நாவலர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ.,
தமிழகக் கல்வியமைச்சர்.

தமிழ்ப் பெருங்குடி மக்களில் நீண்ட நாள் வேணவா வினை நிறைவு செய்யும் இந்நூலைப் பெருமையோடும், பூரிப் போடும் போற்றிப் பாராட்டி வரவேற்கிறேன்.

சற்றேறக் குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுந்த சங்க இலக்கியங்களில் குறிப்பிட்டுள்ள சில செடிகொடிகளின் விளக்கமாக இந்நூல் வெளிவருகிறது.

சங்ககால மக்கள் எப்படி இயற்கையோடு ஒன்றி வாழ்ந் தனர் என்பதைப் புலவர்கள் படம் பிடித்துக் காட்டி யுள்ளனர். வாழ்க்கையை அகம், புறம் என இருகூறு களாகப் பிரித்தனரேனும், அகவாழ்வு எப்படிப் புறத்தோடு ஒன்றி நிற்கின்றது என்பதைப் பண்டைத் தமிழ் மக்கள் அறிந்திருந்தனர். நிலத்தை நானிலமாகப் பிரித்து,

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"

.என்று ஐந்தாவதாகப் பாலையையும் சேர்த்து, உண்மைக் காதலை ஐந்து திணைகளாகக் கொண்டு, ஒவ்வொரு திணைக்கும் அவ்வந்நிலப்பகுதியில் சிறந்து விளங்கும் பூ அல்லது மரத்தின் பெயரை இட்டு மகிழ்ந்தனர். ஒவ்வொரு

அகத்திணைப் பாகுபாட்டிற்கும் ஒரு புறத்திணைப் பாகுபாடு உண்டெனக் கண்டு அப்புறத்திணைகட்கும் பூக்களின் பெயரிட்டுள்ளனர்.

ஒருதலை வேட்கையைக் கைக்கிளைத்திணையென்றும், ஒவ்வாக் கூட்டத்தைப் பெருந்திணையென்றும் ஐந்தோடு இரண்டு சேர்த்து எழு திணைகளாகக் கொண்டு அவ்விரண்டு அகத்திணைகளுக்குப் புறத்திணைகளாகப் பாடாண் என்றும், காஞ்சி யென்றும் பெயரிட்டனர். ஒவ்வொரு திணைக்குரிய மரஞ்செடி கொடிகள், புள்ளினம், விலங்கினம் இவற்றையும் வகுத்தனர். பொழுதையும் பெரும்பொழுது, சிறுபொழுது என்று முறை செய்தனர். பொழுதுகளுக்கியைந்த காதல் உணர்வுகளையும் குறித்தனர்.

சங்கப் புலவர்கள் மக்களின் உளப்பாங்கை நன்கறிந்து விளங்கியதுடன், இயற்கையின் எழில்களை, கூறுகளை, இயல்புகளை நன்குணர்ந்திருந்தனர். நுண்மாண் நுழைபுலன்கொண்டு ஒவ்வொன்றையும் ஆராய்ந்து தம் செய்யுட்களில் உரிய இடங்களில் பயன்படுத்தினர். மரஞ்செடி கொடி, புள், விலங்குகள், நிலவியல்பு முதலியன பற்றிய அவர்களின் அறிவு வியக்கத்தக்கதாயுள்ளது.

பத்துப்பாட்டில் ஒன்றுகிய பெருங் குறிஞ்சியென வழங்கும் குறிஞ்சிப்பாட்டில் கபிலர் 99 மலர்களின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். சங்க இலக்கியங்களில் விவரிக்கப் பட்டுள்ள சில செடி கொடிகளைப் பற்றி இந்நூலில் படங்களுடன் விளக்கப்பட்டுள்ளன. செடிநூல் பயில்வார்க்கு மிகவும் பயன்படக்கூடிய வகையில் இந்நூலாசிரியர் சங்க இலக்கியத்தையும், பிற மேனுட்டு அறிஞர்களின் கருத்துக்களையும் ஆராய்ந்து இந்நூலை நன்முறையில் எழுதித் தந்துள்ளனர். அவர் முயற்சி பாராட்டுதற்குரியது. ௳.

இத்தலைப்பினைக் கொண்டு மேலும் இரண்டு பகுதிகள் வெளிவர இருக்கின்றன என்பதும், இம்மூன்று பகுதிகள் வெளியானபின், சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், புள்ளின விளக்கம் என இரண்டு நூல்கள் தனித்தனியே வர இருக்கின்றன என்பதும் மகிழ்ச்சியளிப்பனவாகும்.

1300க்கும் மேற்பட்ட பல அரிய தமிழ் ஆங்கில நூல்களை ஏற்கெனவே வெளியிட்டுப் பெரும்புகழ் பெற்ற தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந் நூல் வரிசையையும் செவ்விய முறையில் வெளியிட முன் வந்தது, தாய்மொழி மூலம் பல பாடங்களையும் கற்பிக்க வேண்டும், கற்பிக்க முடியும் என்பதற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். இக் கழகத்தாரின் பணி மேலும் மேலும் சிறக்க வேண்டும் என வாழ்த்துகின்றேன்.

இந்நூல் ஒவ்வொரு பாடசாலையிலும், கல்லூரியிலும் பயிலக்கூடிய நூலாகும். ஒவ்வொரு நூல்நிலையத்திலும் இருக்க வேண்டிய, பயன்படுத்தப்பட வேண்டிய நூல் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

—

# முன்னுரை

[டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம், எம்.ஏ., பிஎச்,டி.,
மொழியியற்றுறைத் தலைவர், கேரளப் பல்கலைக் கழகம்.]

ஏறத்தாழ இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் "செந்தமிழ்ச் செல்வி" யில் திருவாளர் பி. எல். சாமி எழுதிய "மூதாவா அல்லது மூதாயா?" என்ற கட்டுரை என்னைக் கவர்ந்தது. அதிற்கண்ட அறிவியற் கருத்துக்களும், சங்கச் சான்றுகளைக் கையாளும் முறையும், வாதவன்மையும் பாராட்டத்தக்கவையாயிருந்தன. அதனைப் படித்த அன்றே, அந்த இதழையும், தமிழிலக்கியங்கள் பலவற்றையும் செம்மையாக வெளியிட்டுவரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக இயக்குநர் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களுக்கு எழுதி, முன்பின் நான் அறியாத இக்கட்டுரை ஆசிரியரை ஊக்குவித்து, சங்க இலக்கியத்தில் காணும் செடி கொடி உயிரினங்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளைத் தொகுத்து, நூல் வடிவில் வெளியிடுமாறு வேண்டிக் கொண்டேன்.

இந்நூலைப் பதினெட்டுப் பகுதிகளாகப் பகுத்துச் சங்க நூற்களில் காணும் இருபத்து நான்கு செடி கொடிகளை விரிவாக இந்நூலாசிரியர் விளக்குகிறார். ஒவ்வொரு பகுதியிலும் இலக்கியச் சான்றுகளைத் தேர்ந்தெடுத்து வகைப்படுத்தியுள்ளார். அறிவியலாளர் கூறியுள்ள செய்திகளோடு, சங்க இலக்கியத்தில் காணும் செய்திகளை, 'ஒப்புநோக்கி' விளக்கம் தந்துள்ளார். இவ்வாறு ஒப்பிடும்போது நுட்பமான அறிவியற் செய்திகளைப் புலவர்களோ உரையாசிரியர்களோ குறிப்பிட்டிருந்தால் அவற்றை, ஆசிரியர்

பாராட்டியிருக்கிறார். அச்செய்திகளில் தவறு இருப்பின் அவற்றையும் தயங்காது சுட்டிக் காட்டுகிறார். சங்க நூற் செடிகள், அறிவியலாளர் கூறும் செடிகளில் எவ்வெவற்றை ஒத்திருக்கின்றன என்றும் குறிப்பிடுகிறார். அச்செடிகள் மிகுதியாக வளரும் இடங்களையும் இந்நூல் குறிக்கிறது. செடிநூற் செய்திகளைப் பெருக்குவித்துப் படிப்பவர்களைத் துன்புறுத்தாமல் இனிமையாக ஆசிரியர் தமது கருத்தை விளக்கும் திறன் பாராட்டுதற்குரியது.

இந்நூலாசிரியர் தந்துள்ள விளக்கங்களால் செடிகொடிகளுக்குச் சங்கப் புலவர்கள் பெய்துள்ள அடைகள் பொருட்செறிவு பெறுகின்றன. (எடுத்துக்காட்டு - பக்கம் 78). சில இடங்களில் தக்க பாடம் எதுவாக இருக்க முடியும் என்றும் ஆய்ந்து கூறியுள்ளார் (எடுத்துக்காட்டு பக்கம் - 173). செடிநூற் செய்திகளைத் திராவிடப் பழங்குடி மக்கள் பலரும் தெரிந்திருந்தனர் என்பதற்கு ஆங்காங்கே குறிப்புக்கள் தந்திருக்கிறார். தெலுங்கர் அறிந்த செய்தி (பக்கம் - 184), பைகர்கள் அறிந்த செய்தி (பக்கம்-30), செடிச் செய்திகள் தொடர்ந்து தமிழிலக்கியத்தில் கையாளப்பட்டு வருவதை, சிந்தாமணி (பக்கம் - 68), பெருங்கதை (பக்கம் - 72), பாரதிதாசன் பாடல் (பக்கம் - 76) முதலிய எடுத்துக்காட்டுக்களால் விளக்குகிறார்.

சங்க இலக்கியச் செடிகொடிச் செய்திகளை ஆய்ந்து கூறும் இரண்டு நூற்கள் அண்மைக் காலத்தில் ஆங்கிலத்தில் தோன்றியுள்ளன. ஒன்று டாக்டர். மு. வரதராசன் எழுதிய "சங்க இலக்கியத்தில் இயற்கை அமைப்பு" (Treatment of Nature in Sangam Literature) மற்றொன்று சேவியர் தனிநாயகம் வெளியிட்ட "இயற்கைக் காட்சியும் (தமிழ்ப்)பாக்களும்" (Landscape and Poetry 1962, 1967)

முன்னூல் தனது இரண்டாவது பகுதியின் இறுதிப் பிரிவில், செடிகொடிகளைப் பற்றிய செய்திகளைத் தொகுத்துக் கூறுகிறது. முதற்பகுதியிலும் இறுதிப் பகுதியிலும் அச் செய்திகள் எவ்வாறு பாட்டில் உருப்பெற்றுள்ளன என்பதை அந்நூல் விளக்குகின்றது. பின்னூலில், செடிகொடிச் செய்திகள் எவ்வாறு பாவிற் பின்னப்பட்டுள்ளன என்பதை அதன் ஆசிரியர் ஆய்ந்துள்ளார். திறனாய்வு மனப்பாங்கோடும், ஒப்புநோக்கு உணர்வோடும், பின்னூல் தன் கருத்துக்களைக் கூறுகிறது. டாக்டர் மு. வரதராசன் செடிகொடிகளைப்பற்றிய செய்திகளை விடுபாடின்றித் திறமையாகத் தொகுத்துத் தந்துள்ளார் எனின், தனிநாயகம் தெரிந்தெடுத்த செய்திகளை உளநூல் கருத்துப்படியும் இனநூற் கொள்கைப்படியும் ஆய்ந்து சுவை குன்றாமல் இணைத்துத் தந்துள்ளார் எனலாம். ஆனால், அவர்கள் இருவரும் தொடாத ஒரு துறையைப் பி. எல். சாமி மிகத் திறம்பட விளக்கியிருக்கிறார். எனவே, சங்கநூல் மாணவர்கள் சாமியின் நூலால் பெறும் பயன் சிறிதன்று. பழம் பாடல்களுக்குப் பொருள் விளக்கம் தேட நினைக்கின்றவர்களுக்கும், உரையாசிரியரின் ஆற்றல்களை அறுதியிட நினைக்கின்றவர்களுக்கும், சங்கநூற் பாடங்களைச் செப்பனிட நினைக்கின்றவர்களுக்கும், செடிச் செய்திகளை வரலாற்று முறையில் எழுத நினைக்கின்றவர்களுக்கும் இந்நூலாற் கிடைக்கும் பயன் பெரிது.

தாவரச் செய்திகள் பலவற்றையும் தமிழகத்தில் பல பாகங்களில் வாழ்ந்த புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். சேர நாட்டுப் புலவர்கள், பாண்டியநாட்டு மருதநிலச் செடிகளையும் பாடியிருக்கின்றனர். தத்தம் நாட்டுச் செடிகளை மட்டும் பாடினர் என்று கூறமுடியாது. தத்தம் நிலத்தில் மட்டும் காணும் செடிகளைப் 'பா'வில் பொதிந்தனர் என்றும்

கூறவியலாது. குறிஞ்சி பாடுவதில் வல்லவர்கள் மருத நிலச் செடிச்செய்திகளை நுட்பமாகக் கூறியுள்ளனர். எனவே, புலமைத்திறம் மிக்கவர்கள் அனைவரும் செடி கொடிகள் பற்றிய நுண் அறிவைப் பெற்றிருந்தனர் என்று கூறவியலும். இத்தகைய செய்திகள் திராவிடப் பழங்குடி மக்களாகிய தெலுங்கர், பைகர், தோடர் முதலியவர்களுக் கும் தெரிந்திருந்ததால் திராவிட இன மக்கள் அனைவருக் கும் இந்நூல் அறிவு சொந்தமாக இருந்தது என்று கூற வியலும். பச்சிலை மருந்தால் நோய் பலவற்றை வியக்கத் தக்க முறையில் மாற்றிவரும் இனம், திராவிட இனமாகும். சித்த வைத்தியமும், ஆயுர்வேதமும் இதற்குரிய சான்று கள். எனவே, செடிகொடிகளைப் பற்றிய நுண் அறிவை அவர்கள் பெற்றிருந்ததில் வியப்பொன்றுமில்லை. நுட்ப மான அறிவின்றி மூலிகைகளையும் கிழங்கு வகைகளையும் மலர்களையும் மருந்திற்காகப் பயன்படுத்தவியலுமா?

இந்நூலிற் காணும் செடிகொடிகள் பெரும்பாலும் தமி ழகத்திற் காணப்படுபவை. ஒன்றிரண்டு, இமயமலைச் சார லில் காணப்படுகின்றன. எனவே, தமிழிலக்கியம் தோன் றிய இடம் இந்தியநாடு. அதிலும் தென்னகம்தான் என்று தெளிவதற்கு இச்செய்திகள் உதவுகின்றன. திராவிடர்கள் மத்தியதரைக் கடலிடத்திலிருந்து வந்தனரா? அல்லது தென்னகத்தவரா? என்று தெளிய இத்தகைய செய்திகள் நேரடியாக உதவாவிட்டாலும் தமிழிலக்கியம் தோன்றியது தென்னகத்தில்தான் என்று உறுதியாகக் கூறமுடியும்.

திரு சாமி இயற்றியுள்ள இந்த நூலைப் படிக்கும் பொழுது இலக்கியத் திறனாய்வாளர் மனத்தில் எழும் ஒரு கேள்விக்கு மட்டும் விடைகூறி, என் முன்னுரையை முடிக் கிறேன். அறிவியற் செய்திகளைப் பொதிந்துள்ள இலக் கியம்தான் உயர்ந்த இலக்கியமா? அறிவியற் செய்திகள்

இல்லாத இலக்கியம் இலக்கியமாகாதா? இதற்கு விடை காண வேண்டுமாயின், இலக்கியத்திற்கும் அறிவியற் செய்திகட்கும் என்ன பொருத்தம்? எவ்வளவு பொருத்தம்? என்னும் வினாக்களுக்கு விடை கண்டால் பதில் இறுப்பது எளிது.

இலக்கிய ஆசிரியன் அறிவியலாளன் அல்லன். அவன் எழுதும் செய்யுட்கள் அறிவியலாளனின் ஆய்வுக் குறிப்புக்கள் அல்ல. படிப்பவர்களுக்கு இன்பம் தரும் பல உத்திகளுள் இயற்கை பற்றிய நுண்ணிய செய்திகளைச் செய்யுளுள் உரைப்பதும் ஒன்று. படிப்பவர்களின் மனச் சார்பு, படிக்கும் சூழ்நிலை ஆகியவற்றிற்கு ஏற்பவும், பாவின் நோக்கிற்கு ஏற்பவும் இவை இடம்பெறக்கூடும். ஒரு பாவில் அறிவியற் செய்திகள் குறைந்து ஏனைய இன்ப மூட்டும் உத்திகள் பெருகிக்காணின் அது இலக்கியத்தரத் தில் தாழ்ந்துவிடாது. அறிவியற் செய்திகள் மிகுந்து இன்பமூட்டும் உத்திகள் குறைந்துவிடின் அப்பாடல் தரம் தாழ்ந்துவிடும். எனவே, ஓர் இலக்கியத்தின் சிறுமை பெருமைகளை அறிவியற் கருத்துக்களின் சிறப்பால் மட்டும் அறுதியிடமுடியாது. ஏனைய இலக்கிய இயல்புகளுடன் நுணுகிய அறிவியற் கோட்பாடுகளும் காணப்படின் அவ் விலக்கியம் முன் இடத்தைப் பெறும். சங்க இலக்கியத்தில் பெரும் பகுதியும் இலக்கிய இன்ப உத்திகளுடன் நுண்ணிய அறிவியற் செய்திகளையும் சுவை குன்றாமற் கூறுவதால் நிலையான முன்னிடத்தைப் பெற்றுவிட்டன.

# முகவுரை

சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள சில செடிகொடிகளின் விளக்கமாக இந் நூல் வெளிவருகின்றது. சங்க இலக்கியத்தில் இருநூறுக்கு மேற்பட்ட செடிகொடிகளைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இச்செய்திகளைச் செடி நூலறிவைக் கருவியாகக் கொண்டு ஆராய்ந்து அவ்வப்போது செந்தமிழ்ச் செல்வியில் கட்டுரைகள் எழுதியுள்ளேன். சங்க இலக்கியத்தில் காணப்படும் செடிகளைப் பற்றிய விளக்கத்தை ஒரு நூலாக வெளியிட வேண்டுமென்று கழக ஆட்சியாளரவர்களும் சில அறிஞர்களும் கருத்துத் தெரிவித்தனர். அன்னார் கருதியதற்கு இசைந்தே இந்நூல் முதல் நூலாக வெளிவருகின்றது.

சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள மரஞ்செடிகொடிகளைச் செடிநூற்படி (Systematic Botany) எவை என அறுதியிட்டுக்கூற அவைகளைப் பற்றிச் சங்க நூல்களில் காணப்படும் செய்திகளே உதவுகின்றன. செடிகள் இயற்கை நிலையில் வாழுமிடம், வளரும் சூழ்நிலை ஆகியவற்றைத் திணையடிப் படையாக்ச் சங்க நூல்களில் பல பாடல்கள் விளக்குகின்றன. செடிகளின் வேர், இலை, பூ, காய் முதலியவைகளைப் பற்றிய செய்திகள் பல காணப்படுகின்றன. இச்செய்திகளைச் செடிநூலில் கூறப்பட்டுள்ள செய்திகளோடு ஒத்திட்டு ஆராய்ந்து பார்க்குங்கால் சங்க நூல்களில் சொல்லப்பட்ட செடிகள் எவை எனக் கண்டுபிடிக்க முடிகின்றது. சங்கப் புலவர்கள் உள்ளதை உள்ளவாறே கூறும் உளப்பாங்கு உடையவர் என்பதை யாவரும் அறிவர். உள்

ளதை உள்ளவாறே கண்டு அதில் காணப்படும் அடிப்படை ஒழுங்கை, உண்மையைக் காண்பதே அறிவியலின் குறிக்கோளாகுமெனக் கூறலாம். இல்லதைக் கூறும் உயர்வு நவிற்சியைச் சங்க நூல்களில் காண்பதரிது. ஆதலின் சங்க நூல்களில் காணப்படும் செய்திகளை அறிவியற் செய்திகளாகக் கொள்ளலாம். சங்க நூல்களில் காணும் செய்திகளை அறிவியலடிப்படையில் ஆராயுங்கால் சங்கப் புலவர்களின் இயற்கையோடு இயைந்த வாழ்வின் சிறப்பும் நுண்ணிய உணர்வும், திண்ணிய அறிவாற்றலும் விளங்குகின்றன.

சங்க நூல்களில் வழங்கிய பல மரஞ்செடிகொடிப் பெயர்கள் மறைந்துவிட்டன. சில மாறிவிட்டன. சில பெயர்கள் திரிந்து வழங்குகின்றன. நிகண்டுகளும் பிற்கால உரைகளும் ஓரளவு சங்கப் பெயர்களைக் கண்டுகொள்ள உதவினும் அவை பெரும்பாலும் மயங்கவைக்கின்றன. சங்க நூல்களிலும் பல செடிகளைப்பற்றி விளக்கம் காணப்படினும் ஒரு சில செடிகளைப்பற்றிச் சிறுகுறிப்புக்களே அருகிக் காணப்படுகின்றன. சில செடிகளைப்பற்றி வெறும் பெயர்களே காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, பாலை என்பது கொடியோ, மரமோ எனப் பிற்காலத்தார் மயங்கினர். ஆனால் சங்க இலக்கியத்தில் ஒரே ஒரு பாடலில் பாலையில் தனித்த உருவுடைய காயைப்பற்றி ஒரே ஒரு செய்தி வருகின்றது. இச்செய்தியே பாலை என்பது ஒரு மரமென்பதையும், இன்ன மரமென்பதையும் கண்டு பிடிக்க உதவுகின்றது. சங்க இலக்கியத்தில் செடிகளைப் பற்றிய செய்திகளை அரிதின் முயன்று ஆராய்ந்து ஐந்தாறு செடிகளைத் தவிர ஏனைய எல்லாச் செடிகளையும் செடிநூற்படி எவை எவை எனத் தெளிந்து கண்டுள்ளேன். இந்நூலில் ஐந்து அகத்திணைச் செடிகளும், சில அழகிய நிறமுள்ள பூச்செடி

களும், மண்ணுள்ள செடிகளும் விளக்கப்படுகின்றன. பிற செடிகொடிகள் பின்னர் வெளியிடப்பெறும் நூல்களில் விளக்கப்படும்.

இந்நூலை வெளியிடுவதுபற்றிக் கழக ஆட்சியாளர் சுப்பையாபிள்ளை யவர்கள் என்னொடு பேசியபோது செடிகளின் விளக்கத்தைத் தெள்ளிதின் உணர நிறப்படங்கள் இன்றியமையாதன எனக் கூறினேன். நிறப்படங்களை வெளியிடுவதற்கான உழைப்பையும் செலவையும் பொருட்படுத்தாமல் அவர் வெளியிட ஏற்றுக்கொண்டார். மாண்புமிகு தமிழகக் கல்வியமைச்சர் கூறியபடி இத்தகைய நூலை அதுவும் நிறப்படங்களுடன் வெளியிடத் திரு சுப்பையா பிள்ளையவர்களால்தாம் முடியும் என்பதில் சிறிதும் ஐயமில்லை என்பதை எண்பிக்க இந்நூலே சான்று. அவருடைய அயராத் தூண்டுதலும் தளரா முயற்சியுமே இந்நூலை எழுத என்னை ஊக்குவித்தது. இந்நூலுக்கான பல நிறப்படங்களை வரைந்து தருவதற்குப் புதுவையில் உள்ள பிரெஞ்சு இந்திய ஆராய்ச்சிக் கழகத்தின் ஆராய்ச்சியாளரும், என்னுடைய நண்பருமான பட்டாபிராமனவர்கள் செய்த உதவிக்கு எனது உளங்கலந்த நன்றி. இவ்வாராய்ச்சிக் கழகத்தின் தலைவர் பில்லியோசா (Dr. Filliozat) அவர்கள் அவ்வப்போது நான் வேண்டிய உதவிகளை ஆராய்ச்சிக் கழகத்திலிருந்து தடங்கலின்றி அளிக்க வைத்தார். அப்பெரியாருக்கு எனது நன்றி. இந்நூலுக்கு அணிந்துரை எழுதிய மாண்புமிகு கல்வி அமைச்சர் நெடுஞ்செழியனாருக்கு எனது மதிப்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். முன்னுரையினை எழுதிய டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்களுக்கும் எனது நன்றி.

இந்நூலைப் படித்தவர்கள் ஓரளவு சங்க இலக்கியத்தின் அருமை பெருமைகளை உணர்வரேல் அதுவே இந்நூலை எழுதியதால் அடைந்த பெரும்பயன் என்று கருதுவேன்.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச்செய்யு மாறே"

என்ற திருமந்திர மொழியைக் குறிக்கோளாகக் கொண்டு எழுதிய இந்நூலைத் தமிழுலகம் வரவேற்குமென நம்புகிறேன்.

பி. எல். சாமி.

# உள்ளுறை

## எடுத்தாளப்பெற்ற மேற்கோள் நூல்கள்


அகநானூறு
ஐங்குறுநூறு
ஐந்திணை எழுபது
ஐந்திணை ஐம்பது
கலித்தொகை
கல்லாடம்
குணநாற்பது
குறிஞ்சிப் பாட்டு
குறுந்தொகை
சிலப்பதிகாரம்
சிறுபாணாற்றுப்படை
சீவக சிந்தாமணி
சூடாமணி
சேந்தன் திவாகரம்
திணைமாலை நூற்றைம்பது
திணைமொழியைம்பது
திருமுருகாற்றுப்படை
தேவாரம்
தொல்காப்பியம்
நளவெண்பா
நற்றிணை
நன்னூல் மயிலைநாதருரை
நாலடியார்
பதிற்றுப்பத்து
பரிபாடல்
பிங்கலந்தை
புறநானூறு
பெருங்கதை
பெரும்பாணாற்றுப்படை
பொருநராற்றுப்படை
மணிமேகலை
மதுரைக் காஞ்சி
விறலிவிடு தூது

Achart A. Dj.: Quince Cents Plants

Alan Butterworth: Some Madras Trees

Bailey L. H.: Manual of Cultivated Plants

Bor. N. L.: Manual of Indian Forest Botany.

Coimbatore Gazetteer.

Cooks T.: Flora of Bombay

Cowen D. V.: Flowering Trees and Shrubs in India

Distriech Brandis: Indian Trees

Dutta A. .C: A Text Book of Botany

Dymock, Warden and Hooper's Pharmographica Indica

Elwin V.: Myths of Middle India, Songs of forest

A Manual of Indian Timbers

Gamble J. S.: Flora of the Presidency of Madras.

Gupta R. K. et M. Marl - lange: Le Jardin Botanique Pondichary

Hooker J. D.: The Flora of British India.

Kozhikode Gazetteer

Blatter Ethelbert and Millard W. S. 1954: Some beautiful Indian Trees

Maccann C: Trees of India

Madurai Gazetteer

Quilon Gazetteer

Randhawa M. S.: Beautiful Trees and gardens, Flowering Trees in India

South Arcot Gazetteer

Subramanyam K.: Aquatic Angiosperms

Tanjore Gazetteer

Troup R. S.: The Silviculture of Indian Trees


---

# சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்

## 1. சங்க இலக்கியத்தில் செடிநூற் செய்திகள்

---

சங்க இலக்கியம் தமிழ் நாட்டின் மரஞ்செடிகொடிகளைப் பற்றி அறிய உதவும் ஓர் அரிய பெரிய கருவூலமாகும். பல செடி கொடிகளின் வேர், அடிமரம், பட்டை, இலை, பூ, பூந்தாது, காய், பழம், விதை ஆகியவை பற்றிய தெளிவான குறிப்புக்கள் சங்க நூல்களில் பல விடங்களில் காணப்படுகின்றன. மற்றும் செடி நூலார் கண்டு விளக்கிய 'புல்லுருவித் தன்மை' (Parasitism), நிழலில் வளரும் செடிகளின் இலைகள் இலைப்பச்சை இழந்து விளறிப்போதல் (Etiolation), இரவு மகரந்தச் சேர்க்கை (Night Pollination), பூவிதழ்கள் ஒன்றோடொன்று பொருந்தும் அமைப்பு (Aesitivation) போன்ற நுட்பமான அறிவியற் செய்திகளும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. மரஞ் செடி கொடிகளின் வேர்களைப்பற்றிச் சில செய்திகள் காணப்படுகின்றன. செடி நூலில் (Botany) பாலையில் வளரும் மரங்களுக்கு வேர்கள் நீண்டிருக்குமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. வேர்கள் நீண்டிருந்தால்தான் மிக ஆழத்தில் இருக்கும் நீரை உறிஞ்ச முடியும். மற்றும், இலை தடித்திருப்பது, இலை சிறுத்திருப்பது, தண்டின் மேல் தோல் தடித்திருப்பது என்பன போன்று வளரும் இடங்களுக்கேற்ற மாற்றங்களை (Adaptations) ப்

பாலை நிலைக்கு (Xerophytic conditions) ஏற்ப மரஞ்செடி கொடிகள் அமைத்துக் கொள்ளுமென்று செடி நூல்களிற் சொல்லப்படுகின்றது. "அளிநிலை பெறாஅ தமரிய முகத்தாள்" எனத் தொடங்கும் அகநானூற்றுப் பாடலின் உரையில் பாலை மரங்களின் வேர்கள் மிக நீண்டும், வேர் நுனி குறுகியும் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. பாலைக்கு மாறாக நீர்வாழ் செடிகளின் வேர்கள் நன்றாக வளர்ச்சி பெறாமல் (undeveloped) கிழங்குபோல் இருக்குமென்று செடி நூல் கூறுகின்றது. மற்றும், இலை மிக அகலமாகவும், இலைக்காம்புகளின் தண்டு குழாய்போன்ற துளையையும் (Fistuler), நார்களையும் உடையதாய் இருக்குமென்றும் கூறப்பட்டுளது. கிழங்கு வேர்களைப்பற்றிச் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது.

"கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்
நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கின்"

(அகம், 176)

"தேஎ ரும்பற் கிழங்கொடு பெறா உம்"

(புறம், 176)

இப்பாடல்களிலுள்ள தாமரை, அல்லி ஆகிய நீர்வாழ் செடிகளின் வேர் வருணனை செடி நூல் விளக்கத்திற்கு மிகவும் ஒத்திருக்கின்றது. இனி,

"...........கொழுங்கொடி வள்ளிக்
கிழங்குவீழ்க் கும்மே"

(புறம், 109)

"கிழங்கு கீழ்வீழ்ந்து தேன்மேற் றூங்கிச்"

(நற்றிணை, 328)

"வள்ளி கீழ் வீழா"

(கலித்தொகை, 39)

என்ற பாடல்களில், வள்ளிக்கொடி, கிழங்காக வேர் வீழ்ப்பது *(strike) குறிக்கப்பட்டிருக்கின்றது. இவ்

வேர்கள் செடிக்கு உணவு தேடி வைக்கப் பயன்படும் வேர்களாம்.

வேர்களில் சில ஆகாயத்தில் தொங்கிக் கொண்டிருக்கும். இவைகள் முக்கியமாகக் கிளைகளைத் தாங்கப் பயன்படுகின்றன. இவைபோன்ற வேர்களைத் 'தாங்கு வேர்கள் (Proproots)' என்று செடி நூலில் அழைப்பர். கிளைகளிலிருந்து எழும் வேர்களைத் 'தாங்கு வேர்கள்' என்றும் அடித்தண்டுகளிலிருந்தே (Stem) எழும் வேர்களை 'stiltroots' என்றும் அழைப்பர்.

"பல்வீழ் ஆலம் போல்"

(அகம், 70)

"முழுமுத லொலிந்த கோளியா லத்துக்
கொழுநிழல் நெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்கு"

(புறம், 58)

"நெடுவீ ழிட்ட கடவு ளாலத்து"

(நற்றிணை, 243)

முழுமுதல் என்னும் அடிமரம் போயபின்னும் பெருங் கிளைகளை 'விழுது' தாங்குகிறது. 'கடவுளாலம்' தான் செடி நூலில் 'Ficus religiosa' என்றழைக்கப்படுகின்றது.

"வேலி னிற்றித் தோயா நெடுவீழ்
வழிநா ளூசலிற் கோடை தூக்குதொறும்"

(நற்றிணை, 162)

"குறுங்கா லிற்றிப் புன்றலை நெடுவீழ்"

(அகம், 57)

"புல்வீ ழிற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியிற் றோன்று நாடன்"

(குறுந்தொகை, 106)

"ஒல்குசினை யிற்றி யொருதனி நெடுவீழ்"

(அகம், 345)

இச்சியின் விழுதுபற்றிக் கூறப்பட்டிருப்பதோடு அவ் விழுது கோட்டைச் சுவர்போன்ற இடங்களில் வளரும் போது தட்டையாய்ப் பரந்து அகலமாக வளருவதால் அக்காட்சி அருவி பாய்வதற்கு ஒப்பிடப்பட்டிருப்பதும் ஓர்ந்து இன்புறத்தக்கது. தாழையின் விழுது பற்றிய குறிப்புக்கள் சங்கநூல்களில் காணப்படுகின்றன.

"வீழ்தாட் டாழைப் பூக்கமழ் கானற்"

(நற்றிணை, 78)

"வீழ்தாழ் தாழை யூழுறு கொழுமுகை"

(குறுந்தொகை, 228)

"வீழ்தாழ் தாழை"

(பட்டினப் பாலை 84, கலி. 131, அகம் 20)

தாழஞ் செடியின் (Pandanus) அடிப்பாகத்தில் காணப் படும் ஆணிவேர் தரையில் நன்கு ஊன்றுதிருப்ப தாலும், தாழஞ் செடியின் மேல் பாகம் பளுவாக இருப்பதாலும் செடியே கவிழ்ந்துவிடும். ஆகையால் செடி கீழே விழாதிருக்கப் பக்கத்தில் கிளை வேர்கள் எழுந்து வீழ்ந்து தரையில் செடியை ஊன்றுகின்றன. கடலில் அலைகள் (High tide) மேலெழும்பி மோதும் போது தாழஞ்செடி தண்ணீரில் மூழ்கினாலும் அசைந்து கொடுக்கும். ஆனால் வேரொடு பிடுங்கப்படாது, கிளை வேர்களினால் தன்னைக் காப்பாற்றிக் கொள்கிறது. அலை திறைந்துவிட்டபின் ஆணி வேரின் அடியில் மணல் பறிக்கப்பட்டிருந்தாலும் செடியை விழாது கிளை வேர்கள் காப்பாற்றுகின்றன. இது செடி நூலில் கூறப்பட்ட செய்தியாகும்.

"அழுவ நின்ற வலர்வேய் கண்டல்
கழிபெயர் மருங்கி னொல்கி யோதம்"

(குறுந்தொகை, 340)

தாழை கழியில் ஓதம் மிகும்பொழுது உயர்ந்தும், தாழ்ந்தபோது தாழ்ந்தும் பெயர்தலைப்போல் என்று உரை கூறப்பட்டுள்ள குறுந்தொகைச் செய்யுளின் செய்தி செடி நூலில் காணப்படும் செய்தியைக் குறிப்பாக உணர்த்துகின்றது.

புல்லுருவித்தன்மை :

புல்லுருவித்தன்மை (Parasitism) என்பது சில செடிகளின் வேர்கள் பிற செடிகளின் தண்டு (stem) களில் ஊடுருவிப் பாய்ந்தோ, அல்லது வேர் (root) களில் புகுந்தோ அச் செடிகள் ஆக்கும் உணவைக் கவரும் திருட்டுத் தொழிலைக் குறிக்கும். இப்புல்லுருவிகளை வேர்ப்புல்லுருவி, தண்டுப்புல்லுருவி என்று இரண்டு வகையாகப் பிரிப்பர். புல்லுருவிகளில் உணவில் ஒரு பாகத்தை மட்டுமே ஆக்கிக்கொண்டு மீதியைப் பிற செடிகளிலிருந்து கவருபவைகளை 'அரைப் புல்லுருவிகள்' (Semi Parasites) என்று கூறுவர். இம்முறையான 'பாதி வேர்ப்புல்லுருவி' (Partial root Parasites) என்று கருதக்கூடியது இந்தியாவிலே உள்ள மரங்களில் சந்தன மரம் ஒன்றுதான் என்று செடி நூலோர் (Botanists) கருதுகிறார்கள்.

> "குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
> நறுங்கா ழாரஞ் சுற்றுவன வகைப்ப"
>
> (நற்றிணை, 5)

இவ்வரிகளுக்கு உரையாசிரியர் விளக்கம் மிக அருமையான நுண்ணிய உரையாகும்.

> "ஏனை மரங்கொடிகளிவற்றின் வேர் சந்தன வேரோடு முயங்காதவழி தனித்துள மரம் நறுமணமெய்தாதது கண்கூடாகக் காண்டலால் ஈண்டு நறைக்கொடி சுற்றுவது கூறி நறுங்காழாரம் என்றார்"

வைரம் பாய்ந்தால்தான் சந்தனம் நறுமணமெய்தும். வைரம் பாய சந்தன மரம் பிற மரங்களின், கொடிகளின் வேர்களிலிருந்து உணவைப் பெறவேண்டும். ஆகையால் பிற மரங்களோ கொடிகளோ அருகில் இல்லாவிடில் சந்தன மரம் வைரம் பாயாது, நறுமண மெய்தாது. 'வைரம்' என்பதை 'Heart-Wood' என்பர் தனி மரம் வைரம் பாயாது, நறுமணமும் எய்தாது.

தண்டு (Stem):

அடிமரத்தின் (Stem) உருவம், நிறம், மற்றும் பட்டையின் (Bark) தன்மை முதலிய செய்திகள் எண்ணற்ற இடங்களில் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டிருக்கின்றன.

அடிமரத்தின் நிறம்:

"செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுப"

(குறுகு, 202)

"புறவுப் புறத்தன்ன புன்கா லுகாஅய்க்"

(குறுந்தொகை, 274)

"..........................................ஓமைப்
பெரும்பொளிச் சேயரை நோக்கி..."

(அகம், 397)

ஆகிய பாடல்களில் நிறம் கூறப்பட்டிருக்கின்றது.

பட்டையின் தன்மை:

"பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்டு
உடும்படைந் தன்ன நெடும்பொரி விளவின்"

(நற்றிணை: 24)

என்ற பாடலில் 'உடும்பு செறிந்தாற்போலப் பொரிந்த அடிமரம்' என்று உரைக்கப்படுகின்றது. இதையே 'ஆலன் பட்டர்வொர்த்' என்பார் பின்கண்டவாறு குறிப்பிடுகிறார் ;-

"The bark is dark brown, very rough, longitudinally cracked or channelled.
It often falls leaving yellow or white patches".
—*Alan Butterworth*

On 'Aegle marmelos' in his book "Some Madras Trees".

கருஞ்சிவப்புப் பட்டை, மஞ்சள் நிறப் பாகத் தொடு உடும்பின் தோலை ஒத்திருப்பதில் வியப் பொன்றுமில்லை. மற்றும் வேம்பு, வாகை, இலந்தை முதலிய பல மரங்களின் பட்டைகளைப்பற்றிய செய்தி களையும் காணலாம்.

முள்ளுடைய அடித்தண்டு :

*"முள்ளரைத் தாமரை புல்லிதழ் புரையும்"*(பெரும்பான்:115)
*"முளிகொடி வலந்த முள்ளரை யிலவம்"* (நற்றிணை: 105)
*"களரி யோங்கிய கவைமுட் கள்ளி"*
(நற்றிணை, 105)
*"முட்காற் காரை முதுபழ னேய்ப்பத்"*
(புறம், 258)

குறிய அடிமரம் :

*"புல்லரை யிரத்திப் பொதிப்புறப் பசுங்காய்"*
(நற்றிணை, 113)

பெருத்த அடிமரம் :

*"பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்"*
(நற்றிணை, 337)

முழவுபோலும் உருவமுள்ள அடிமரம் :

*"முழாவரைப் போந்தை பொருந்தி நின்று"*
(புறம், 85, 375)

கடற்கரைகளில் பனைமரத்தின் அடிமரம் மத்தளம் போல் இருக்குமாம். தாழையின் அடித்தண்டு சொர சொரப்பான தண்டுடையதாய் இருக்கும் எனக் கூறப் படுகின்றது.

"உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுதல்
அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை"

(நற்றிணை, 235)

"இறவுப் புறத்தன்ன பிணர்படு தடவுமுதல்"

(நற்றிணை, 19)

என்ற இப்பாடல்களில் தாழையின் வட்ட வட்டமாக வுள்ள சொரசொரப்பாயிருக்கும் பாகத்தையுடைய தண்டு அதேபோன்ற இரு மீனின் புறத்திற்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது.

Pandanus: "The trunk is covered with light brown skin in wavy rings and the branches are thickly hung with sheathing dead leaves"

—*Alan Butterworth.*

என்று 'ஆலன் பட்டர்வொர்த்' என்பவரும் தண்டில் வட்ட வட்டமாயிருக்கும் சொரசொரப்பான பாகத்தைக் குறிப்பிடுவதைக் கவனிக்கவும்.

நீர் வாழ் செடிகளுக்குத் தண்டுகள் குழாய்போல் (fistular) துளையுடையனவாய் இருக்குமென்பதும் செடிநூலில் கூறப்படும் அடிப்படை உண்மையாகும்.

"கணைக்கா லாம்ப லமிழ்து நாறு தண்போது"

(நற்றிணை, 230)

"நீர்வள ராம்பற் தூம்புடைத் திரள்கால்"

(நற்றிணை, 6)

"கழைகண் டன்ன தூம்புடைத் திரள்கால்
...............................................
பூத்த தாமரை புள்ளிமிழ் பழனத்து"

(அகம், 176)

"வன்தூம்பு வள்ளை மயங்கித் தாமரை"

(அகம், 46)

என்ற பாடல்களில் அல்லி, தாமரை, வள்ளை முதலிய நீர்வாழ் செடிகளுக்குத் துளையுடைய தண்டு (தூம்புடைத் திரள்கால், கணைக்கால்) உண்டு என்று காட்டப்பட்டிருக்கின்றது.

இலை :

இலைகளின் உருவம், மென்மை முதலியனவும், மற்றும் இலைகளின் ஓரம், நிறம் முதலியனவும் சங்க நூல்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. புன்க மரத்தின் இலை அழகாகவும் மென்மையாகவும் இருப்பது ஒரு பாட்டில் குறிக்கப்பட்டிருக்கிறது,

"பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி"

(நற்றிணை, 9)

புன்கை 'Pongamia Glabra' என்று ஆங்கிலத்தில் அழைப்பர். 'Glabra' என்பதற்குப் பொருள் வழ வழப்பான தன்மை என்பதாம். 'Pongamia' எனும் சொல்லே தமிழ்ச்சொல் 'புன்கனின்' மறு உருவந்தான்.

புன்னையின் இலை கரும்பச்சை நிறமாய், பளபளப்பாய், பார்ப்பதற்கு அழகாக இருக்கும். இதை இலத்தீனில் 'Calophyllum Inophyllum' என்று அழைப்பர். 'Calophyllum' என்பதற்கு அழகிய இலை என்று பொருள். இதன் அழகை உணர்ந்துதான் நம்முடைய கவிஞர்கள் இதனைப் பலவிடங்களில் பாராட்டியுள்ளனர்.

"நீலத் தன்ன பாசிலை யகந்தொறும்"

(நற்றிணை, 249)

" மின்னிலைப் பொலிந்த விளங்கிணர வீழ்பொற்
..............................................—
" புன்னையங் கானல்"..........................

(அகம், 80)

"பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன"

(அகம், 244)

மேற்சொன்ன வரிகளில் புன்னையிலையின் நிறம் பளபளப்பான தன்மை முதலியன கூறப்படுகின்றன.

நீர்வாழ் செடிகளின் இலைகள் அகலமாகவும், மேல் தோல் மெழுகு பூசப்பட்டாற் போன்றும் தோன்று மெனச் செடி நூல் சொல்கின்றது. நீர்ப்போக்கு மிகும் திருப்பதற்காக (Transpiration) இலைகள் அகலமாக இருக்கவேண்டும்.

நீர்ப்போக்கு நடத்தும் இலைத்துளைகள் நீரால் மூடப்படாதிருப்பதற்காக, இலையின் மேல் நீர் நிற்காத படி, மெழுகு பூசப்பட்டாற் போன்றதொரு தோலால் மூடப்பட்டிருக்கின்றன. இத் தோலை 'Waxy-cuticle' என்று செடி நூலார் கூறுவர்.

"முயப்பிடிச் செவியி னன்ன பாசடை"

(நற்றிணை, 230)

"களிற்றுச் செவியன்ன பாசடை மருங்கிற்

.........................................

பூத்த தாமரை புள்ளிமிழ் பழனத்து"

(அகம், 176)

"விளக்கி னன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச் செவியன்ன பாசடை தயங்க"

(நற்றிணை, 310)

என்ற வரிகளில் ஆம்பல், தாமரை இவற்றின் இலைகள் வருணிக்கப்படுகின்றன. யானைக் காதின் அகலம், கரு நிறம், வழவழப்பான பரப்பு, கனம் ஆகியவைகள் தாமரை இலையின் அகலம், கரும்பச்சை நிறம், வழவழப் பான பரப்பு இவைகளுடன் ஒத்து வருவது கவனிக்கத் தக்கது.

ஆம்பல் போன்ற நீர்வாழ் செடிகளுக்கு வெப்பம் மிகவும் வேண்டும். ஆகையால் இச் செடிகளுக்கு இலைகளின் அடிப்பாகம் கூடுதல் வெப்பத்தைக் கவர மேற்புறத்தை விட மிகவும் கறுப்பாக இருக்கும் என்று செடி நூல் கூறுகின்றது.

"நெடுநீ ராம்ப லடைபுறத் தன்ன
கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை"

(குறுந்தொகை, 352)

வௌவாலின் இறக்கை ஆம்பலிலையின் அடிப்புறத்தைப் போலிருக்கின்றது. ஆம்பலிலையின் அடிப்புறத்தில் காணப்படும் நரம்புகள், அடிப்புறத்தின் மிகுந்த கருமை — இவை வௌவாலின் இறக்கையில் காணப்படும் கருமை, நரம்புகள் ஆகியவற்றிற்கு உவமைப்படுத்தப்பட்டிருப்பது மிகவும் பொருத்தமானதாகும்.

"வேலி னிற்றித் தோயா நெடுவீழ்
வழிநா ளூசலிற் கோடை தூக்குதொறும்"

(நற்றிணை, 162)

மேற்குறித்த பாடலில் இச்சியின் இலை வேலின் உருவத்தை ஒத்திருக்கின்றது எனச் சொல்லப்பட்டிருக்கின்றது.

தாழஞ் செடியின் இலைகள் வாள்போன்ற உருவமுடையன. ஓரத்தில் முட்களையுடையன.

"சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை"

(நற்றிணை, 19)

"அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை"

(நற்றிணை, 235)

"சுறவு மருப்பன்ன முட்டோ டொசிய"

(நற்றிணை, 131)

பல பாடங்களில் தாழையின் வாள் போன்ற இலையின் உருவையும், அதன் இரு ஓரங்களிலும் முட்பற்கள் இருப்பதையும் சேர்த்துத் தாழை மடலைச் சுறு மீனின் கொம்புடன் உவமித்துக் கூறப்பட்டிருக்கின்றது.

"The sword shaped leaves bearing sharp teeth along the edges"

என 'ஆலன் பட்டர்வொர்த்' சொல்வதை ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

அரம்போன்ற ஓரமுடையது வேப்பிலை. இதைச் செடி நூலில் 'Serrate Margin' என்றழைப்பர். 'Serrate' என்ற சொற்குப் பொருள் 'அரத்தின் தன்மை' என்பதாம். இதையே தமிழ் நூல்களில் குறித்திருப்பதைக் காணலாம்.

"அரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும்"
(பொருநராற்றுப்படை வரி, 144)

"அரவாய்க் கடிப்பகை யையவிக் கடிப்பகை"
(மணிமேகலை, 7: 73)

"அயவெள் ளாம்ப லம்பகை நெறித்தழை"
(குறுந்தொகை, 293)

"கழனி யாம்பன் முழுநெறி பகைத்தழை"
(அகம், 156)

"அம்பகை நெறித்தழை யணிபெறத் தைஇ';
(நற்றிணை, 96)

செடிநூலில் ஆம்பல் இலையின் ஓரத்தை 'Dentate and Sinuate' என்று சொல்வர். இதைத்தான் 'பகை நெறித் தழை' என்னும் தொடர் குறிக்கின்றது.

செடிகள் நிழலிலே இருந்தால் இலைகளிலுள்ள இலைப்பச்சை (Chlorophyll) அழிந்து போய்விட இலை

வெண்மை அடையும். இதைத் தாவர நூலில் 'Etiolation' என்பர். இதை,

"நீணிழற் றளிர்போ னிறனூழ்த்த லறிவேனும்"
(கலித்தொகை, 20, 17)

என்று கூறியிருக்கின்றார்.

பூ :

மலர்களின் கூட்டம், நிறம், உருவம், அமைப்பு ஆகியவைகள் பல இடங்களில் பொருத்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. மலர்கள் தனித்தும் தோன்றலாம். அல்லது கொத்துக் கொத்தாகவும் காணப்படலாம். இம்மாதிரிக் கொத்துக்கு 'Infloresence' என்று செடி நூலில் பெயர் கூறுவர். இதையே தமிழ் இலக்கியத்தில் 'இணர்' அல்லது 'தொடை' என்பர். புன்னை, கடம்பு, வெப்பாலை, கொன்றை முதலிய பல மரங்களும் செடிகளும் 'இணர்' உடையனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

"கொடிறுபோல் காய வாலிணர்ப் பாலை"
(நற்றிணை, 107)

"மின்னிலைப் பொலிந்த விளங்கிண ரவிழ்பொற்
றண்ணறும் பைந்தா துறைக்கும்
புன்னையங் கானல்..........."
(அகம், 80)

"பொன்செருடர்ந் தன்ன தகைய நன்மலர்
கொன்றை யொள்ளிணர் கோடுதொறுந் தூங்க"
(நற்றிணை, 221)

"நல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்"
(அகம், 202)

பூக்களின் உருவம்—புன்கு வறுத்த பொரி போலவும், அடும்பின் பூ (முசல்காதுக்கீரை) மணி போலவும்

(Companulate) புன்னைப் பூ சிட்டுக்குருவியின் பொரித்த பொரித்த முட்டை போலவும், முருக்கரும்பு இரத்தம் தோய்ந்த புலி நகம் போலவும், மகிழம்பூ தேர்ச்சக்கரம் போலவும் இருக்கின்றனவென்று கூறப்பட்டுள்ளன.

"பொரியுரு வுறழப் புன்கு பூவுதிர"

(கலி, 33)

"மானடி யன்ன கவட்டிலை யடும்பின்
தார்மணி யன்ன வொண்பூக் கொழுதி"

(அகம்)

"உள்ளூா குரீஇக் கருவுடைத் தன்ன
பெரும்போ தவிழ்ந்த கருந்தாட் புன்னை"

(நற்றிணை, 231)

"உதிரந் துவறிய வேங்கை யுகிர்போல்
எதிரி முருக்கரும்ப வீர்ந்தண் கார்நீங்க"

(ஐந்திணை ஐம்பது)

"பைங்கண் வல்லியங் கல்லளைச் செறிய
முருக்கரும் பன்ன வல்லுகிர் வயப்பிணவு"

(குறுந்தொகை)

"ஓடு தோக்கான் மலர்ந்தன வகுள முயர்..."

(சிந்தாமணி)

ஒலிக்கும் மணிபோன்ற உருவுடைய பூவை உடையதாக அடும்புக்கொடி கூறப்பட்டிருக்கிறது. அடும்புக்கொடி தற்காலம் முசல் காதுக்கீரை என்றழைக்கப்படுகிறது. செடி நூலில் இதன் பெயர் 'Ipomea Biloba'. மணிபோன்ற உருவத்தைச் செடி நூலில் 'Companulate' என்பர். சக்கரம் போன்ற உருவமுடையது மகிழம்பூ. இதே பொருளில்தான் செடி நூலில் இவ்வுருவத்தை 'Rotate' என்பர். அரங்காச்சாரி அவர்களும், தான் எழுதிய செடி நூற் புத்தகத்தில் 'சக்கிராகாரம்' என்று இதை அழைக்கின்றார்.

பூ நிறம் :

சிவப்பு நிறமுடையனவாக கவிர், முருக்கு, முள்ளிலவு முதலிய பல மரமுஞ் செடிகளும் கூறப்பட்டுள்ளன. நீல நிறமுடைய பூக்கள் காயா (காசான்), நீர் முள்ளி (முண்டகம்), நொச்சி ஆகியவைகளுக்கு இருப்பதாகக் கூறப்பட்டுள்ளன. வெண்மை நிறப் பூக்கள் பாதிரி, புன்னை, பகன்றை, வெண்கடம்பு ஆகியவைகளுக்கு இருப்பதாகக் கூறப்பட்டுள்ளன. பூ நிறம் கூறப்படாத செடிகள் மிகச் சிலவே. மகரந்தம் (Pollin) தாது என்று இலக்கியத்தில் பயிலுகின்றது. புன்னையின் தாது பொன்னிறமாயிருக்குமென்றும், தாழையின் தாது விழுந்து கிடப்பது மகளிருடைய வளையல்கள் உடைந்தாற்போல் இருக்குமென்றும் கூறப்பட்டிருக்கின்றது. மற்றும் அல்லி, தாமரை, முருக்க மரம் இவைகளின் தாதும் வருணிக்கப்பட்டிருக்கின்றது.

*"ததர்பிணி யவிழ்ந்த தாழை வன்புதர்*
*தயங்கிருங் கோடை தாக்க நுண்டாது*
*வயங்கிழை மகளிர் வண்டிற் றூஅங்"*

*(நற்றிணை, 266)*

*"பொன்னி னன்ன நுண்டா துறைக்கும்"*
*(நற்றிணை, 178,278)*

மகரந்தச் சேர்க்கை : (Pollination)

மகரந்தத்தைச் சேர்த்து அதைப் பயன்படுத்தித் தேன் கூடு அமைத்தலைத்

*"தாமரைத் தண்டா தூதி மீமிசைச்*
*சாந்திற் றொடுத்த தீந்தேன் போல"*

*(நற்றிணை, 1)*

என்ற பாடல் குறிப்பாக உணர்த்துகின்றது.

மகரந்தச் சேர்க்கையின் வெளிச் செய்கை (External process of Pollination) ஒரு நற்றிணைப் பாடலில் அழகாக வருணிக்கப்பட்டுள்ளது. நறவம் என்பது ஒரு கொடி. அதன் மலர் வெண்மை நிறமாயிருக்கும். சிவப்பு வரிகள் வெண்மை நிறப் பூவிதழில் வெள்ளிய சங்கின்மேல் சிவந்த அரக்கை ஈர்த்தாற் போல் இருக்கும். இவ்வரிகள் தேனிருக்குமிடத்தைப் பூச்சிகளுக்குச் சுட்டிக்காட்டுவதற்கு அமைந்திருப்பனவாகச் செடி நூலாசிரியர்கள் சொல்வர். மற்றும் நல்ல மணமுடையது அம்மலர். மலரின் அழகினாலும், மணத்தாலும் ஈர்க்கப்பட்ட வண்டு, வரிகளின் வழியே சென்று தேனை உறிஞ்சித் திரும்புகின்றது. அப்போது அதன் உடல் பொன்னிறமாகக் காணப்படுகின்றது. கழிநிறமாக இருந்த வண்டு பூவில் நுழைந்து வெளியே வந்தபின் பொன்னிற மகரந்தம் பூசப்பட்டுப் பொன்னிறமாகிறது. இஃது உரைகல்லில் பொன்னைத் தேய்த்தாற்போலிருக்கின்றது என்று உவமிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வண்டு பிறிதொரு மலரை நாடும் போது மகரந்தச் சேர்க்கை நன்றாக நடைபெறுவதில் யாதொரு வியப்புமில்லை.

"அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன
செவ்வரி யிதழ் சேணுறு நறவி(ன்)

(நற்றிணை, 25)

"நறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப்
பொன்னுரைக் கல்லி னன்னிறம் பெறூஉம்"

(நற்றிணை, 25)

மேற்சொன்ன பாடல்களில் நறவம் பூவும், வண்டு மகரந்தம் பூசப்படுதலும் அழகாக வருணிக்கப்பட்டிருக்கின்றன.

தேன் :

தேனுடையதாகப் புன்னை, பீர்க்கு, வெண்கடம்பு முதலிய பல செடிகளின் பூக்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் குறிஞ்சிப் பூவில் மட்டும் தேன் மிகவும் காணப்படுமென்று கூறப்பட்டுள்ளது.

"கருங்காற் குறிஞ்சி மதனில வான்பூ
நாறுகொள் பிரச மூறுநா டற்கே"

(அகம்)

மணம் :

மணமுடையதாகப் பல மலர்கள் கூறப்பட்டுள்ளன. ஆனால் கரும்பின் பூ மட்டும் மணமற்றதாகக் கூறப்படுகின்றது. இது செடி நூலிலும் ஒப்புக்கொள்ளப்பட்ட செய்தி. புல்போன்ற செடிகளின் பூக்களில் மணமிருப்பதில்லையென்று செடி நூல் கூறுகின்றது.

"தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்
நாறா வெண்பூக் கொழுதும்"

(குறுந்தொகை, 85)

இரவு மகரந்தச் (Night Pollination) சேர்க்கையைக் குறிப்பாக ஒரு பாட்டினால் உணரலாம்.

"வயல்வெள் ளாம்பற் சூடுதரு புதுப்பூ
......................................
....................................
நெடுநீர்ப் பொய்கை நடுநா ளெய்தித்
தண்கமழ் புதுமல ரூதும்
வண்டென மொழிப மகனென் னோரே"

(பொய்கையில் நடுயாமத்தில் தண்ணிதாய் நறுமணங் கமழும் புதிய மலரிலே சென்று தேனுண்ணும்

வண்டெனச் சொல்வாரல்லாமல்—உரை) ஆம்பல் போன்ற சில நீர்வாழ் செடிகள் இரவில் மலரும் வழக்கமுடையன. இரவில் மலரும் பூக்கள் பூச்சிகளின் பார்வைக்கும் நன்ருகப் படும்படி பெரியதாகவும், வெண்மையாகவும், மணமுடைய தாகவும் இருக்குமென்று செடி நூல் கூறுகின்றது. ஆம்பல் மலரை நடு யாமத்தில் வண்டு அடைவதாகச் சொல்லப்பட்டிருப்பதால் இது வெறும் உவமைக்காக எழுதப்பட்ட புனைந்துரை என்று கருதற்கு இடமில்லை. ஆம்பல் மலர் பெரியதாகவும், நறுமணம் வாய்ந்ததாகவும், வெண்ணிறமாகவும் இருப்பதால் இவ்வுவமை இரவு மகரந்தச் சேர்க்கையின் ஒரு செயலைக் குறிக்கும் ஓர் உண்மையை அடிப்படையாகக் கொண்டு எழுந்த தென்பது தேற்றம்.

> "என்னை மார்பிற் புண்ணும் வெய்ய
> நடுநாள் வந்து தும்பியுந் துவைக்கும்"
>
> (புறம், 280)

என்ற செய்யுளிலும் நடுநாளில் தும்பி (வண்டு) மலரை ஊதுவதாகக் குறிக்கப்பட்டிருப்பது இதை வலியுறுத்தும், நடுநாளில் தும்பி மலரூதுவதைக் கண்டதும் அவளுக்குத் தன் காதலனைப்பற்றிய நினைப்பே வருகிறது என்று கூறும் புறப்பாடல் வரிகள் புனைந்துரையாக இருக்கமுடியாது.

பூச்சிகளால் ஏற்படும் மகரந்தச் சேர்க்கையை 'Entomophily' என்று செடி நூலில் பகர்வர். ஆனல் விலங்குகள், பறவைகளால் ஏற்படும் மகரந்தச் சேர்க்கையை 'Zoophily' என்று அழைப்பர். இம்மாதிரி பறவைகளால் ஏற்படும் மகரந்தச் சேர்க்கை பற்றிய

தான ஒரு சிறு குறிப்பை அகநானூற்றுப் பாடலில் ஊகித்தறியலாம்.

"பாசரும் பீன்ற செம்முகை முருக்கினப்
போதவி முலரி கொழுதித் தாதருந்
தந்தளி மாஅத்...... ...... ......"

(அகம், 229)

இப்பாட்டில் குயில் முருக்க மலரைத் துருவி, தாதை உண்பதாகக் கூறப்பட்டுளது. குயில் மூக்கில் மகரந்தம் ஒட்டிக்கொள்வது இயல்பு. அதனால் மகரந்தச் சேர்க்கை பிறிதொரு பூவை குயில் நாடும் போது ஏற்படுவது இயற்கை. 'தத்தா' (Dutta) என்ற செடி நூலறிஞர் பறவைகளால் மகரந்தச் சேர்க்கை அடைவதற்கு எடுத்துக்காட்டாக முருக்க மரம் ஒன்றை மட்டுமே குறிக்கின்றார்.

"It is now known that Erythirina Indica
(முருக்கம்) is Pollinated by Birds"

(A. C. Dutta, Text Book of Botany, Page 144)

ஆனால் குயில்தான் இம்மகரந்தச் சேர்க்கையைச் செய்கிறதா என்பது ஆராய வேண்டிய செய்தி.

பழம் :

பழங்களின் நிறம், உருவம், அமைப்பு, சுவை முதலியவை பல விடங்களில் கூறப்பட்டிருக்கின்றன.

வேம்பு: "வேம்பி னொண்பழ முணஇ யிருப்பைத்
இருப்பை : தேம்பால் செற்ற வாவல் சினைதொறு"

(நற்றிணை, 279)

உகாய்மரம்: "புறவுப் புறத்தன்ன புன்கா லுகாஅய்க்
காசினை யன்ன நளிகனி யுதிர"

(குறுந்தொகை, 274)

உருண்டையான பொற்காசு போன்ற காயை உடையது உகாய் மரம் என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஈச்சமரம் :

" செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின் "

(அகம், 21)

குமிழ மரம் :

" அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி "

(நற்றிணை, 6)

விளா மரம் :

"..........................................விளவி
னெட்டொழி பந்திற் கோட்டு மூக் கிறுபு "

(நற்றிணை, 24)

பனை மரம் :

"பானை தந்த பஞ்சியங் குறுங்காய்
ஓங்கிரும் பெண்ணை நுங்கொடு பெயரும் "

(குறுந்தொகை, 293)

தென்னை மரம் :

"தெங்குபடு வியன்பழ முனையிற் றந்தையர் "

(புறம், 61)

நாவல் கனி :

"புன்காழுவற் பொதிப்புற விருங்கனி "

(நற்றிணை, 35)

புன்னை மரம் :

"..................................கோடு தொறு
நெய்கனி பசுங்காய் தூக்குந் துறைவனை "

(நற்றிணை, 278)

மாமரம் :

''நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்''

(நற்றிணை, 280)

பாகற்கொடி :

''பைம்பாகற் பழந்துணரிய
செஞ்சுளைய கனிமாந்தி''

(பொருநராற்றுப்படை, வரி 191)

பூலாமரம் :

''கலையுணக் கிழித்த முழவுமருள் பெரும்பழம்''

(புறம், 236)

''ஆசினிக் கவினிய பலவினூர் வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன் ''

•

(புறம், 158)

வேங்கை மரம் :

''.........................................கொல்ல
னெறிபோற் பிதிரிற் சிறுபல் காய''

(நற்றிணை, 13)

பிரம்புக்கொடி :

''அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளை கனி
குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉம்''

(குறுந்தொகை, 91)

கொன்றை மரம் :

''புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியிணை(ர்)''

(நற்றிணை, 296)

முருக்கமரம் :

''வேனின் முருக்கின் விளை துணை ரன்ன
மாணா விரல வல்வாய்ப் பேஎய்''

(நற்றிணை)

வாழைமரம் :

"அத்த வாகை யமலை வானெற்
றரியார் சிலம்பி னரிசி யார்ப்பக்"

(குறுந்தொகை, 369)

கள்ளிச்செடி :

"நொடிவிடு வன்ன காய்விடு கள்ளி
யலங்கலம் பாவை..............."

(நற்றிணை)

எருக்கஞ்செடி :

"குனிகா யெருக்கின் குவிமுகிழ் விண்டலொடு"

(குண நாற்பது)

நெல்லிமரம் :

"பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி"

(அகம், 5)

வேலமரம் :

"குயிற்கண் ணன்ன குரூஉக்காய் முற்றி"

(அகம், 293)

உழுத்தஞ்செடி :

"இரும்பனிப் பருவத்த மயிர்க்கா யுழுந்தி(ன்)"

(நற்றிணை, 86)

**விதை :**

தமிழ் இலக்கியத்தில் விதையை 'காழ்' அல்லது 'அரிசி' என்று அழைக்கின்றனர். செடி நூற்படி நெல் பழம். ஆனல் அரிசி விதை. வாகை நெற்றின் உள்ளிருக்கும் விதை 'அரிசி' என்று சங்க இலக்கியத்தில் அழைக்கப்படுகின்றது.

"அத்த வாகை யமலை வாஎனெற்
றரியார் சிலம்பி னரிசி யார்ப்பக்"

(குறுந்தொகை, 369)

'அரி' என்பது முதலில் பொதுவாக விதைகளைக் குறித்துப் பின்னர் அரிசியை மட்டுமே சிறப்பாகக் குறித்து வழங்கிற்று. 'அரி' என்னும் சொல் சுமேரிய மொழியில் கூட (Sumerian Language) விதை என்ற பொருளில் வழங்கினது.

"களர்வள ரீந்தின் காழ்கண் டன்ன"

(பெரும்பாணாற்றுப்படை, வரி 130)

"ஆய்சுளைப் பலவின் மேய்கலை யுதிர்த்த
துய்த்தலை வெண்காழ் பெறூஉம்"

(அகம், 7)

மேற்சொன்ன பாடல்களால் 'காழ்' எனும் சொல் விதை எனும் பொருளில் வழங்குவது தெரிகின்றது. விதையின் ஓரத்தில் காணப்படும் அல்லது நுனியில் காணப்படும் தழும்பை 'Hilum' எனச் செடி நூலில் அழைப்பர். அவரை விதையில் இப்பாகம் வெண்மையாகத் தெளிவாக ஓரத்தில் தெரியும். இதைச் சங்க நூற்களில் 'ஆர்க்கு' என்றழைத்ததாகத் தெரிகிறது.

"கொம்மையம் பசுங்காய் குடுமி விளைந்த
பாக லார்க்கைப்.........................."

(கலித்தொகை)

"ஆய்சுளைப் பலவின் மேய்கலை யுதிர்த்த
துய்த்தலை வெண்காழ் பெறூஉங்"

'துய்த்தலை' என்பதற்குப் பொருள் 'ஆர்க்கு' என்று கூறப்பட்டுள்ளது. பலா விதையின் நுனியி

லுள்ள தழும்பும், பாகல் விதையின் ஓரத்திலுள்ள தழும்பும் குறிக்கப்பட்டுள்ளன.

குன்றி மணி (Absrus Preacatoris) வெள்ளெலியின் கண்களுக்கு உவமிக்கப்பட்டிருக்கின்றது.

"குன்றியன்ன கண்ண குரூஉ மயிர்ப்
புன்றாள் வெள்ளெலி மோவாய் ஏற்றை"

(அகம், 133)

நடுவில் கருப்பும், சூழ சிவப்பும் உடைய வெள்ளெலியின் கண்களுக்கு இவ்வுவமை மிகவும் பொருந்தும். அளவிலும் இது பொருத்தமானதே. கண்காட்சி சாலைகளில் வைத்திருக்கும் பறவைகள், சிறு விலங்குகள் முதலியவற்றிற்குப் போலிக் கண்களாக குன்றிமணி பயன்படுவதிலிருந்து இவ்வுவமையின் பொருத்தம் விளங்கும். ஆங்கிலத்தில் குன்றி மணியை நண்டின் கண் (Crab's eye) என்றழைப்பர். இவ்வுவமை அவ்வளவு பொருத்தமாகக் காணப்படவில்லை. ஆனால் சங்க நூற்களில் நண்டின் கண்ணுக்கு வேறொரு உவமை பொருத்தமாகக் கூறப்பட்டிருக்கிறது. நண்டின் நீண்ட கண் (Stalked eye) காம்புடன் கூடிய வேப்பம் பூவிற்கு உவமிக்கப் பட்டிருக்கின்றது.

"வேப்பு நனை யன்ன நெடுங்கணீர் ஞெண்டு"

(அகம், 176)

நெல்லியின் இளஞ்சிவப்புப் பழம் முயலின் கண்ணுக்கு உவமிக்கப்பட்டிருக்கின்றது. (அகம், 284). பழத்தின் உருண்டை வடிவம், இளஞ்சிவப்பு நிறம், அளவு இவ்வுவமையின் பொருத்தத்தைக் காட்டுகின்றன.

சங்க இலக்கியத்தில் செடி கொடி மரங்கள்பற்றிப் பல செய்திகள் கூறப்படுகின்றன. அவைகள் பெரும் பாலும் செடி நூலார் கண்டுபிடித்தவையோடு ஒத்திருக்கின்றன.

---

## 2. குறிஞ்சி

அகமும் புறமும் கலந்ததே மக்கள் வாழ்க்கை எனப் பழந்தமிழர் கருதினர். அக வாழ்க்கையைக் கூடத் தமிழன் என்றும் தன்னல வாழ்க்கையாகக் கொள்ள வில்லை. தன்னலத்திற்காகவே அக வாழ்க்கை என்று கருதியிருப்பின் முதலில் 'தான், தனது' எனும் உளக் கோட்டங்களை வேரறுப்பதே மனித வாழ்க்கையின் குறிக்கோள் என்று கருதியிருப்பான். அத்தகைய வாழ்க்கையில் புறத்திற்கிடமின்று. தமிழன் சிறந்த தாகக் கருதிய அகத்திற்குமிடமின்று. பழந்தமிழர், வாழ்க்கை வாழ்வதற்கே என்று கருதினர். அதில் தனது உள்ளத்திற்கிடமுண்டு. தான் வாழும் நிலத் திற்கும் காலத்திற்குமிடமுண்டு. தன்னைச் சுற்றி வாழும் செடி கொடிகளுக்கும் உயிரினங்களுக்கும் அதில் இடமுண்டு, அதனால்தான் அகத்திணையில் முதல், கரு, உரிப்பொருள் என்று பாகுபடுத்திக் காட்டினான். தான் வாழும் நிலத்தையோ, நிகழும் பொழுதையோ, நிற்கும் செடியையோ, நில்லா விலங்கையோ தன்னுடைய அகவாழ்க்கைக்குப் புற மாகக் கருதவில்லை. தன்னைச் சுற்றியுள்ள. சூழ்ந் துள்ள நிலைப்பொருளையும் இயங்கு பொருளையும் உள்ளத்துடன் இணைத்த வாழ்வையே, பிணைத்த வாழ்க்கை முறையையே பழந்தமிழன் 'திணை' என்று கூறினான். அறிஞர் இராதா கிருஷ்ணன் அவர்கள் அகமும் அகமற்றதும் கொள்ளும் தொடர்பே வாழ்க்கை என்று ஓரிடத்தில் கூறுகிறார். ஆனால் தமிழர் அகமெனக் கூறியது வெறுந்தன்னலமன்று, தன்னலத்தில் முளைத்துத் துணைநலமாக முகிழ்த்துப்

பிறர் நலமாக மலர்வது, 'அன்புடை நெஞ்சந் தாங் கலந்து, மக்களைப் பெற்றுச் சுற்றந் தழுவிப் பிறர் நலம் பேணிச் சிறந்தது பயிற்றலே' தமிழனது குறிக்கோள். அக வாழ்க்கையில் முதற்பொருள், கருப்பொருள் என்னும் உரிப் பொருள் பாகுபாடு மிக நுண்ணியது தாகும். முதலும், கருவும் ஆகிய பொருட்கள் இயற்கையும் செயற்கையுமான சூழ்நிலையைக் (Environment) குறிக்கின்றன. அச்சூழ்நிலையில் ஊடாடும்போது—தொடர்புறும்போது—மாறும் உள்ளப் பாங்கையே உரிப்பொருள் குறிக்கின்றது.

திணைகளில் முதற்றிணை குறிஞ்சியென்பர். கூடுவதே அகவாழ்க்கையில் முதற்கட்டமாதலால் குறிஞ்சியே முதல் திணையாயிற்று. வரலாற்று அடிப்படையில் பார்க்குங்கால் மலைகளிலும் காடுகளிலும் தேனும் கிழங்கும் பழமும் தேடியுண்டு வாழ்ந்த வாழ்க்கையே மனிதனின் முதல் வாழ்க்கையாதலால் குறிஞ்சித் திணையே முதல் திணையாகக் கருதப்பட்டது. மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியென்பர். ஆயின் இவ்விடத்திற்கு இப்பெயர் எதனால் வந்ததெனின் மலையில் வாழும் ஒரு செடியின் பூவினால் வந்ததென்பர். பல செடிகள் வாழும் மலைக்கு ஒரு செடியின் பெயர் இடுவது ஏன் என்றால் விடை தேடித்தான் கண்டு பிடிக்கவேண்டும். அப்படி 'தேடும்பொழுது' நமக்கு அறிவியல் துணை செய்கின்றது. அறிவியல் துணைகொண்டு ஆராயுங்கால் பழந்தமிழரின் நுண்மாணுழைபுலமும், இயற்கை ஈடுபாட்டாராய்ச்சியும் வெளியாகின்றது.

கடல் மட்டத்திற்கு மேல் ஆறாயிரம் அடிக்கு மேற்பட்டுள்ள இடத்தில் இயற்கையில் காணக்கூடிய செடி குறிஞ்சிச் செடியாகும். பிற செடிகளுக்கு அத்தகைய வரையறை இச்செடிக்கிருப்பதுபோல் கிடையாது. ஆறாயிரம் அடிக்கு மேற்பட்ட நிலம், மலையும் மலை சார்ந்த பகுதியுமாகத்தான் இருக்கும். இத்தன்மையின் அடிப்படைக் காரணத்தாலேயே, மலையையும் மலை சார்ந்த இடத்தையும் இச்செடியின் பெயரால் அழைத்தனர். இதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அது இச்செடியின் பூவின் தனித்தன்மையாகும். இச் செடியின் பூ ஒன்பது ஆண்டுகளுக்கொருமுறை தோன்றிப் பன்னிரண்டு ஆண்டுகள் வரை தொடர்ந்து காணப்படுகின்றது. இயற்கையில் இத்தகைய வியப்பிற்குரிய பூ வேறின்மையால் மலையிலும் மலை சார்ந்த இடத்திலும் காணப்படும் இந்தப் பூவின் பெயராலேயே இந்த இடத்தை அழைத்தனர். செடி நூலில் இச்செடி 'ஸ்ட்ரொபிளான்த்தெஸ் (strobilanthes) என்ற இனத்தைச் சார்ந்தது. தமிழ் நாட்டிலும், ஈழத்திலும் மத்திய இந்தியாவிலும் காணப்படுகின்றது. நீலகிரி மலையிலும் பழனி மலையிலும் கோடைக்கானல் மலையிலும் பல ஆண்டுகளாக இச்செடி பூக்கும் காலத்தைக் கண்டு வைத்திருக்கின்றனர். இவை மலைச்சாரல்களில் பூக்குங்கால் பல்லாயிரக்கணக்கான பூக்கள் ஒரே கூட்டமாகத் தென்படும். ஒன்பதாவது ஆண்டிலிருந்து பன்னிரண்டாவது ஆண்டு வரை மலைச்சாரல்களில் கூட்டம் கூட்டமாக இச்செடிப்புதர்கள் பூத்துக் கிடக்கும். பன்னிரண்டாம் ஆண்டில் செடிகள் இறந்துவிடுகின்றன. இப்படிக் கூட்டம் கூட்டமாகப் பார்த்ததால்தான் பழந்தமிழ்ப் புலவர் 'கருங்கோற் குறிஞ்சி யடுக்கம்,

(புறம், 374) என்று கூறினர். இந்தப் பூவில் நிறையத் தேனுண்டு. தேன் மிகவுடையதாக அறிஞர்கள் கூறும் பூக்களில் இதுவுமொன்று. பல்லாயிரக்கணக் கான பூக்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் தோன்றுவ தால் தேன் மலிந்து போய்விடுகின்றது. அதனுல் தேனீக்கள் மலைச்சாரல்களில் பெரிய பெரிய தேன் கூடுகளை நிறையக் கட்டுகின்றன. இச்செடி பூக்கத் தொடங்கியதும் தேன் கூடுகள் மலைச்சாரல்களில் மலிந்துவிடுகின்றன. இதைக் கண்டே சங்கப் புலவ ரொருவர்,

"கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கும் நாடனெடு நட்பே"

(குறுந். 3)

என்று பாடினர். 'குறிஞ்சிப் பெருந்தே னிறால்' என்று கலித்தொகையும் கூறுகிறது. குறிஞ்சிப் பூவின் தேனை மிக இனியதெனக் கருதினர்.

"கருங்கோற் குறிஞ்சி மதனில வான்பூ
நாறுகொள் பிரச மூறு நாடற்கு"

என்ற நற்றிணைப் பாடலில் குறிஞ்சித் தேனின் இனிமை கூறப்பட்டிருக்கின்றது. குறிஞ்சிப் பூவின் தேனை மிகவுயரியதாகக் கருதியதற்கு இன்னெரு காரணமும் உண்டு. பொதுவாகத் தேன்கூடுகளில் பலவகைப் பூக் களின் தேன் காணப்படும். ஆனல் குறிஞ்சிப் பூக் களின் தேனல் இழைக்கப்படும் கூட்டில் பிற பூக்களின் தேன் கலப்பதில்லை. ஏனெனில் குறிஞ்சிச்செடி பூக்க ஆரம்பித்தால் தேனீக்கள் குறிஞ்சித் தேனையே கூடு களில் சேர்க்கின்றன. இத்தகைய தேனைத் 'தனிப் பூத்தேன்' (Unifloral Honey) என்று அறிஞர்கள்

அழைக்கின்றனர். சவ்வாது மலையில் சந்தனப் பூத் தேன் சேர்க்கச் சென்னை அரசியலார் ஒரு தேன் ஆராய்ச்சிப் பண்ணையை நிறுவியிருக்கின்றனர். இந்தத் தனிப்பூத்தேன் மணத்திற்கும் இனிப்புக்கும் பெயர் பெற்றது. பூக்குங்காலத்துக் குறிஞ்சித்தேன் நிறைந்து விடுகின்றது. இனிமை மிகுந்தது. நறுமணம்வாய்ந்தது. பல்லாண்டுகளுக்கொருமுறை அரிதாகக் கிடைக்கின்றது. அதுபோன்றே நாடனுடைய நட்பும் திடீரென்று தோன்றுகின்றது; பெருகுகின்றது; இனிமை மிகுந்து நறுமணமெய்துகின்றது. அது மட்டுமா, குறிஞ்சிக்குப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கொருமுறை மறு பிறப்பு இருப்பதுவும் சாரலில் தேனிழைப்பதுவும் போல், வரும் பிறப்பிலெல்லாம் நாடனுடன் நட்புத் தொடர்கின்றது. இத்தகைய அரிய பெரிய, இனிமையான, மணமான தேனைத் தருவதாலும் மலையும் மலை சார்ந்த இடத்தையும் குறிஞ்சி என்ற பெயரால் அழைத்தனரென்று தெரிகின்றது.

குறிஞ்சித் தேனின் அருமை பெருமைகளைத் தமிழர் மட்டுமன்றிப் பிற பழங்குடி மக்களும் அறிந்திருந்தனரென்று தெரிய வருகின்றது. டாக்டர் வெரியர் எல்வின் (Dr. Verrier Elwin) என்ற அறிஞர் பழங்குடி மக்களைப்பற்றிப் பல ஆராய்ச்சிகளை வெளியிட்டிருக்கின்றார். சூடுநாகபுரியில் வாழும் பைகர்கள் (Baiga) என்ற இனத்தாரைப்பற்றியும் எழுதியுள்ளார். அவர் சொல்வதாவது: "குறிஞ்சிப் பூக்கள் கூட்டம் கூட்டமாகப் பூக்கும். ஒன்பதாண்டுகளுக்கொருமுறை பூக்கும். அப்பொழுது பைகர்கள் தேனீ விழாக் கொண்டாடுவர். விழா முடிவுநாளில் மலைத் தேனைச் சடங்கு

களுடன், நடனத்துடன் உண்பர்''. இச்செடியை இம் மக்கள் 'மேர்கடே, ஆமேரா' என்று அழைப்பதாகக் கூறுகிறார். பைகர்கள் இச்செடியில் ஆண் பெண் வேற்றுமை கூடப் பார்க்கின்றார்களாம். இச்செடியைப்பற்றிச் சில புராணக் கதைகள்கூட இவர்களிடையே வழங்குகின்றனவாம். தேனீ விழாக் காலத்தில் கூடை கூடையாகக் குறிஞ்சித் தேனடைகளைச் சேகரித்துக்கொண்டு வந்து ஆடவரும், பெண்டிரும் தீயைச்சுற்றிச் சுற்றி நடனமாடுவார்களாம். குறிஞ்சிச் செடிகளைத் தலையிலும் இடுப்பிலும் செருகிக்கொண்டு ஆடுவார்களாம். இந்தியாவின் நடுவில் வாழும் பழங்குடி மக்கள், அதுவும் திராவிடப் பழங்குடி மக்கள், குறிஞ்சித் தேனைப் போற்றுவதைக் காணுங்கால் அவர்களுக்கும் பழந்தமிழருக்கும் மிகப் பழங்காலத்தில் தொடர்பிருந்திருக்க வேண்டுமென்றே தோன்றுகின்றது.

நீலகிரியில் தோடர்கள் தங்கள் குழந்தைகளின் வயதைக் குறிஞ்சிச்செடி பூப்பதைக் கொண்டே கணக்கிட்டனராம். ஒருவேளை மிகப் பழந்தமிழரும் பன்னிராட்டை அகவையினனை 'ஒரு குறிஞ்சி அகவையினன் என்றும் இருபத்துநான்காட்டை அகவையினனை 'இரு குறிஞ்சி அகவையினன்' என்றும் கூறினரோ என்று எண்ணவுமிடமுண்டு. பழந்தமிழர் வேங்கை மரம் பூப்பதைக் கண்டு ஆண்டுகளைக் கணக்கிட்டனரென்பது தெரிந்த செய்தியாகும். குறிஞ்சிச் செடி எப்படிப் பழங்குடி மக்களையும் பழந்தமிழரையும் கவர்ந்ததோ, அதுபோலவே நீலகிரியிலும் கோடைக் கானலிலும் வாழ்ந்த வெளிநாட்டாரின் கவனத்தையும்

ஈர்த்திருக்கின்றது. இரண்டு நூற்றாண்டுகளாக இதைப் பற்றிய நாட்குறிப்பும் (Diaries) எழுதியுள்ளனர். இச் செடியின் பூவைப் படம் வரைந்தும் பாடம் செய்தும் வைத்திருக்கின்றனர்.

குறிஞ்சிச் செடியில் பல இனங்கள் உள்ளன. அதில் ஓரினம் (Strobilanthes Walliechi) பன்னிரண்டு ஆண்டு களுக்கொரு முறை மலருமாம். அது விளையும்போது பிறசெடிகளை வளரவிடாது அழுத்திவிடுமாம். மலைச் சாரலில் குறிஞ்சிச்செடியைத் தவிரப் பிற செடியைக் காண முடியாதாம். இந்தச் செடி வளர்வதும் தனிப் பட்ட முறையாகும். ஆண்டுதோறும் இளவேனிலில் குருத்துத் தோன்றும். பல கணுக்கள் விட்டு வளரும் இக்குருத்து, ஆண்டிறுதியில் கீழ்க்கணுவைத் தவிர்த்து முழுவதும் அழிந்துவிடுமாம். இம்முறையில் ஒவ் வொரு ஆண்டும் கீழ்க்கணுவை விட்டுப் பிற கணுக்கள் (Internodes) அழிந்துபோவதால் இச்செடியின் வயதைப் பழைய கணுக்களின் எண்ணிக்கையைக் கொண்டு சொல்லிவிடலாம். ஒரு வேளை பழங்குடி மக்கள் இம் முறையாக எண்ணித்தான் வயதைக் கணக்கிட்டிருப் பாரோ என்று எண்ண இடமிருக்கின்றது. குறிஞ்சிச் செடியில் 28 இனங்கள் ஈழத்தில் காணப்படுகின்றன. பர்மாவிலும் அசாமிலும் காணப்படுகின்றன. ஆனால் தமிழ்நாட்டில் மட்டும்தான் அவை சிறப்புடை யனவாகக் காணப்படுகின்றன என்று செடி நூலறிஞர் கள் கருதுகின்றனர். ஏனெனில் வேறெங்கும் அவை செழிப்பாகவும் பெரியதாகவும் தமிழ் நாட்டில் வளர் வதுபோல் இருப்பதில்லை. குறிஞ்சி இனங்களில் பூக் களின் நிறம் மாறுபடுகின்றது. மிக அழகிய பூக்களை

யுடைய இனங்கள் பல ஆண்டுகளுக்கொரு முறையே பூக்கின்றன என்று அறிஞர்கள் கூறுகின்றனர். அறிவியல் அறிஞர்கள் இச்செடியை 'மலைவாழ் புதர்ச்செடி' (Undergrowth of Montanic regions) என வருணிக்கின்றனர். குறிஞ்சிப்பூவின் நிறங்களில் நீல நிறத்தையே தமிழர் போற்றினர். நீலக் குறிஞ்சிப் பூவையே நறுங் குறிஞ்சியாகக் கருதினர். அசாமில் வாழும் ஒருவகை நீலநிறக் குறிஞ்சிப் பூக்களை நீலச் சாயமிறக்குவதற்காக அசாம் மக்கள் பயன்படுத்துகின்றனர். நீலகிரி என்ற பெயரே, நீலக்குறிஞ்சி வளர்வதால் வந்த பெயரோ என்று ஐயமுற வேண்டியிருக்கிறது. ஏனெனில் ஒரு சில நீலப்பூக்களுடைய இனங்கள் நீலகிரியில் மட்டும் காணப்படுவதாகச் செடி நூலறிஞர் கூறுகின்றனர். நீலகிரியின் கிழக்குச் சாரலிலும் மேற்குச் சாரலிலும் சில இனங்கள் (Strobilanthes Amabilis, Strobilanthes Kunthianus, Strobilanthes Consanquinus, Strobilanthes Dawsoni) நீலப்பூக்களையுடையன. குறிஞ்சிப்பூவின் பல நிறங்களையும் தமிழர் நன்கு அறிந்திருந்தனரென்று கூறுவது மிகையாகாது. "கருங்கோற் குறிஞ்சிப்பூ" என்று பலவிடங்களில் இப்பூ வருணிக்கப்படுகின்றது. குறிஞ்சி அரும்பாயிருக்கும்போது வெண்மையாகக் காணப்படும். நற்றிணையும் "கருங்கோற் குறிஞ்சி மதனில வான்பூ" என்று கூறுகின்றது. குறிஞ்சித் திணையில் குறிஞ்சிப்பண் தோன்றியது. குறிஞ்சிப் பண்ணில் தோன்றும் இராகங்களைக் குறிஞ்சி இனப் பூக்களின் நிறத்தால் பெயரிட்டழைத்திருக்கின்றனர். மேகராகக் குறிஞ்சி என்பது ஓர் இராகம். இது மேக நிறம் போன்று (Grey) உள்ள குறிஞ்சிப் பூவின் நிறத்

தால் பெயர் பெற்றது. பிற்காலப் பாடலொன்று குறிஞ்சிப் பூவைக் குங்குமத்திற்கு ஒப்பிடுகின்றது. "குறிஞ்சிப்பூங் கோதை போலும் குங்கும முலையி னுடன்" என்று சிந்தாமணிப் பாட்டு 1568 இல் வருகின்றது. சிவந்த பூக்களையுடைய குறிஞ்சி இனங்கள் (Strobilanthes Hieranthes, Strobilanthes Ludidus, Strobilanthes Rubicanus) பழனி, பீர்மேடு மலைகளில் காணப்படுகின்றன. பொன் வண்ணக் குறிஞ்சி என்ற இராகம் மஞ்சள் நிறக் குறிஞ்சிப் பூவைக் குறித்திருக்கலாம். செடி நூலிலும் குறிஞ்சிப்பூக்கள் பல நிறங்களையுடையனவென்று கூறப்பட்டிருக்கின்றது. பண்களுடனும் இராகங்களுடனும் நிறங்களை இணைத்துக் கூறுவது ஒரு நுண்ணிய அனுபவ உணர்ச்சியால் எழுந்ததாகும். நீலாம்புரி என்ற இராகத்தின் பெயரில் நீலம் பயில்கின்றது. இம்முறையில் இயற்கை நிறங்களை இசையுடன் இணைத்துப் பார்க்கும் கொள்கை (Colour Music) மேலை நாட்டில் தோன்றியிருக்கின்றது. மேல் நாட்டு இசையில் 'பாச்' (Bach), 'பித்தோவன்', 'மோசார்ட்' (Mozart) போன்ற பெரிய அறிஞர்களின் இசைப் பாடல்களைச் சில நிறங்களுடன் இணைத்துக் கூறுகின்றனர். இந்த நுண்ணிய உள்ளுணர்வு பழந் தமிழரின் இசையிலும் இருந்திருக்கின்றதெனை அறியும் போது வியப்படையாமல் இருக்க முடியாது. குறிஞ்சிச் செடி தற்பொழுது கோடைக்கானலில் பூக்கத் தொடங்கியிருப்பதாகச் செய்தி வருகின்றது. 1910, 1922, 1934, 1946 ஆகிய ஆண்டுகளில் பூத்ததாகத் தெரிகின்றது.

குறிஞ்சியின் கருப்பொருள் எவ்வளவு சிறப்புடையதோ அதுபோன்றே அதன் உரிப்பொருளும் சிறப்

புடையது. காதலர் கூடுவது குறிஞ்சியின் உரிப் பொருள். மலைகளில் பெருங்காடுகள் இருப்பதால் காதலர் தனிமையில் காணவும் கூடவும் மலைச்சூழல் வாய்ப்பாக அமைந்திருக்கின்றது. முனிவரையும் மயங்க வைக்கும் சூழல், மலையிலும் மலைசார்ந்த இடத்திலும் உளது. குறிஞ்சிப் பாட்டில் கபிலர் அழகிய செடி கொடிகள் அத்தனையும் காதலர் கூடுமிடத்தில் இருப்ப தாகக் கூறியுள்ளார்.

இறையனார் அகப்பொருளிலும் பிற்கால இலக் கண இலக்கிய நூல்களிலும் செய்குன்று, இளமரக்கா முதலிய செயற்கைச் சூழல்களையும் உண்டுபண்ணி யிருக்கின்றனர். தனிப்பெருந் தலைவனும் தலைவியும் கூடுமிடம் தன்னேரில்லா அழகும் பெருமையும் உடையதாகக் கபிலர் படைத்திருக்கிறார். "சந்தன மும், சண்பகமும், தேமாவும், தீம்பலாவும், ஆசினியும், அசோகும், நறவும், நந்தியும், மாதவியும், மல்லிகையும், மௌவலோடு மணங்கமழ்ந்து, பாதிரியும், பாவை ஞாழலும், பைங்கொன்றையும் பிணியவிழ்ந்து, பொரிப் புன்கும், புன்னாகமும் முருக்கொடு முகை சிறந்து, வண் டறைந்து, தேனார்ந்து, வரிக்குயில்கள் இசைபாட, தண் தென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழில்" என்று இறையனாரகப் பொருள் வருணிக் கின்றது. மாணிக்கச்சுனை, அதன் மருங்கே மாதவி மண்டபம்; அருகே 'தகடுபடு பசும்பொற் சிகரங்களின் முகடு தொடுத்து' வீழும் அருவி; வரிக்குயில்கள் இசை பாடுகின்றன. இளமயில் ஆடுகின்றது, இத்தனையும் காதலர் கூடுமிடத்தில் காணப்படுகின்றன. இது பிரெஞ்சு இலக்கியத்தில் 'பாதலேர்' (Baudalaire) என்ற

அறிஞர் காணும் தன்னேரில்லாத இடத்தைப் போன்றே உள்ளது. இவ்விடத்து 'எல்லாம் அழகு, எல்லாம் ஒழுங்கு'. அதுமட்டுமா! எல்லாம் விழைவு (Volupto)! மரஞ்செடிகள், குயில் மயில்கள் எல்லாம் பயந்துகொண்டு அங்குப் போய் அணிசெய்வதாகத் தோற்றுகின்றது. செகப்பிரியர் நாடகத்தில் இனிமையான காட்சிகளெல்லாம் 'ஆர்டன்' (Arden) காடுகளில் தான் நடைபெறுகின்றன. அழகும் அணியும் களி நடமாடுமிடம் மலையும் காடுமே. அச்சூழல் காதலர்களை வாவென்றழைக்கின்றது. முனிவரையும் கனியவைக்கின்றது. விசுவாமித்திரர் கூடத் தவம் நழுவ, வழுவக் காரணம் வெறும் மேனகையன்று; மலையும் காடும் கலந்த சூழலில் தோன்றிய மேனகையே, முனிவரைக் கனிய வைத்தாள். காதற்கதை எழுதுவதில் துறைபோகிய பிரெஞ்சு ஆசிரியர் மாப்பாசானின் (Maupassant) ஒரு கதையில் ஒரு முதியவரும் அவர் மனைவியும் அறங்கூறவையத்திற்குக் கொண்டு வரப்படுகின்றனர். காட்டருகில் காதல் விளையாட்டுப் புரிந்ததாக அவர்கள்மேல் குற்றம் சுமத்தப்பட்டிருந்தது. அவைத்தலைவர் அவர்களை மன்னித்துவிட்டு "குளிர்காலத்தில் காடுகள் முதியவரையும் வழுவச் செய்யும்" என்று கூறுகிறார். அதுபோன்றே பழந்தமிழரும் காதற்குரிய காலம் கூதிரென்றும், இடம் குறிஞ்சியென்றும் கருதினர். முதியவர் மட்டுமன்றி முனிவரையும் வழுவச்செய்யும் என்றும் கருதினர். உளநூலறிவு(Psychology)டன் மிகப் பொருத்தமாகத் தமிழர் காலத்தையும் இடத்தையும் கூறியுள்ளனர். செகப்பிரியர் கூடக் "காதல் நினைவுகள் வளைந்த சோலை

களில் மிகுந்து தோன்றுகின்றன" என்று பன்னிரண்டாம் இரவு (Twelfth Night) என்ற நாடகத்தில் கூறுகின்றார்.

தமிழ் நூற்படி நள்ளிரவே காதலர் கூட்டத்திற் கேற்றது. ஏனெனில் நள்ளிரவில்தான் தடங்கல்கள் குறையும். நள்ளிரவில் தலைவன் வரும் காட்சியைப் பல சங்கப் பாடல்கள் படம் பிடித்தாற்போற் காட்டுகின்றன. நடு இரவில் காதலன் வருவான்; அது பார்த்து வல்வாய் நாய்கள் குரைக்கும்; கெடுமதி முகில் விட்டுத் திடுமென வெளிவரும்; தண்கதிர் ஒளி பாய்ச்சும்; கூகை குழறும்; ஆந்தை அலறும்; முட்டாள் சேவலொன்று விடிந்ததோ எனக்கூவும். இயற்கையின் இரவுத் திருவிளையாடல்களெல்லாம் காதலனுக்குத் தாங்கமுடியாத் தடங்கல்கள்; இடைஞ்சல்கள்; எதிர்பாராத 'பல்முட்டுக்கள்'. இரவு முழுவதும் கண்விழித்துத் திறந்த வெளியில் பரந்த உலகில் நடக்கும் நிகழ்ச்சிகளையெல்லாம் கூர்ந்து கவனித்த ஆங்கில அறிஞர் ஆர். எல். ஸ்டீவென்சன் ஒரு நூலில் இரவில் நிகழும் செய்திகளையெல்லாம் வருணித்திருக்கின்றார். நள்ளிரவில் நாய்கள் குரைப்பதைக் கூறியுள்ளார். சேவல் கூவுவதைச் சொல்லியுள்ளார். ஆங்கில நாட்டில் ஓரூரில் இரவில் நடக்கும் செய்திகளை வருணித்துள்ள ஒரு நாவலில் (Novel) தமிழ் நாட்டில் நடப்பதேபோல் நாய் குரைக்கின்றது. கோழி கூவுகின்றது. கூகை குழறுகின்றது. இரவில் இயற்கை, உலகம் முழுவதும் ஒன்றே போல் இருக்கும்போல் தோன்றுகின்றது. மோரிஸ் டெகரென் (Mourice De Guerin) என்ற பிரெஞ்சு ஆசிரியர் இயற்கைபற்றி எழுதுவதில் வல்லுநர். அவர்

'பிரிட்டனி'ல் ஓரூரில் ஊருறங்கியும் நாய்கள் உறங்காமல் நள்ளிரவில் குரைப்பதைக் குறிப்பாகக் கூறியுள்ளார் 122-ஆம் அகப்பாட்டு, நாய் குரைப்பதையும், பிற தடங்கல்களையும் மிக அழகாகக் கூறும்.

''இரும்பிழி மகாஅரில் வழுங்கன் மூதூர்
விழவின் றுயினும் துஞ்சா தாகு
மல்லல் ஆவணம் மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவேல் இளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவவாய் ஞமலி மகிழா து மடியின்
பகலுரு வுறழ் நிலாக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்று விரியும்மே
திங்கள்கல் சேர்பு கனையிருள் மடியின்
இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்
வளைக்கண் சேவல் வாளா து மடியின்
மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்
எல்லாம் மடிந்த காலை யொருநா
ணில்லா நெஞ்சத் தவர்வா ரலரே, அதனால்
அரிபெய் புட்டில் ஆர்ப்பப் பரிசிறந்
தாதி போகிய பாய்பரி நன்மான்
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கல்முதிர் புறங்காட் டன்ன
பல்முட் டின்றால் தோழி நங்களவே''.

(அகம், 122.)

காதலி ஒருத்தி காதலனைக் காண முடியாமல் நேரும் இடையூறுகளையெல்லாம் அடுக்கிக் கூறுகின்றார். அவள் நிலை மிகவும் இரங்கற்குரியது. காதலனைக்

காணும் அவாவில் ஊரில் விழவும் இழவாகத் தோன்று கின்றது. விழாவில்லையேல் அன்னை தூங்காள். அன்னை தூங்கின் காவலர் திரிவர். காவலர் தூங்கின் நாய் அப் பொழுதுதான் மகிழ்வாகக் குரைக்கும். நாய் வாயை மூடினால் 'வெண்ணிலா ஊரில் பிறந்த அவ்வெண் ணிலா' முகில்விட்டுப் பகல்போல் எரிக்கும். நிலவு மறைந்தாலோ, எலியை நினைத்துக் கூகை குழறும். கூகை மறந்தால் மனைக்கோழி விடிந்த தென்று கூவும். எல்லாம் தூங்கி ஏங்கி இருக்குங்கால் அந்நாளைப் பார்த்து அவனும் வாரான். சுடுகாட்டில் தட்டித்தட்டி விழச்செய்யும் முட்டுக்கற்கள் போலப் பல தடங்கல்களைக் கடக்க வேண்டியிருக்கின்றதே என்று ஏங்கும் தலைவி நமது இரக்கத்திற்குரியள்.

இத் தடங்கல்களில் நாய் குரைப்பதைமட்டும் பல நாட்டுக் கவிகளும் அறிஞர்களும் கூறிப்போயிருக்கின் றனர். ஸ்டீவென்சன், மாரிஸ் டெகெரென், அலெக் ஸாண்டர் குப்ரின் (Alexander Kuprin) என்ற உருசிய நாவலாசிரியர் ஆகியோர் நாய் குரைக்கும் நிகழ்ச்சியைக் குறிபபாகக் கூறியுள்ளனர். 'மைக்கால் மலை'களில் (Maikal Hills) வாழும் பழங்குடி மக்களின் காதற்பாட் டில் நாய் குரைப்பது கூறப்படுகின்றது.

"நள்ளிரவில் நாய்கள் குரைக்கின்றன
விண்மீன்கள் வானிடம் வந்துவிட்டன
இலை நீண்டவை, பசு மூங்கில்கள்
அவையூடே என்கள்வன் வருகின்றான்
நள்ளிரவில் நாய்கள் குரைக்கின்றன"

இந்த எளிய பழங்குடி மக்களின் பாடலில் நாய் குரைப்பதே முதலும் முத்தாய்ப்புமாக வருவது எண்ணி மகிழத் தக்கது. இவைபோன்ற எளிய பாக்

களாகத்தான் சங்கப் பாக்களும் பல நூற்றுண்டுகளுக்கு முன் தோன்றியிருக்க வேண்டும். "யாருமில்லைத் தானே கள்வன்" என்றே குறுந்தொகைக் காதலி காதலனைக் 'கள்வன்' என்றழைக்கின்றாள். அலெக்சாண்டர் குப்ரின் என்ற நாவலாசிரியர் எழுதிய ஒரு கதையில் ஒரு பல்கலைக்கழக மாணவன் தற்கொலை செய்துகொள்வதை வருணிக்கின்றார். துப்பாக்கியை மார்பில் வைத்துச் 'சாகலாமா சாகக்கூடாதா' என்று எண்ணிக் கொண்டிருக்கும்போது இடையிடையே அடிக்கடி நாய்கள் குரைப்பதைக் கேட்கின்றான். அது தவிர வேறெதுவும் அவன் சிந்தனையைத் தடை செய்வதில்லை. 'நாய்கள் குரைக்கின்றன' என்று பல முறை தனக்குள் கூறிக்கொள்கின்றான். கடைசியில் சுட்டுச் சாகின்றான். கவிகள், அறிஞர்கள், பழங்குடி மக்கள் முதலியோருக்கு மட்டுமின்றிச் சாகத் துணிந்தவனுக்கும் நாய் நள்ளிரவில் குரைப்பது ஒரு தனிக் கவர்ச்சியை உண்டுபண்ணியிருக்கின்றது. நாய்கள் நள்ளிரவில் குரைப்பது எளிய நிகழ்ச்சி; இயற்கைச் செய்தி; உலக நிகழ்ச்சி; பல கவிஞர்களைக் கவர்ந்த நிகழ்ச்சி; இதையே சங்கப் பாடல்களும் பிற பிற்காலப் பாடல்களும் பரக்கக் கூறக் காண்கிறோம். இதிலிருந்து பழந்தமிழருடைய இயற்கை ஈடுபாடும், நுண்ணிய உணர்வும் தெள்ளென விளங்குகின்றன. நாய் குரைப்பதுகூட அவர்களுக்கு அகத்திணையில் ஒரு பொருளாகத் தோன்றிற்று. தமிழரது அகத்திணை வாழ்க்கையில் எதுவும் விலக்கு அன்று.

இயற்கையொடு (Nature) உள்ளுணர்வை (Psychology) இணைத்துப் பார்க்கு முறை அறிவியல்

வளர்ந்தபின் தோன்றியதொன்று ; மிகப் பிற்காலத் தது. ஆனால் சங்க காலத் தமிழர் இயற்கை நிகழ்ச்சி கள் செய்திகள் (Natural Phenomenon) எல்லாவற்றை யும் நுண்ணிய உள்ளுணர்வொடு இணைத்துப் பார்த் திருக்கின்றனர். நிறத்திற்கும் இசைக்கும் (Colour Music) ஒப்புமை காணும் அளவு நுண்ணிய மனவுணர்ச்சி யுடையராயிருந்தனர். நிறத்தையும் ஒழுக்கத்தையும் இணைத்துப் பார்க்கும் நுண்ணுணர்வும் இருந்தது. கற்பிற்குச் சின்னமாக மேல் நாட்டில் வெண்மை யான 'லில்லி' (Lilly) என்ற பூவை இலக்கியத்தில் கூறுகின்றனர். ஓவியங்களில் வரைகின்றனர். சங்க காலப் புலவர்கள் வெள்ளை முல்லையைக் கற்புக்கு அறிகுறியாக அக்காலத்திலேயே கூறினர். பல்லாண்டு களுக்கு ஒரு முறை பிறந்து இறந்து, பிறந்து இறந்து வாழும் குறிஞ்சிப் பூவின் தேன் சாரலில் சேர்ந்து பெருந்தேனைவதுபோலப் பிறந்து இறந்து வாழும் எல் லாப் பிறப்பிலும் நாடனொடு நட்புக் கூடவேண்டும் என்று கூறக்கூடிய நுண்ணிய உள்ளுணர்வைப் பழந் தமிழிலக்கியத்தில்தான் காண முடியும். காதலர் கூட் டத்திற்குக் குறிஞ்சி நிலம், கூதிர்க்காலம், நள்ளிரவு என்று பொருத்தம் கூறும் உள நூலறிவினைச் சங்க இலக்கியத்தில்தான் அக்காலத்தில் காணமுடியும். அகத்திணையில் நாம் காண்பது சிறந்த ஒழுக்கம், உயரிய குறிக்கோள், நுண்ணிய உள்ளுணர்வு, ஆழ்ந்த ஆராய்ச்சி, பரந்த உலகியலறிவு, அஃகி அகன்றஇயற்கை யறிவு ; உலகம் அடங்கலும் அகத்திணையில் அடக்கிப் பார்த்த பழந்தமிழரின் அறிவைப் போற்றாதிருக்க முடியாது.

---

## 3. மருதம்

## (LAGERSTROEMIA FLOS—REGINA)

சங்க இலக்கியத்தில் கூறப்படும் செடிகளுள் காந்தளைப் போலவே பலவிடங்களிலும் பயின்றுவரும் மரம் மருதமரமேயாகும். தற்காலத்தில் பெரும்பாலோருக்கு மருதம் என்ற மரம் எதுவென்பதோ, அழகிய பூவையுடையது என்பதோ தெரியாது. ஆனால் சங்க காலத்தில் இம்மரத்தை மிகவும் நன்றாக அறிந்திருந்தனர் என்பது சங்கப் பாடல்களில் தெளிவாகத் தெரிகின்றது. தற்காலத்தில் மருது, மருதம் என்றால் உடனே 'அர்ஜுனம்' என்ற மரத்தைத்தான் காட்டுவர். சங்க காலத்தில் வழங்கிய அழகிய பூவையுடைய மரத்தை மறந்துவிட்டோம். அதன் பெயரால் அழகற்ற மரத்தை, பொருத்தமற்ற மரத்தை அழைக்கிறோம். தமிழ் நாட்டில், கருமருது, வெள்ளை மருது, கலிமருது என்று பல 'மருது' மரங்கள் மக்களிடையே வழங்குகின்றன. இவையெல்லாம் சங்ககால மருத மரமன்று. நிகண்டாசிரியர்கள் காலத்திலேயே சங்க கால மருதம் மறக்கப்பட்டுவிட்டது. நிகண்டுகளில் மருதம் என்பதற்குப் பொருள் 'அர்ஜுனம்' என்ற வடமொழிப் பெயர் கூறப்பட்டிருப்பதைக்கவனிக்கவும்; 'அருச்சுனம் மருதே' என்று சேந்தன் திவாகரம் கூறுகிறது. இந்த அர்ஜுனம் என்ற மரம் (Terminalia Arjuna) தமிழில் தற்காலத்தில் வெள்ளைமருது, குலமருது என்றழைக்கப்படுகிறது. அருச்சுன மரத்தின் பூக்கள் அழகற்றவை; சிறியவை; கண்களைக் கவரும் நிறமற்றவை. இதன் பசுமை கலந்த வெண்மையான மிகச் சிறிய பூக்களைக் கொத்தாகப் பார்க்கும்போது பிரித்துணர்வதே

அரிது. இத்தகைய அழகற்ற கண்ணைக் கவரும் ஆற்றலற்ற பூவையுடைய மரத்தின் பெயரால் தமிழர் தங்களுடைய நாகரீகத்தினையை அழைத்தார்கள் என்பது நம்ப முடியாதது. அழகுணர்ச்சியை எழுப்ப ஆற்றலற்ற, தகுதியற்ற ஒரு மரத்தின் பெயரால் தமிழர்கள் ஆற்றங்கரையோரத்திலே அழகின் செழிப்பிலே எழுப்பிய நாகரீகத்தை அழைத்திருக்க முடியாது. சங்கப் பாடல்களில் மருதமரம் அழகற்றதாகக்கூறப்படவில்லை. சங்கப்பாடல்களில் கூறப்பட்ட விளக்கத்திலிருந்து அஃது அருச்சுனம் அன்று என்பது நன்ருகத்தெரிகிறது. சங்கப்பாடல்களில் கூறப்பட்ட மருத மரம் தற்போது மிக அரிதாகச் சிலரால் 'பூமருது' என்று வழங்கப்படும் மரமேயாகும். இது பலருக்கும் தெரியாது. தற்காலம் வழங்கும் மருதுகளில் சிறந்த பூவையுடைய மருதைப் 'பூமருது' என்றழைக்கலாயினர். பழத்திற்காக அன்றி வெறும் பூவிற்காக, அழகிய பூவிற்காக வளர்க்கப்படும் தாதுமாதுளைச் செடியை 'பூமாதுளை' என்று அழைப்பதை நோக்குக. பூவெனப்படுவது பொறிவாழ் பூவே எனக் கூறப்படுவதுபோல் பூவழகிய மருதத்தை 'பூமருது' என்றும் பிற மருதங்களை கருமருது, வெள்ளை மருது என்றும் அதன் அடிமரங்களின் நிறங்களையொட்டி அழைத்தனர். மற்ற மருதுகள் மரப்பலகைக்குச் சிறந்தவையாகத் தற்காலம் இருக்கலாம். ஆனல் சங்ககால மருதம் பூவில் சிறந்தது. ஆகையால்தான் இக்காலத்தில் 'பூமருது' என்றழைக்கின்றனர். இப்பூமருதே உண்மையான மருதம். சங்ககால மருதம் என்பது சங்க நூல்களில் வரும்பல குறிப்புக்களைச் செடிநூல் அறிவோடு (Botany) ஆராயுங்கால் நன்கு விளங்குகிறது. பூமருதின் பூக்கள் சிறந்தவை. ஊதாநிறம் சிறிது

கலந்து இளஞ்சிவப்பான பெரிய இதழ்கள் (Flowers-often large, showy mauve) மருதம் பூவிற்கு உண்டு. இதன் பூ தொலைவிலேயே தெளிவாகத் தெரியும். கண்ணை ஈர்க்கும் மிக அழகு வாய்ந்த பூக்கள். ஆறு சிவந்த இதழ்கள் ஏந்திய தட்டுக்கள் போலத்தோன்றும். 'செவ்வீமருதென்று' சங்க நூல்களில் வழங்குவதி லிருந்து இது பச்சைகலந்த வெள்ளைப் பூவையுடைய அருச்சுனமன்று என்பதை எளிதில் தெரிந்துகொள்ள லாம். "முடக்காஞ்சி செம்மருதின்" என்று பொருந ராற்றுப் படையில் மருதின் சிவந்தபூ குறிப்பிடப்படு கின்றது.

"ஐயவீ யன்ன சிறுவீ ஞாழல்
செவ்வி மருதின் செம்மலொடு தாஅய்த்
துறையணிந் தன்றவ ரூரே........"

என்று வரும் குறுந்தொகைப்பாட்டில் மருதின் சிவந்த பூக்களிலிருந்து கீழே விழுந்த இதழ்கள் பரவிக் கிடந்ததே நீர்த்துறையை அழகு செய்வதாகக் கூறு வதைக் கவனிக்கவும். மருத மரங்கள் அழகு செய்த துறைகளை "விரிபூம் பெருந்துறை" 'நீர்ப்பூந்துறை' என்று சங்கப்பாடல்களில் அழைக்கப்படுவதிலிருந்தே மருதம்பூ நீர்த்துறையை அழகு செய்வதாக பழந் தமிழர் கருதினர் என்பது நன்கு விளங்குகிறது.

"...............................திண்காழ்
நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக்........"

என்று வரும் திருமுருகாற்றுப்படை வரிகளிலும் இளஞ்செந்நிற மூட்டப்பட்ட சந்தனக் குழம்பு மருத மலர்க்கொத்தை ஒத்திருப்பதாகக் கூறுவது கவனிக்கத்

தக்கது. செடி நூலாரும் இதன் பூ ஒருவகைச் சிவப்பு நிறம் (mauve) என்று கூறுவதை நோக்கவும். இதன் புறவிதழ் (புல்லிதழ்) கருப்பாக இருக்கும் என்று திரு முருகாற்றுப்படை கூறுகின்றது.

"..........................கருத்தகட்(டு)
உளைப்பூ மருதி னொள்ளிணர்........"

(முருகு வரி, 28)

செடி நூலாரும் மொக்கின் புறவிதழ் நீலங்கலந்த பச்சையாக இருக்கும் என்று கூறுவதையே (Buds, Bluish green) 'கருந்தகட்டு உளைப்பூ' என்ற வரிகளில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. இதில் 'உளைப்பூ' என்று கூறுவதைக் கவனிக்க வேண்டும். இதற்குப் பொருள் மேலில்' துய்யினையுடைய பூங்கொத்து என்று கூறப் பட்டிருக்கின்றது. மகரந்தத் தூள்கள் நிறைந்து வெளியே துய்போல் இருப்பதையே உளைப்பூ என்ற சொல் உணர்த்துகின்றது.

"உளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்கும்"

என்ற ஐங்குறுநூற்று வரிகளிலும் 'உளைப்பூ' மருதத் திற்கு இருப்பதாகக் கூறப்படுகிறது. இதுபோலப் பாதிரிக்கும் 'உளைப்பூ' இருப்பதாகச் சங்கப் பாடலில் கூறப்படுகின்றது. செடி நூற்படி இச்செய்தி முற்றி லும் உண்மையே. இதன் பூ மிக அழகாக இருப்பத னால்தான் பழந்தமிழிலக்கியத்தில் மலரை 'ஒள்ளிணர்' 'பூஞ்சினை' என்று அழைத்தனர். பூ முதிர்ந்த காலத் தில் இதழ்கள் கீழே விழுந்து நிலத்தில் அழகாகத் தோன்றும். இதனால்தான் 'செவ்வீ மருதின் செம்மலோடு' தாய் துறையணிந்ததாகக் குறுந்தொகைப் பாடல் கூறுகிறது.

சங்க நூல்களிலே பலவிடங்களில் மருதமரம் நீர் நிலைக் கருகாமையிலும் ஆற்றோரங்களிலும் காணப்படு வதாகக் கூறப்படுகின்றது.

"அறலவிர் வார்மணல் அகலியாற் றடைகரைத்
துறையணி மருது தொகல்கொள வோங்கி
(அகம், 97)

"மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை"
(அகம், 376)

"உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோடு ஏறிசீர் மிக"
(புறம், 243)

"தாழ்சினை மருதந் தகைபெறக் கவினிய
நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்பழித்துக்"
(அகம், 361)

"முடமுதிர் மருதத்துப் பெருந்துறை"
(ஐங்குறுநூறு, 31)

"மருதுயர்ந் தோங்கிய விரிபூந்துறை"
(ஐங்குறுநூறு, 33)

"கரைசேர் மருதமேவி......"
(ஐங்குறுநூறு, 74)

"மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்
மணன்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு"
(பதிற்றுப்பத்து, 23)

"துறைநணி மருத மேறித்"
(பதிற்றுப்பத்து, 27)

"திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை" (கலி, 27)

"வருபுனல் வையை மருதோங்கு முன்றுறை" (சிலம்பு,7 2)

"இறாஅ லருந்திய சிறுசிரல் மருதின்
றாழ்சினை யுறங்குந் தண்டுறை யூர" (அகம், 286)

"வருபுனல் வையை வார்மண லகன்றுறைத்
திருமரு தோங்கிய விரிமலர்க் காவின்" (அகம், 36)

"துறைநனி மருதத் திறுக்கு மூரோடு" (புறம், 344)

மருதமரம் ஆற்றருகே இயற்கையாகவே பெரிதும் காணப்படும் என்று (chiefly along river banks) செடி நூலில் கூறப்பட்டிருப்பதைக் கவனிக்கவேண்டும். சங்க நூல்களில் மருதம் ஆற்றருகே, துறையருகே காணப்பட்டதாகத் தெளிவாகப் பலவிடங்களிலும் கூறப்பட்டிருப்பது உண்மையான செய்தியாகும். சங்க காலத்திலும் பின்னுல் தேவார காலத்திலும் மருத மரங்கள் நீர்த்துறைகளில் சூழலாகக் காணப்பட்டன என்று , நன்கு தெரியவருகின்றது. 'திருமருதமுன்றுரை' 'திருமருத நீர்ப்பூந்துறை' என்றெல்லாம் பல பாடல்களில் கூறப்படுவதிலிருந்து மருதமரம் நீர்த் துறைகளை அணிசெய்வனவாகப் பழந்தமிழர் கருதினர் என்பது நன்கு விளங்கும். மருதமரம் துறைகளை அணி செய்ததனுல் 'திரு' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. மரங்களில் 'திரு' என்ற அடை மொழியொடு சங்க நூல்களில் வழங்கப்பட்ட மரம் மருதமொன்றே. திரு என்றுல் அழகு, திரு என்றுல் பெருமை, திரு என்றுல் மங்களம் என்ற பல பொருட்களையும் தாங்கிவரும் சொல்லை மருதத்திற்கு அடைமொழியாக வழங்கியிருப்பதிலிருந்து பழந்தமிழ ரிடையே மருதம் எந்த அளவு மதிக்கப்பட்டது என்பது தெரிகிறது. நாயன்மார்களாலும், ஆழ்வார்களாலும் பாடல்பெற்ற இடம் 'திரு' வென்ற அடைமொழி யுடன் பெயர்பெற்றிருத்தல்போல மருதம் அணி செய்யும் துறையும் 'திரு'வுடன் சேர்த்து அழைக்கப்

பட்டது. வயலும் வயல் சூழ்ந்த இடமும், மருதம் என்பது தெரிந்ததே. 'வயலுழை மருதின்' (புறம் 52) பெயரால் வயல் சூழ்ந்த இடத்திற்குப் பெயரிட்டனர். மருதத்திற்கும் நீர் சூழ்ந்த கழனிக்கும், பழனத்திற்கும் உள்ள தொடர்பை அழகுறப் பதிற்றுப்பத்துப்பாடல் விளக்குகின்றது.

"ஒலிதெங்கி னிமிழ் மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பின்
நாடுகவி னழிய நாமந் தோற்றி"

(பதிற், கங)

"மருதிமிழ்ந் தோங்கிய நளிரும் பரப்பின்
..........................................
கழனி வாயிற் பழனப் படப்பை
..........................................
அரூஅ யாணர வகன்றலை நாடே"

(பதிற், உங)

"தேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரியவெள் ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற லாயம்
முழவிமிழ் மூதூர் விழவுக்கா ணுப் பெயரும்
செழும்பல் வைப்பிற் பழனப் பாலும்"

(பதிற், ௩௦)

மருத மரத்தொடு தொடர்புபடுத்தியே பொய்கையும் துறையும் புனலும் வெள்ளமும் கூறப்படுவதையும் நோக்குக. இதன் காரணமாகவே வயலும் வயல் சூழ்ந்த இடமும் மருதம் என்று பெயரிடப்பட்டது. ஆற்றங்கரையோரம் வயலும் தோட்டமும் தோன்றிய

தனால் மருதத்திணையாகிற்று. ஆற்றங்கரையோரத்திலே தோன்றிய பண்பாட்டை, நாகரீகத்தை ஆற்றங்கரையருகே, ஆற்றின் துறையருகே காணப்பட்ட அழகிய பூவையுடைய மரத்தின் அல்லது பூவின் பெயரால் அழைத்தது, பழந்தமிழரின் திண்ணிய அறிவையும்,(Deep intellect) நுண்ணிய அழகுணர்ச்சியை (Subtle, Aesthetic sense) யும் தெள்ளிதாகக் காட்டுகிறது. இந்த மருதமரத்தையே சாலையோரங்களிலும் நீர்நிலையருகிலும், சோலைவளங்களிலும் வளர்த்து நகருக்கு அழகூட்டலாம் என்ற கருத்தை 2000 ஆண்டுகளுக்குப்பின் தற்காலத்து நகர அமைப்பாளர்களும் (Town planners) கூறுகிறுர்கள். இதிலிருந்து நகரத்திற்கு அழகூட்டத் தக்கதாகத் தற்காலம் கருதப்படும் மரத்தின் பெயரால் நாகரீகத்திணைக்குப் பெயரிட்டதன் பொருத்தம் நன்கு விளங்கும்.

"நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்
விடியல் வந்த பெருநீர்க் காவிரி"

(அகம், 226)

"................................காவிரிப்
பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த
ஏந்துகோட் டியானைச் சேந்தன் றந்தை"

(குறுந்தொகை, 258)

"வருபுனல் வைகை வார்மண லன்றுறைத்
திருமரு தோங்கி விரிமலர்க் காவின்"

(அகம், 66)

"வருபுனல் வையை மருதொரு முன்றுறை"

(சிலம்பு, 46)

என்று வரும் பாடல் வரிகள் மருதம் காவிரிக்கரையிலும் வையைக் கரையிலும் காணப்பட்டதைத் தெளிவாக்குகின்றன. தமிழர் நாகரீகம் காவிரி, வையைக்

கரைகளில் வளர்ந்ததை ஞாபகத்திலிருத்திக்கொள்ள வேண்டும். காவிரியில் மருதத்துறைகள் பல இருந்தன வாகத் தெரிகின்றது. காவிரியின் கரையிலிருந்ததாகத் தேவாரத்தில் கூறப்படும் 'இடைமருது' 'மத்யார் ஜுனம்' என்று வடமொழியாளரால் தவருக மொழி பெயர்க்கப்பட்டது. வையைக்கரையில் 'திருமருத முன்றுறை' இருந்ததைப் பரிபாடல் குறிப்பிடுகின்றது. சங்க காலத்திலேயே இருந்த இத்துறைகளை அழ குணர்ச்சியும் உண்மையான நாகரீகமும் குறைந்த பிற் காலத்தில் மருதமரங்கள் வெட்டப்பட்டு அழிக்கப்பட் டதால் காண்பது அரிதாகி விட்டது. மருதமரமே அரிதான மரமாகிவிட்டது. சங்ககாலத்தில் துறை தோறும் மருதமரங்கள் சூழ்ந்து காணப்பட்டன. இரண்டாயிரம் ஆண்டுகட்குப் பின்பு அவை இருந்த இடங்களும் தெரியாமல் போய்விட்டன.

மருதின் அடிமரம் வெண்மையாகக் காணப்படும். நீண்டு உயரமாகவும் அழகாகவும் காணப்படும். இதன் தோற்றம் கண்ணுக்கு இனிமையாக இருக்கும் (Tall, straight, handsome free) என்று செடிநூல் கூறுகிறது. இதையே, 'நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்' என்ற அகம் 226ஆம் பாடல் வரி கூறுகின்றது. திருமருதம் (Handsome) நெடுவெண்மருதம் (straight), உயர்சினை மருதம் (Tall) என்று பொருத்தம் காணலாம். இதன் அடிமரம் வெண்மையாக இருந்த காரணத்தினாலும் ஆற்றோரத்தில் காணப்பட்டதாலும், இதேபோன்று வெண்மையான அடிமரம் கொண்ட தற்காலம் ஆற் றோரத்திலே மிகவும் காணப்படும் அருச்சுன மரத்தை மருதமென்று மயங்கிக் கூறினர்.

மருதமரத்தின் காய்ந்த காயைப்பற்றியும் ஓரிடத்தில் குறிப்பு வருகின்றது.

"பழனப் பல்புள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுணர் உதிரும்"

(நற்றிணை, 350)

துணர் என்பது காயையே குறிக்கின்றது. மருதம் மிகச் சிறந்த மரமாகக் கருதப்பட்டதால் இதன் பெயரால் ஊர்களும் ஆறுகளும் இருந்தன. செந்தமிழ் நிலத்தின் தெற்கெல்லையாக மருதயாறு கூறப்படுகின்றது. மாங்குடி மருதன், மருதனிள நாகனார், மருதங்கிழார் என்ற புலவர்கள் சங்க காலத்தில் இருந்தனர். மருதன், மருதி என்ற பெயர்களும் சங்ககாலத்தில் வழங்கிவந்தன. இடைமருதில் இருந்த ஈசன் பெயரே இடைமருதன் என்று வழங்கப்பட்டது.

மருதமரம் செடிநூலில் LAGERSTROEMIA FLOS-REGINA என்று அழைக்கப்படுகிறது. இதன் பெயராலேயே இதனுடைய பெருமையையும் அருமையையும் செடிநூலார் குறிப்பிட்டது விளங்குகிறது. அரசிக்கு உகந்த பூ என்ற பொருளில் Flos-Regina என்றும், ஆங்கிலத்தில் 'The Queen's flower' என்றும் வழங்குகிறது. மற்றும் இதை ஆங்கிலத்தில் இந்தியாவின் பெருமை என்ற பொருளில் 'Pride of India' என்றும் கூறுவர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழரின் நாகரீகத்திற்குப் பெருமை தேடித்தந்த பெயர்போன பூவைத் தற்போது 'இந்தியாவின் பெருமை' என்றழைப்பது வியப்பே! சிங்களத்திலும் இதை 'மருது' என்றே யழைக்கின்றனர். இப்பெயர் தமிழிலிருந்து வந்ததாகத் தெரிகிறது. மலையாளத்தில்

அடம்பு, கடல்பூ என்றழைக்கின்றனர். தமிழிலக்கியத் தில் வரும் அடம்பு வேறு. மணிமருது என்றும் மலை யாளத்தில் வழ்ங்கும். தமிழகத்தில் கடலி, பூமருது என்று இன்று சிலவிடங்களில் வழங்குகின்றனர்.

மேற்கோள் நூல்கள் :

1. Botanical Survey of India-Flora of the Presidency of Madras - J. S. Gamble.

2. Flowering trees and shrubs in India - D. V. Cowen -

3. Manual of Indian Forest Botany - N. L. Bor.

4. Flora of British India - Hooker.

---

## 4. முல்லை, நெய்தல், பாலை

முல்லை :

முல்லைப்பூ சிறத்தலால் முல்லை நிலம் பெயர்பெற்றது என்பது யாவரும் அறிந்ததே. முல்லை என்பது காடும் காடு சார்ந்த நிலமும் என்று கூறுவர். முல்லை தொத்தி ஏறும் ஒரு செடியாகும். இஃது இயற்கையில் குறுங்காடுகளிலும் காடுசார்ந்த வெளிகளிலும் வளர்கின்றது. சங்க இலக்கியத்தில் மிகப் பல இடங்களில் முல்லையைப்பற்றிய செய்திகள் வருகின்றன.

"கோடலெதிர்முகைப் பசுவீ முல்லை"
(குறுந்தொகை, 62)

"......................புறவிற்
பாசிலை முல்லை யாசில் வான்பூ" (குறுந்தொகை, 108)

"முல்லை யூர்ந்த கல்லுய ரேறி" (குறுந்தொகை, 275)

"சிறுவீ முல்லைக் கொம்பிற் றூஅய்" (குறுந்தொகை, 348)

"தண்டுளிக் கேற்ற பைங்கொடி முல்லை
முகைதலை திறந்த நாற்றம் புதன்மிசைப்
பூமலி தளவமொடு தேங்கமழ்பு கஞல" (குறுந்தொகை, 382)

"பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை யிலங்கெயி றாக
நகுமே தோழி நறுந்தண் காரே" (குறுந்தொகை, 126)

"ஆர்கலி யேற்றொடு கார்தலை மணந்த
கொல்லைப் புனத்த முல்லை மென்கொடி
எயிறென முகைக்கு நாடற்கு" (குறுந்தொகை, 186)

"இருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை
வெருகுசிரித் தன்ன பசுவீ மென்பிணிக்
குறுமுகை யவிழ்ந்த நறுமலர்ப் புறவின்"
(குறுந்தொகை, 220)

"முகைமுற் றினவே முல்லை..............."

(குறுந்தொகை, 188)

குறுந்தொகையிலே முல்லையைப்பற்றிக் கூறப்பட்டவை மேலே பாடல்வரிகளாகும். ஏனைய நூல்களிலும் முல்லையைப்பற்றி நிறையக் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

முல்லை ஒரு கொடி என்று சங்க நூல்களில் கூறப்பட்டிருக்கின்றது; கல்லுயரே ஏறுவதாகக் கூறப்படுவதைக் கவனிக்க வேண்டும். செடி நூலில் தவழும் செடியாகவே (climbing shrub) இது கூறப்படுகின்றது. 'முல்லை மென்கொடி,' 'பைங்கொடி முல்லை' என்று அழைக்கப்படுகின்றது. முல்லைச் செடியின் புதிய கிளைகள் மென்மையாக இருக்கும் என்று செடிநூல் கூறும். முல்லையின் இலைகளைப் 'பாசிலை' என்று சங்க நூல்கள் அழைக்கின்றன. செடி நூலிலும் இதன் இலைகள் அகன்றதாயும் கரும்பச்சையாயும் இருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. முல்லையின் பூ 'பசுவீ முல்லை' 'சிறுவெண்முகை' 'சிறுவீமுல்லை' என்று கூறப்பட்டிருக்கிறது. இதன் பூ தொகுத்துக் காணப்படும் என்ற பொருளில் குறுந்தொகை 126 ஆம் பாடலில் 'தொகுமுகை' என்று கூறப்படுகிறது. செடி நூலிலும் இது தொகுத்துக் காணப்படும் ஒருவகை இணரில் (Many flowered, corymbose cyanes) மலர்வதாகவே கூறப்படுகின்றது. இதன் பூவை மகளிரின் பல்லுக்கு உவமித்துக் கூறுவது சங்க இலக்கியத்தில் மிகப்பரவலான வழக்கு. மகளிரின் பல்லை விதந்து கூறுவதற்காகவே முல்லைமொக்கு உவமையாகக் கையாளப்படுகின்றது. இன்னும் பொருத்தமாகக் குறுந்தொகை

யிலும் (220), புறம் 117 ஆம் பாட்டிலும் முல்லை மொக்கிற்குக் காட்டுப்பூனையின் பல் ஒப்பிடப்பட்டிருக்கின்றது. முல்லையின் முகை 3/4 அங்குல நீளமிருக்கும். கூர்மையாகவும் வெண்மையாகவும் இருக்கும். இதனால் முல்லைமொக்கு காட்டுப்பூனையின் பல்லிற்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. முல்லையின் விரிந்த பூவைவிட மொக்குத்தான் 'வெண்முகை' 'தொகுமுகை' 'குறுமுகை' என்று கூடுதலாகப் பாடப்பட்டிருக்கின்றது. முல்லை முகைத்தலையும், முகையின் தலைதிறந்து வீசும் நறுமணத்தையும், முல்லை 'மென்பிணி' அவிழ்தலைப் பற்றியும் பாடியிருப்பதைக் காண்கிறோம். முகைத்தல், முகை முற்றல், முகையவிழ்தல் என்ற மூன்று பருவங்கள் கூறப்படுகின்றன.

முல்லைமலர் வெள்ளியதாகவும், சிறந்த மணமுடையதாகவும், தூயதாகவும் காணப்படுவதால் முல்லைமலரைக் கற்புக்கு அறிகுறியாகப் பழந்தமிழர் கொண்டனர். குறுந்தொகை 108 ஆம் பாடல் "முல்லை ஆசில் வான்பூ" என்று கூறுவதை நோக்கவும்.

> "குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த
> முல்லை சான்ற கற்பின் மெல்லியல்"
>
> (சிறுபாணாற்றுப்படை, 29-30. வரி)

கற்பிற்கு முல்லைப்பூ பொருந்துவதாகச் சிறுபாணாற்றுப்படை கூறுவதை எண்ணிப் பார்க்கவேண்டும். ஐரோப்பிய இலக்கியத்திலும் தூய, வெள்ளிய 'லில்லி' (Lily) மலர் கற்பிற்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. தூய்மைக்கும் ஒப்பிடப்பட்டிருக்கின்றது. முல்லைச்செடி கார் காலத்தில் பூப்பதாகச் சங்க நூல்களிற் பலவிடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. மழை பெய்தலை எதிர்

பார்த்துப் பூப்பதாகவும் கூறுவர். முல்லைச்செடி கார் காலத்தில் பூப்பதாகச் செடிநூலும் கூறுகிறது. தமிழ் நாட்டில் மழைக்காலமான ஆகஸ்டு முதல் அக்டோபர் வரை பூப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. முல்லைச் செடியைப்பற்றிச் சங்கப்புலவர்கள் நன்கு அறிந்திருந் தார்கள். செடிநூலில் முல்லைச் செடியை 'Jasminum Auriculatum' என்று வழங்குவர்.

நெய்தல் :

நெய்தல்திணை நெய்தல் சிறத்தலால் பெற்ற பெயர் என்று இளம்பூரணர் தொல்காப்பிய உரையில் கூறினர். கடலும் கடல் சார்ந்த நிலமும் நெய்தற்றிணை என்று கூறப்படும். இந்தக் கடல் சார்ந்த இடத்தில் நெய்தற் செடி காணப்படுகின்றது. கடலோரங்களில் கழிகளில் நெய்தல் செடி காணப்படுவதாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. 'இருங்கழி நெய்தல்' என்று குறுந்தொகைப்பாடல் 336 கூறும். இருங்கழி ஓரத் தில் கழிசேர் மருங்கில் நெய்தல் மலர்வதாகக் கூறப்பட் டிருக்கின்றது. செடிநூலிலும் மேற்குக்கடற்கரையில் கழிகளில் (Backwaters) காணப்படுவதாகக் கூறப்பட டிருக்கிறது.

"பாசடை நிவந்த கணைக்கா னெய்தல்
இனமீ னிருங்கழி யோத மல்குதொறும்"

(குறுந்தொகை, 9)

"இருங்கழி ஓதம் இல்லிறந்து மலிர
வள்ளிதழ் நெய்தல் கூம்ப......" (நற்றிணை, 117)

"பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
பூவுடன் நெறிதரு தொடலை தைஇக்" (நற்றிணை, 138

" கழிசேர் மருங்கிற் கணைக்கா னீடிக்
கண்போற் பூத்தமை கண்டு நுண்பல
சிறுபா சடைய நெய்தல்......" (நற்றிணை, 27)

" நெய்தற் பாசடை புரையும் அஞ்செவிப்
பைதலங் குழவி தழீஇ ஒய்யென " (நற்றிணை, 47)

" மணிப்பூ நெய்தல் மாக்கழி நிவப்ப " (அகநானூறு, 240)

" இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்
கமழிதழ் நாற்றம் அமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினம் களிசிறந்து "
(அகநானூறு, 170)

" கழியே, சிறுகுர னெய்தலொடு காவி கூம்ப
எறிதிரை யோதந் தரலா னாதே " (அகநானூறு, 350)

நெய்தற் செடியின் இலை 'பாசடை' என்று அழைக் கப்படுகின்றது. நீரில் வாழும் தாமரை, ஆம்பற் கொடி களின் இலைகளை 'அடை' என்று வழங்குவது சங்க நூல் வழக்கு. பிற்காலத்தில்தான் 'அடை' என்ற சொல் சிறப்பாக வெற்றிலைக்கும் அடைக்காய் என்பது பாக் குக்கும் வழங்கலாயின. நெய்தலின் இலை தாமரை யைப் பார்க்கிலும் சிறியதாய் இருந்ததால் 'சிறு பாசடைய' நெய்தல் எனப்பட்டது. தாமரை, ஆம்பல், மொக்குகளைவிடச் சிறியதாக இருந்ததால் "சிறுகுரல் நெய்தல்" எனக் கூறப்பட்டது. நெய்தலின் இலை சிறிய யானைக்குட்டியின் காதுபோலக் காணப்படுவ தாகக் கூறப்பட்டிருக்கின்றது. யானையின் காதில் காணப்படும் வரிகளும் செய்ப்பும் நெய்தல் இலையில் காணப்படும் நரம்புகளுக்கும், மெழுகு பூசினாற் போன்ற வழவழப்புக்கும் உவமையாகக் கூறப்பட் டிருக்கின்றது. நெய்தல் மலர் நன்றாக இலைகளுக்கு

மேல் வெளியே நீட்டிப் பூப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. 'கணைக்கால் நெய்தல்' என்று பலவிடங்களில் பேசப்படுகின்றது. 'கண்போல் நெய்தல்' என்றும் கூறப்படுகின்றது. நெய்தல் மலர் கருநீலமானது. அதனால் அதைக் கருப்பு நிறமானது என்றே கூறுவர்; இதன் நிறம் கருமை என்று கருதியே கண்ணுக்கு உவமிக்கப்பட்டது. இதன் பூவை 'மணிப்பூ' என்றும் கூறுவர். மணிபோல நீல நிறத்தையுடைய பூவென்று பொருள் கொள்ளவேண்டும். நெய்தல் மலர் நறுமணமுடையது என்றும் இதன் தாதை வண்டினம் விரும்புவதாகவும் கூறப்பட்டுள்ளது.

நெய்தல் செடியைச் செடிநூலார் "Nymphae Stellata" என்று பெயரிட்டழைப்பர். இதை அழகுக்காக வளர்ப்பதுண்டு. இதையே நீலோற்பலம், நீலம், கருநெய்தல், கருங்குவளை, பானல் என்று பலபெயரால் மயங்கிக் கூறுவர். ஒரே இனமான, 'Nymphae Stellata' என்பதில் வெண்மை, சிவப்பு, நீலம், கருநீலம், ஆகிய நிறங்களுடைய பூக்கள் கொண்டவை உள்ளனவாக செடிநூல் கூறும். அதில் கருநீல நிறமுடையதையே 'நெய்தல்' என்று சங்க நூல்கள் கூறுவதாகத் தெரிகிறது.

பாலை :

பாலை என்பது முல்லையும் குறிஞ்சியும் திரிந்த வடிவம் என்று கூறுவர். இருப்பினும் வறட்சியான நிலத்தையும் பாலை என்று கூறும் வழக்கும் உண்டு. அத்தம், சுரம் என்று பாலை நிலத்தை வழங்குவர். மழையற்ற வறட்சியான பாலை நிலத்துக்கு உரியதாகப் பாலை மரம் சங்ககாலத்தில் வழங்கப்பட்டது.

"பாலை நின்ற பாலை நெடுவழி"

(சிறுபாணாற்றுப்படை, வரி 11)

என்று கூறப்பட்டிருக்கின்றது. பாலைமரங்கள் நின்ற பாலைநில வழி என்று கூறப்பட்டதிலிருந்து பாலை என்ெறாரு மரம் இருந்தது தெரியவருகின்றது. பாலை என்பது என்னசெடி என்பது ஆராயவேண்டிய செய்தியாகும். பாலையைப் பற்றிச் சங்கநூல்களில் ஒரே ஒரு விளக்கம் நற்றிணைப்பாடல் 107 இல் காணப்படுகிறது. இதிலிருந்து பாலை எதுவென்று உறுதியாகக் கூற முடிகின்றது.

"உள்ளுதொறு நகுவேன் றோழி வள்ளுகிர்ப்
பிடிபிளந் திட்ட நாரில்வெண் கோட்டுக்
கொடிறுபோல் காய வாலிணர்ப் பாலைச்
செல்வ(ளி) தூக்கலி னிலைநீர் நெற்றங்
கல்லிழி யருவியி னொல்லென வொலிக்கும்"

(நற்றிணை, 107)

மேற்கூறிய பாடலில். யானையானது பாலையின் நாரைப் பிளப்பதால் 'வெண்கோட்டுடன்' பாலைமரம் தோன்றுகின்றது என்று கூறப்படுவதை நோக்கவேண்டும். இதன் அடிமரம் மிகவெண்மையாகக் காணப்படும். இதனால் இந்த மரத்தைத் 'தந்தப்பாலை' என்றும், ஆங்கிலத்தில் 'Ivory wood' என்றும் அழைக்கின்றனர். சங்ககாலப் பாலை மரத்தை இதுதான் என்று அறுதியிட்டு உணர "கொடிறு போல் காய வாலிணர்ப் பாலை" என்ற வரிகள் மிகவும் உதவுகின்றன.

பாலைமரத்தின் காய் பற்றுக்குறடு போலிருப்பதாகக் கூறப்பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். பற்றுக்குறடு இரண்டு பிரிவாக நீட்டிக்கொண்டு

இருக்கும். ஈயம் பூசுங்கால் குறட்டின் இருபாகங்களும் சேரும். பாலையின் காயும் ஒன்றாகத்தோன்றி இரண்டாகப் பிரிந்து கடைசியில் சேருகின்றது நன்றாகப் பார்த்தவர்களுக்குப் பற்றுக்குறடு போல் தெரியும். இது குறடு போலிருப்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. குறட்டின் இரண்டு கம்பிகள் போல இரண்டு காய்களும் நீண்டு காணப்படும். பற்ற வைக்குங்கால் நுனிகள் ஈயம்பூசப் பெற்றதுபோல் இரட்டைக் காய்களும் நுனியில் சேர்ந்து வெண்மையாகவும் இருப்பதைக் கண்டவர்க்குக் "கொடிறுபோல்காய" என்ற உவமையின் நுட்பம் நன்கு விளங்கும்.

பாலையின் மலர் கொத்தாகவும் வெண்மையாகவும் இருக்கும். நற்றிணையிலும் 'வாலிணர்' என்றே இதன் வெண்மையான பூங்கொத்து அழைக்கப்படுகின்றது; சங்க இலக்கியத்தில் பாலை என்று கூறப்படும் மரம் செடிநூலில் 'Wrightia tinctoria'' என்றழைக்கப்படுகிறது. இது தமிழில் பாலை, தந்தப்பாலை, வெப்பாலை, நிலப்பாலை என்றழைக்கப்படுகின்றது. மலையாளத்திலும், தெலுங்கிலும் 'பாலா' என்றழைக்கப்படுகின்றது.

தமிழில் வேறொரு இனமரமும் வெப்பாலையென்று அழைக்கப்படுகின்றது. இது செடிநூலில் "Halarrhena Antidysenterica" என்றழைக்கப்படும். இதையும் தமிழில் 'வெப்பாலை' என்றழைக்கின்றனர். ஆனால், இது சங்க நூல்களில் கூறப்பட்ட உண்மையான பாலையன்று. இதன் காய்கள் இரட்டையாக மிக நீண்டு தொங்கும். ஆனால் பற்றுக்குறடுபோல் காணப்படுவதில்லை. நுனியில் காய்கள் இணைந்து இருப்பது இல்லை. பார்ப்

பதற்கும் இரு மரங்களும் பூவின் நிறத்திலும் காயின் உருவிலும் மரத்தின் வெண்மையிலும் ஒத்துக் காணப் படுவதால் இரண்டுக்கும் பாலையென்ற பெயர் வழங் கிற்று. சங்க நூல்களில் கூறப்பட்ட பாலையையே தற்காலத்தில் "நிலப்பாலை" என்றழைக்கின்றனர். இந்தப் பெயரே உண்மையான பாலை மரத்தைக் கண்டு பிடிக்க உதவுகிறது. மற்றொரு பாலை மரத்தைச் சிலப் பதிகாரம் 'குடசம்' என்றழைக்கிறது. இதற்குப் பொருள் 'வெட்பாலை விசேடம்' என்று கூறப்பட்டிருக் கின்றது. அஃதாவது வெட்பாலையில் இஃது ஒரு சிறப்பு இனம் என்பதாகும். 'குடசம்' என்ற பெயர் 'குடஜா' என்ற வடமொழிச் சொல்லிலிருந்து தோன்றியது. பாலைமரத்தின் ஒரு சிறப்பு இனத்தைப் பிரித்துக் காட்ட வடமொழிப் பெயரைப் பயன்படுத்தியிருக் கின்றனர். குறிஞ்சிப்பாட்டிலும் பாலையென்றே பாலைப் பூவும், 'வால்பூ குடசம்' என்று வெள்ளிய பூவினை யுடைய வெட்பாலைப்பூவும் தனித்தனியே குறிக்கப் பட்டதிலிருந்து இந்த இரண்டு பாலை மரங்களையும் அந்தக் காலத்தில் பிரித்துணர்ந்திருந்தனர் என்பது நன்கு தெரிகிறது. உண்மையான பாலைமரம் வறிதே "பாலை" என்று குறிக்கப்படும்போது, பாலையின் இனச் சிறப்பு "வால்பூ குடசம்" என்று குறிஞ்சிப்பாட்டில் குறிக்கப்பட்டிருப்பதைக் கவனிக்கவேண்டும். இந்தக் குடசம் என்பதே 'Hollarhena Antidysenterica' (Easter tree) என்று அழைக்கப்படுகின்றது. ஆனால் சங்க நூற்களில் கூறப்படும் பாலை, பாலைத்திணைக்குப் பெயர் கொடுத்த பாலை செடிநூற்படி 'Wrightia Tinctoria' என்பதில் ஐயத் திற்கிடமில்லை. இந்த வேற்றுமையை உணராத பிற்கால

நிகண்டாசிரியர்கள் இதனையும் பாலையையும் ஒன்றா கவே கொண்டு மயங்கினர். 'குடசம் வெட்பாலை' என்று திவாகரம் கூறிற்று. வெட்பாலையின் பெயர் குடசம், கிரிமல்லிகை என்று சூடாமணி நிகண்டு கூறியது. பிற் காலத்தில் இதைக் குடசப்பாலை என்று கூறினர். பாலைக்கும் குடசத்திற்கும் உள்ள வேற்றுமையை எளிதில் கண்டுணராது மயங்குவர் என்று செடிநூலி லும் கூறப்பட்டுள்ளது. இரண்டுக்கும் வெண்மையான பூக்களிருப்பினும் குடசப்பூ நறுமணமுடையதென்று செடிநூலில் கூறப்பட்டுள்ளது. இதன் பூ நறுமண முடையது என்பதைப் பழந்தமிழர் உணர்ந்திருந்தனர் என்பது சிலப்பதிகாரத்திலிருந்து தெரிகின்றது. சிலப் பதிகார உரையில் முப்பத்திரு ஓமாலிகையில் ஒன்றாக குடசப்பூ கூறப்பட்டிருக்கின்றது. மற்றும் "குரற்றலைக் கூந்தற் குடசம் பொருந்தி" என்று ஊர்காண் காதை (87ஆம் வரி)யில் கூறப்பட்டிருக்கின்றது. இதிலிருந்து மகளிரின் கூந்தலில் மணமூட்டுவதற்காகக் குடசம் அணியப்பட்டது என்பது தெரிகின்றது. மணம் பொருந்திய குடசம் வேறு. சங்க நூல்களில் வரும் பாலை வேறு. சங்ககாலத்தில் ஒரே பாலையினம்தான் கூறப்பட்டது. அது பாலையில் மிகுத்துக் காணப்பட்ட தால் பாலை நிலத்துக்குப் பெயர் மரத்தின் பெயரால் இடப்பட்டதாகத் தோன்றுகின்றது. இப் பாலைமரம் வறட்சியான மணற்பாங்கான இடங்களில் காணப் படுவதாகச் செடிநூல் கூறுகிறது. பிற்காலத்தில் இதை நிலப்பாலை என்று பெயரிட்டனர். குடசத்தைக் 'கிரிமல்லிகை' என்றும் அழைத்தனர். மணமுடைய தாக இருப்பதால் மல்லிகைக்கு ஒப்பிட்டுக் கூறினர்.

பாலை மரத்தின் இலைகள் ஜனவரி – பிப்ரவரியில் விழுந்துவிடுகின்றன. அதே சமயத்தில்தான் அதன் காய்கள் நன்றாக முற்றி நெற்றாக மாறுகின்றன. இதையே நற்றிணை வரிகள் "இலைதீர் நெற்றங் கல்லிழி யருவியின் ஒல்லெனெ ஒலிக்கும்" என்று இலை தீர்ந்த காலத்தில் காற்றில் ஒலித்ததாகக் கூறின. இதுவும் செடிநூற்படி உண்மையான செய்தி. ஒரே பாட்டில் பாலைமரத்தின் முக்கிய தன்மைகள் விளக்கப்பட்டுள் ளன என்பதைக் கவனிக்கவேண்டும். பாலை மரம் நாரு டைய பட்டையையுடையது, பட்டையுரித்த மரக் கொம்பு வெண்மையானது, பூக்கள் வெண்மையா னவை, கொடிறுபோன்ற காயையுடையது, இலைதீர்ந்த காலத்தில் காய் நெற்றுவது ஆகிய குணங்கள் கூறப்பட் டுள்ளன.

பாலை மரத்தைத் தெலுங்கில் 'தெள்ளப் பாலா' என்றும், கன்னடத்தில் 'வெப்பாலா' என்றும் அழைக் கின்றனர். இந்தியில் 'காலா குடா' என்று கூப்பிடு கின்றனர். குடசம் என்ற வடமொழிப் பெயர் இந்திப் பெயரில் வருவதாகத் தெரிகின்றது. குடசத்தை இந்தியில் 'குடா' என்றும், மராத்தியில் 'கொடகா' என்றும் அழைக்கின்றனர். இதிலிருந்து பிறமொழி களிலும் குடசத்தையும் பாலையையும் ஒன்றாகக் கருதி மயங்கினர் என்றுந் தெரிகிறது.

———

## 5. காந்தள்

தமிழிலக்கியத்தில் போற்றப்படும் அழகிய பூ காந்தள் பூவாகும். இப்பூ தமிழ்க் கடவுள் முருகனுக்குரிய பூவாகக் கருதப்பெற்றது. மழைக் காலத்தில் வேலி யோரங்களில் பூத்துக் குலுங்கும் இக்காந்தளைச் சிற்றூர்களிலும் வயற்புறங்களிலும் வாழும் மக்கள் நன்ருக அறிவர். ஆனல் 'காந்தள்' என்ற பெயர் இதற்குப் பழந்தமிழர் இட்ட பெயர்தானு என்பது தெரியாது. இதற்குப் பல பெயர்கள் தமிழ் நாட்டில் உண்டு. எல்லாம்காரணப் பெயர்கள். கார்த்திகைப் பூ என்றும், கலப்பைக் கிழங்கு என்றும், காக்கைமூக்குச் செடி என்றும், தற்காலத்தில் வழங்குகின்றனர். கார்த்திகைக் காலத்தில் பெரும்பாலும் பூப்பதால் இதைக் கார்த்திகைப்பூ என்று வழங்கினர். பிற காலங்களில் வேலியில் கொடியாகப் படர்ந்திருப்பதை எளிதாகப் பிரித்துணர முடியாது. ஆனல் பூக்கும்போது பளிச்சென்று தெரியும். இதன் கிழங்கு கலப்பையைப் போலிருப்பதால் கலப்பைக் கிழங்கு என்று பெயரிட்டனர். கோயம்புத்தூர்ப் பகுதிகளில் இதைக் 'காக்கைமூக்குக் கொடி' என்று அழைப்பர். இதன் காய் நீண்டு காக்கை மூக்குப் போல் சிறிது வளைந்து உருவத்தில் ஒத்திருப்பதால் இப்பெயர் பெற்றது.

செடிநூற்படி இஃது ஒரு கொடி. இது கார் காலத்தில் (Summer rains) பூக்கும். இதன் தண்டு மெல்லியதாகவும், இலைகள் ஒள்ளிய நெய்ப்புடன் அழகாகவும் இருக்கும். இலைகளின் நுனிகளில் மெல்லிய கம்பிகள் உண்டு. கம்பிகள் வேலியையோ பிற மரச் செடிகளையோ தழுவி ஏற உதவுகின்றன. இதன் பூ மிக அழ




காந்தள்
(பூவின் பருவ நிலைகள்)

காகவும் தோற்றமாகவும் இருக்கும். ஒரே பூவில் காணப்படும் மாறுபட்ட நிறங்கள் கண்களை ஈர்க்கும். பூவில் ஆறு அழகிய பூவிதழ்கள் புரிவுகளோடு இருக்கும். பூக்கும்போது இவ்விதழ்கள் இளம்பச்சை நிறமாகவும், பின்னர் மஞ்சளாகவும் கிச்சிலி நிறமாகவும், இறுதியில் சிவப்பு, கடுஞ்சிவப்பாகவும் (crimson) மாறுவது வியப்பூட்டுவதாகும். மற்றும் இதழ்களின் அடிப்பகுதி ஒரு நிறமாகவும், நடுப்பகுதி வேறு நிறமாகவும், நுனிப் பகுதி பிறிதொரு நிறமாகவும், ஓரங்கள் வெவ்வேறு நிறமாகவும் காணப்படுவது இப்பூவின் தனித் தன்மையாகும். இதன் காரணமாகவே இதைச் சீனர்களின் பல்நிற, ஒளிநிற விளக்குகளுக்கு (chinese lantern) ஒப்பிட்டு, மலேயாவில் பெயரிடப்பெற்றிருக்கிறது. இதன் மகரந்தத்தாள்கள் பல திசைகளில் நீட்டிக்கொண்டு வெளிப்படையாகத் தெரியும். வெயிலில் ஒள்ளிய நெய்ப்புடன் பச்சைப்பசேலென்று தோன்றும் இலைகளுடன், தண்டுடன் நிறம்நிறமாகக் காணப்படும் பூக்களுடன் கூடிய காந்தள் செடி கண்ணுக்கு மிக இனியதாக இருக்கும்.

சங்க நூல்களில் மற்றைச் செடி கொடிகளைவிட மிகப் பல விடங்களில் கூறப்படுவது காந்தள் பூவேயாகும். இதிலிருந்து காந்தளை அதன் அழகுக்காக எவ்வளவு போற்றினர்கள் என்பது தெரியும். இதற்குக் கிழங்கு உண்டு. கிழங்கு மூலமாக வளர்வது. கிழங்கு கலப்பை உருவினதாக இருக்கும். இந்தச் செடியை அழகுக்காகத் தொட்டியில் வளர்க்கும் வழக்கம் பரவி வருகின்றது. அதனால் இதன் கிழங்கைப்

பாடம்செய்து விற்கிறார்கள். இதன் கிழங்கைப்பற்றிச் சங்கநூல்களில் இருபாடல்கள் கூறுகின்றன.

> " ..................................அவர்மலை
> மாலைப் பெய்த மணங்கம ழுந்தியொடு
> காலை வந்த காந்தள் முழுமுதல்
> மெல்லிலை குழைய முயங்கலும்"... (குறுந், 361)

> " கறிவள ரடுக்கத்து மலர்ந்த காந்தட்
> கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டிக்......" (புறம், 168)

மாலையில் மலையில் பெய்த மழையருவி காலையில் காந்தள் செடியைக் கிழங்கொடு அடித்துக்கொண்டு வந்ததாகக் கூறுவது நோக்கத்தக்கது. மோந்தாலும் குழைந்துவிடும் என்று அதன் இலையின் மென்மைத் தன்மை கூறப்பட்டிருக்கின்றது. செடி நூலாரும் இதன் இலை மென்மையானது என்றே கூறுகின்றனர். (Leaf blade soft, smooth and bright.) இதன் இலைகள் வாழைமடல் போல உருவிலும் அமைப்பிலும் இருப்பதால் 'கொழுமடல்' என்று கூறப்பட்டிருக்கின்றது. காந்தள் பூக்கும்போது நீண்ட காம்பை வெளிநீட்டி நுனியில் பூக்களைக் காட்டுகின்றது. இதனால் சங்கப் பாடல்களில் துடுப்புடன் கூடிய காந்தள் பூ என்றும் 'குலைக்காந்தள்' என்றும் விளக்கப்படுகின்றது. பூக்கும் காலத்தில் பல நீண்ட காம்புகளில் பூக்கள் தோன்றுவதால் "பல்துடுப்பெடுத்த வலங்குகுலைக் காந்தள்" என்று அகம். 108 கூறுகின்றது. "காந்தட் குலைய வீழ்ந்த நயவருஞ் சாரல்" என்றும், "அகலிலைக் காந்த ளங்குலைப் பாய்ந்து" என்றும் கூறப்பட்டுள்ளது.

காந்தள் பூவின் மொக்கு நீண்டு சிறிது நுனி வளைந்து கூர்மையாகக் காணப்படும். மொக்கு மலரும்

பருவத்தில் நுனியில்மட்டும் மலரிதழ் சிவந்து காணப் படும். மற்றப் பகுதிகள்பச்சையாகவிருக்கும். இதையே,

"கொன்ற யானைக் கோடுகண் டன்ன
செம்புடைக் கொழுமுகை யவிழ்ந்த காந்தள்"
(நற்றிணை, 294)

"புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல
உயர்முகை நறுங்காந்த ளுடோறும் புதிதீன"
(கலித்தொகை, 53)

என்ற பாடல்கள் வருணிக்கின்றன. யானையின் குருதி தோய்ந்த கோடு போலக் கொழு முகை இருப்பதாகக் கூறுவது பொருத்தமான உவமை. இது போன்றே மொக்கை மாதரின் நுனி சிவந்த விரலுக்கு ஒப்பிடுவதும் உண்டு. "காந்தள் முகை புரைவிரல்" என்று புறம். 144 கூறுகிறது. காந்தள் பூக்கும் காலத்தில் நாள்தோறும் புதிய பூக்கள் மலர்வதும் ஒரே செடியில் பல பருவ நிலைகளில் பூக்கள் காணப்படுவதும் உண்மையே.

காந்தள் பூ மிக அழகிய பூ. சங்க நூல்களில் இதன் பூ பலவாறாக உவமிக்கப்படுகின்றது. முதிரும் பருவத்தில் பூ நன்றாகச் சிவந்து காணப்படுவதால் குருதியின் நிறத்தோடு ஒப்பிடப்படுகின்றது.

"குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" (குறுந்தொகை, 1)
"தோடார் தோன்றி குருதி பூப்ப" (முல்லைப்பாட்டு, 96)
"காந்தட் குருதி யொண்பூ" (நற்றிணை, 34)
"குருதியொப்பின் கமழ்பூங் காந்தள்" (நற்றிணை, 399)
"குருதி மலர்த் தோன்றி" (கைந்நிலை, 26)

முதிர்ந்த நிலையில்தான் இதன் பூவிதழ்கள் நன்றாக முற்றும் சிவந்து காணப்படும். நீண்ட காம்புடன்

கூடிய நீண்ட பூவிதழ்கள் முதலில் தலைகீழாகத் தொங்குவது போலிருக்கும். அப்போது பூவிதழ்கள் பச்சை, மஞ்சள், வெண்மை கலந்த சிவப்பு நிறமாக மாறிமாறித் தோன்றும். ஆனால் பூ முதிர்ந்த பருவத்தில் இதழ்கள் செங்குத்தாக மேல் நோக்கித் தோன்றும். மேல்நோக்கியிருக்கும் இதழ்கள் வளைந்து காணப்படும்போது சேவலின் சிவந்த கொண்டை போலத் தோன்றும்.

"குவியிணர்த் தோன்றி யொண்பூ வன்ன
தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்"

(குறுந்தொகை, 107)

"கொய்ம்மலர தோன்றிபோற்
சூட்டுடைய சேவலும்." (சீவகசிந்தாமணி, 73)

இம்முறையாகத் திரும்பும் இயக்கமுடைய பூ, செடிகளில் காணப்படுவது மிகவும் அரிது. காந்தள் பூ நெருப்புப் போலவும் விளக்குப்போலவுந் தோன்றுவதாகவும் கூறப்படுகின்றது.

"எரி மருள் தோன்றி" (அகம், 218)

"தோன்றி தீயென மலரா" (பரிபாடல், 11:21)

கல்லாடத்தில் "தோன்றி மரகதத் தண்டின் விளக்கு எடுப்ப" என்று அழகாகக் கூறப்பட்டிருக்கின்றது. "பல்வயின் தோன்றி தோன்றுபு புதல் விளக்குறூஅ" என்று நற்றிணையும் விளக்குகிறது. உருது மொழியிலும் இதனை 'அக்கினிசிகா' என்று அழைக்கின்றனர்.

மகளிர் கைகூப்பித் தொழுவதுபோல் நிமிர்ந்த நிலையில் காந்தளிதழ்கள் தோன்றுவதாகவும் கூறப்பட்டுள்ளது.

"கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல்
எடுத்த நறவின் குலையலங் காந்தள்" (கலித்தொகை, 40)

சிறுபாணாற்றுப்படையிலும் "செழுங் குலைக்காந்தள் கைவிரல் பூப்பவும்" என்று அழகாகக் கூறப்படுகின்றது. காந்தள் பூ முதிர்ந்த நிலையில் பூவிதழ்கள் தலைகீழாகத் தொங்குவதையும் சங்கப் பாடல்கள் கூறுகின்றன.

"கமழ்தண்டா துதிர்ந்துக வூழுற்ற கோடல்வீ
இதழ்சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு"
(கலி, 121)

மேற்கண்ட வரிகளில் காந்தள் பூ முதிர்ந்து தொங்கும் தன்மை தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. மகரந்தத் தாது உதிர்ந்து பருவங் கடந்த காந்தள் பூவின் பூவிதழ்கள் சோர்ந்து விழுவதுபோல் வளைகள் கைகளில் இருந்து சோர்ந்து விட்டன என்று கூறப்பட்டிருக்கின்றது.

"............................இவட்கே,
அலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோல்
இலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே" (கலி, 7)

"ஊழுறு கோடல்போ லெல்வளை யுகுபவால்" (கலி, 48)

"துணைமலர்க் காந்த ளூழ்த்துச் சொரிவபோற் றோன்றி
[முன்கை
அணிவளை நலத்தோ டேக........."
(சீவக சிந்தாமணி, 1742)

"ஊழுறு தோன்றி யொண்பூத் தளைவிட"
(அகம், 217)

காந்தள் பூவின் முதிர்ந்த பருவ இயக்கத்தைச் சங்கப் பாடல்கள் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

காந்தள் பூ பூப்பது நாகப் பாம்பு படமெடுத்தாற்போல இருப்பதாகக் கூறுவதைப் பலவிடங்களில் காண்கிறோம்.

"..........................அரவி(ன்)
அணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோற்
காயா மென்சினை.............."

காந்தள் பூ பூக்கும்போது நாகப்பாம்பு படமெடுத்து இருப்பது போலவும் காந்தள் பூ சோரும்போது பாம்பு படமவிந்தாற் போலவும் காணப்படுவதாகக் கூறுவதும் கவனிக்கவேண்டியது.

"வெஞ்சின வரவின் பையணந் தன்ன
தண்கமழ் கோடற் றுதுபிணி யவிழ"

(அகம், 154)

என்ற வரிகளில் காந்தள் பூ படமெடுப்பதுபோல் இருந்தது குறிப்பிடப்படுகின்றது.

"பாம்புபை யவிந்தது போலக் கூம்பிக்
கொண்டலிற் றுலைந்த வொண்செங் காந்தள்"

(குறுந்தொகை, 185)

என்ற வரிகளில் காந்தள் குவிந்துவிடுவது குறிப்பிடப்படுகின்றது.

காந்தள் கார்காலத்தில் பூப்பதையும் சில பாடல்கள் குறிப்பிடுகின்றன.

"காரெதிர்ன் றயர்ந்த உள்ளமொடு தேர்வில
பிடவுங் கொன்றையுங் கோடலும்.............."

(நற்றிணை, 99)

"தண்ணறுங் கோடற் றுடுப்பெடுப்பக் காரெதிரி"

(ஐந்திணையெழுபது,17)

இதன் காரணமாகக் காந்தள் பூ பிற்காலத்தில் கார்த்திகைப் பூ எனப்பட்டது.

காந்தள் இதழ் மகளிரின் விரல்களுக்கு உவமித்துக் கூறப்படுவதைக் கவனிக்கவேண்டும். காந்தள் பூ

உடைந்த வளையல் போல் பூப்பதாகவும் இதழ் சோருங் காலத்து வளையல் கையில் சோர்ந்துவிடுவதுபோல் இருப்பதாகவும் கூறப்பட்டிருக்கின்றது.

"உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்" (புறம், 90)

"வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்"

(மலைபடுகடாம், 519)

உடைந்த வளை போலிருப்பதாகக் காந்தளிதழைக் கூறிய காரணமென்ன? அக்காலத்தில் வளையல்கள் இக்காலத்தில் இருப்பவை போன்று இல்லை. அக்காலக் காசு உருண்டையாக இருந்தது. அதனால்தான் "கிள்ளை வளைவாய்க்கொண்ட வேப்ப வொண்பழம் பொலங்கல மொருகா சேய்க்கும்" என்று குறுந்தொகை (67) கூறுகிறது. ஆனால் இக்காலத்துக் காசு தட்டையாக இருக்கிறது. அதுபோன்று காந்தளை உவமையாக விளக்கியதின் அடிப்படையில் அக்காலத்தில் வளையல் எப்படியிருந்தது என்று உய்த்துணரலாம். அக்காலத்து வளையல் சங்கால் செய்யப்பட்டு வளைவுடன் நெறி திரிந்து, அஃதாவது புரிவுடன் இருந்தது. நிறமூட்டப்பட்டிருந்தது. இதன் காரணமாகவே ஓரங்களில் அலை போல வளைவுடன் நெறி திரிந்த காந்தளிதழுக்கு உடைந்த இத்தகைய வளையல் துண்டு உவமிக்கப்பட்டது.

காந்தள் பூ மணமுடையதாகச் சங்கப் பாடல்களில் கூறப்படுகின்றது. ஆனால் காந்தள் பூ உண்மையில் மணமுடையதாகத் தெரியவில்லை. 'காந்தளம் பொதும்பு' என்று அகம். 18 கூறுகின்றது. காந்தள் செடி ஓரிடத்தில் மிகுந்து தொகுத்துக் காணப்படுவதை இன்றும் தமிழ்நாட்டில் காணலாம். நீர் நிலைகள்

நிறைந்த சூழ்நிலையில் காந்தள் எங்குப் பார்த்தாலும் கார்காலத்தில் பூத்துக்கிடப்பதைக் காணலாம். காந்தள் வேலியில் பூப்பதாகச் சங்கச் செய்யுட்கள் கூறும் செய்தி இன்றும் தமிழ் நாட்டில் காணக்கூடியதாகும். நெடுஞ்சாலைகளில் கூட உற்றுநோக்குவோர்க்கு மழைக் காலத்தில் காந்தள் வேலியோரத்தில் பூத்துக் குலுங்குவது நன்கு தெரியும். சங்க நூல்களில் காந்தள் மலைச்சாரலில் பூப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது.

"காந்தட் கமழ்குலை யவிழ்ந்த நயவருஞ் சாரல்"

(நற்றிணை, 185)

"பூந்தண் சாரற் பொங்குகுலை யெடுத்த
காந்தட் கொழுமுகை........................."

(பெருங்கதை, 2)

திரிசிராப்பள்ளிக் குன்றின் சாரலில் காந்தள் பூத்ததாகக் கூறப்படும் தெளிவான செய்தியொன்றை அகத்தில் காண்கிறோம்.

"கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தள்
போதவி ழலரி னாறு......"

(அகம்)

இதிலிருந்து சங்கப் புலவர்கள் குறிப்பிட்ட இடத்தில் கண்டதை உள்ளது உள்ளவாறே கூறும் சிறப்புத் தெரிகின்றது.

காந்தளில் இரண்டு வகைகள் தமிழிலக்கியத்தில் பலவிடங்களில் கூறப்பட்டுள்ளன. செங்காந்தள் என்ற ஒரு வகை, சங்கப்பாடல்களில் பல இடங்களில் பயில்கின்றது. கோடல் என்ற இன்னொரு வகையும் கூறப்படுகின்றது. செங்காந்தளும் கோடலும் தனித்தனியாகவே கூறப்படுகின்றன. கல்லாடத்திலும் முல்லைப்

பாட்டிலும் ஒரே பாடலில் தோன்றியும் கோடலும் கூறப்பட்டிருக்கின்றன.

"கோடற் குவிமுகை யங்கை யவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்" (முல்லைப்பாட்டு, 95-96)

"காலங் கருதித் தோன்றிகை குலைப்பக்
..................................
கோடல் வளைந்த வள்ள ளுகுப்ப" (கல்லாடம்)

என்று முல்லைப்பாட்டிலும், கல்லாடத்திலும் தோன்றியும் கோடலும் தனித்தனி இனமாகவே கூறப்பட்டிருக்கின்றன. தோன்றிக்குச் செங்காந்தள் என்றும், கோடலுக்கு வெண்காந்தள் என்றும் பொருள் கூறுவர். உலகில் பல காந்தள் செடி இனங்கள் இருப்பவாகச் செடி நூல் கூறுகின்றது. சங்கநூல்களில் கூறப்படுவன இரு இனங்களைச் சார்ந்தவையாக இருக்கலாம். செடி நூலில் காந்தள் பூவில் காணப்படும் மஞ்சள், சிவப்பு நிறங்களின் அளவைப் பொறுத்தும் பூக்களின் உருவைப் பொறுத்தும் காந்தள் செடியில் இனங்கள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. சங்கப் புலவர்கள் மஞ்சள் பெரிதும் கலந்த காந்தள் பூவை வெண்காந்தள், கோடல் என்றும், சிவப்பு நிறைந்து காணப்பட்டதைச் செங்காந்தள் அல்லது தோன்றி என்றும் அழைத்ததாகத் தோன்றுகின்றது.

காந்தளுக்குத் தோன்றி என்று சங்க நூல்களில் பெயர்வரக் காரணம் என்ன? மலையாளத்தில் சங்கப் பெயராலேயே 'தோன்றிப்பூ' 'மேந்தோன்னிப்பூ' என்று இன்றும் நாட்டுப்பகுதியில் அழைக்கப்படுகிறது. 'மேல் தோன்றி' என்பதே 'மேந்தோன்னி' ஆயிற்று. தரையில் கிழங்காக அடங்கி முடங்கிக் கிடந்த இச்செடி

கார்காலத்தில் திடீரென்று கிளம்பி மேலே அழகிய பூவோடு தோன்றுவதால் 'தோன்றி' என்றும், 'மேல் தோன்றி' என்றும் அழைக்கப்பட்டது. மற்றைச் செடி கொடிகள்போல் அன்றி மற்றைக் காலங்களில் காண முடியாதிருப்பதும் மழைக்காலத்தில் திடீரென்று தோற்றுவதும் காந்தளுக்குச் சிறப்பான தன்மை யாகும். இந்த மேங்தோன்னிப் பூக்கள் மலையாளத்தில் தோட்டப்பட்லைச் சுற்றித் தீப்பற்றிக் கொண்டது போல நெருப்பாய் ஒளிவிடுவது கார்காலத்தில் எளிதில் காணும் காட்சியாகும். எங்கோ திரிகின்ற பார்வை யைச் சட்டென்று ஈர்க்கும் கவர்ச்சி காந்தளுக்கு மட் டுமே உண்டு. மலையாளத்தில் மழைக்காலத் தொடக் கத்தை உணர்த்தும் பூ இதுவேயாகும். 'தான் தோன்றி' என்ற தமிழ்ச் சொல்லுக்குப் பொருள் உணர்ந்தவர்கள் 'மேல் தோன்றி' 'தோன்றி' என்ற சொற்கள் தோன்றிய காரணத்தை நன்கு புரிந்து கொள்வர். கொம்பு, கோடு இல்லாத கொடியைக் கோடு+அல்=கோடல் எனக் கூப்பிட்டனர் என்று தெரிகின்றது. கோடல் என்றால் வளையலுக்கும் பெயர். வளையல்போல் இருப்பதால் கோடல் என்ற காரணப் பெயர் வந்திருக்கலாம்.

## 6. பாம்புச் செடி

பாம்புச் செடி என்ஞெரு செடி அகநானூற்றில் கூறப்படுகின்றது. இதைச் சிலர் கவியின் கற்பனை என்றே கருதினர். சில செடிகள் பாம்பு போன்ற நிறமும் உருவமும் உடையதாக இருப்பதைச் செடி நூலறிஞர்கள் (Botanists) கண்டுள்ளார்கள். சில செடிகள் பாம்பின் படம் போன்று பூப்பதையும் கண்டுபிடித்துள்ளனர். இம்முறையாகச் செடிகள் பாம்பைப் போலிருப்பது தற்காப்புக்கேயாகும். இச் செடிகளை விலங்குகள் பாம்பென அஞ்சி அணுகா. செடிகளின் இத்தன்மையைப் போலிநிறம் (Mimicry) என்று கூறுவர். தற்காப்பு நிறம் (Protective Colour) என்றும் கூறுவர். சங்க நூற்களில் அகநானூற்றில் மட்டும் இச் செடிபற்றிய செய்தி காணப்படுகின்றது. ஊட்டியார் என்ற புலவர் பாடிய

" வெண்கோட் டியானை விளிபடத் துழவும்
அகல்வாய்ப் பாந்தட் படாஅர்ப்
பகலு மஞ்சும் பனிக்கடுஞ் சுரனே " (அகம். 68)

என்ற அகப்பாடலில் 'அகல் வாய்ப் பாந்தட் படார்' என இச்செடி குறிப்பிடப்படுகிறது. இதில் மற்ஞெரு செய்தியும் வருகின்றது. யானை இச்செடியைக் கண்டு அஞ்சுவதாகக் கூறப்படுகின்றது. விலங்குகளில் பாம் பைக் கண்டு மிகவும் அஞ்சுவன யானையும் குரங்கு மென விலங்கு நூலறிஞர் கண்டுள்ளனர்.

" சிறுவெள் ளரவின் அவ்வரிக் குருளை
கான யானை அணங்கி யாஅங்கு "

எனக் குறுந்தொகைப் பாடல் (119) கூறும். குரங்குகள் பாம்பைக் கண்டால் பெரிதும் அஞ்சும். பாம்பைக்

கொல்வதற்காக அதைக் கையால் பிடித்துவிடும். விடவே விடாது. விட்டால் கடித்துவிடுமோ என்ற பயமுண்டு. ஆதலின் பிடித்த பிடியை, பாம்பு பல தடவை வளைந்து கடித்தாலும் தான் சாகும்வரை தளரவிடாது. பாம்பைப் பார்க்கவும் அஞ்சி முகத்தைத் திருப்பிக்கொண்டு பிடித்த பாம்பை விடாதிருக்கும். இதையே 'பைங்க ணூகம் பாம்பு பிடித்தன்ன' என்ற பாடல் வரி கூறுகின்றது. 'குரங்குப்பிடி' என்ற பேச்சு வழக்கில் வழங்குவது பாம்பைக் குரங்கு பிடிப்பதையேயாகும். குரங்கிற்கு இவ்வச்சம் ஏற்படக் காரணம் இருக்கின்றது. காடுகளில் குரங்குகள் கூட்டம் கூட்டமாக உறங்கும்போது மலைப் பாம்புகள் ஓசையின்றிக் குரங்குகளைப் பிடித்து விழுங்கிவிடும். மற்றும் விழுதுபோல் மரங்களில் தொங்கிக் குரங்கை ஏமாற்றிப் பிடித்துண்பதுவும் மலைப் பாம்புகளின் வழக்கம். மலைப் பாம்புகளுக்கு அடிக்கடி அகப்படும் உணவு குரங்குகளாகும். ஆதலின் பாம்புகளென்றால் குரங்குகளுக்குப் பெரும் பயம். இதையே மிக அழகாகப் பாரதிதாசன் ஒரு பாடலில் வருணித்திருக்கின்றார்.

"கிளையினிற் பாம்பு தொங்க
விழுதென்று குரங்கு தொட்டு
விளக்கினைத் தொட்ட பிள்ளை
வெடுக்கெனக் குதித்த தைப்போல்
கிளைதோறும் குதித்துத் தாவிக்
கீழுள்ள விழுதை யெல்லாம்
ஒளிப்பாம்பாய் எண்ணி எண்ணி
உச்சிபோய்த் தன்வால் பார்க்கும்"

என்ற பாடலில் சங்கப்பாடல் மணம் கமழக் காண்கிறோம். இயற்கையுண்மையை வெகு அழகாகப் பாடி

யுள்ளார், சங்கப் புலவர் பரம்பரையில் வந்த பாரதி தாசன்.

பாம்புச் செடியைப் 'பாந்தட் படார்' என்றழைக்கின்றார் ஊட்டியார் என்ற சங்கப் புலவர். படர்வது படார்; பாந்தட் படார் என்பது ஒரு கொடியெனத் தெரிகின்றது. செடி நூலிலும் (Botany) பாம்புச் செடிகள் சில மலைகளில் வாழ்வதாகக் கூறப்படுகின்றது. இத்தகைய செடிகளைச் 'செடிப் போலி' (Plant mimiery) என்ற செடி நூல்கள் கூறும். இச்செடிகளில் ஒரு செடி நல்ல பாம்பின் படத்தைப்போல் பூப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. தற்காலத்தில் சாடிகளில் வளர்க்கப்படும் சில அழகுச் செடிகளிலொன்று (Crotons) பாம்பின் உடல்போன்ற மடல்களுடனிருப்பதைச் சிலர் கவனித்திருக்கலாம். இச் செடி சோற்றுக் கற்றாழைபோலிருக்கும். பழந்தமிழ்ப் புலவர்கள் மலைகளில் ஆராய்ந்து கண்ட செடியே பாந்தட் படாராகும். இது கற்பனைச் செடியன்று. செடிநூலும் மலைகளில் அருகிக் காணப்படும் ஒரு செடியாகவே இதைக் கூறும்.

அகநானூற்றில் 288 ஆம் பாடலில் வரும் 'வெருவரு படா அர்' என்ற தொடரும், 'படா அர் வெரூஉம்' என்று வரும் 309 ஆம் பாடற்றொடரும் இந்தப் பாந்தட் படாரையே குறிப்பிடுகின்றன என்று தெரிகின்றது. ஆனால் சிலர் இத்தொடர்களுக்கு அஞ்சத்தக்க தூறுகளென்றும், குறுங்காடென்றும் பொருள் கொண்டனர். இத்தொடர்களில் பயிலும் செய்தியைக் கவனித்துப் பார்க்கும்போது உண்மையான பொருள் தெளிவாகின்றது.

"இரவுப்புனம் மேய்ந்த உரவுச்சின வேழம்
தன்பெரும் படாஅர் வெரூஉம்
குன்றுவிலங் கியவினவர் சென்ற நாட்டே" (அகம், 309)

இப்பாட்டில் யானை, 'படாஅர்' கண்டு பயப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது. இஃது அகம் 68இல் வரும் 'பாந்தட் படாஅர்' செய்தியொடு ஒத்திருப்பதால், இதில், 'படாஅர்' என்று குறிப்பிடுவது பாம்புச் செடியையே யாகும்.

"கொடியோர் குறுகும் நெடியிருங் குன்றத்து
இட்டாறு இரங்கும் விட்டொளிர் அருவி
அருவரை யிழிதரும் வெருவரு படாஅர்க்
கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்
பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்
நனிநோ யேய்க்கும் பனிகூர் அடுக்கத்து" (அகம், 288)

309 ஆம் பாடலுரையில் 'பாந்தளின் இயல்பின தாகிய தூறு உண்டாகலின் அதனைக் கண்டு வேழம் அஞ்சும் என்க' என்று அகம் 68 ஆம் பாடல் வரியை எடுத்துக் காட்டியுள்ளார்கள் வேங்கடசாமி நாட்டாரும், கரந்தைக் கவியரசும். ஆனால் சொற்பொருள்கூறும் போது 'தூறு' என்ற பொருளே கொண்டனர். எனினும் 288 ஆம் பாடலில் வரும் 'வெருவரு படாஅர்' எனும் தொடருக்குச் சிறுதூறு, குறுங்காடு என்றே கூறிப்போயினர். ஆனாலும் இவ்விடத்திலும் அஞ்சத் தக்க பாம்புச் செடியென்றே பொருள் கொள்ள வேண்டும். இம்முறையில் கொண்டால்தான் இயற்கையாக இப்பாட்டு வரிகளுக்கு உரை கூற முடிகிறது. ஆனால் கூறப்பட்டிருப்பதோ வலிந்து கூறியதுபோலத் தோன்றுகிறது. அரிய மலையில் இறங்கி வளரும் அஞ்சத்தக்க கொடியைக் கண்ட குட்டியின் தந்தை

யாகிய கடுவன் பலாப்பழத்தின் பழச்சுளையைத் தோண்டினும் நோய்கொள்ளும் என்று பொருள் கொண்டிருப்பின் மிகவும் பொருத்தமாக இருக்கும். பாந்தட்படாரைக் கண்ட கடுவன் பலாப்பழச்சுளையைத் தொடவும் துன்பப்படும் என்று கொண்டால் பொருள் இயற்கையாகவே அமைகிறது. பழச்சுளையில் தெய்வ முறைவதாகக் கற்பனை செய்ய வேண்டியிருக்காது. ஆதலின் அகம் 288 ஆம் பாடலிலும் 309 ஆம் பாடலிலும் வரும் 'படாஅர்' என்ற சொல் பாம்புச் செடியையே குறிக்கும் எனக் கொள்ளவேண்டும்.

இந்தப் பாம்புச் செடிகள் இயற்கையில் மலைகளில் காணப்படுவதாகச் செடிநூலாரும் கூறுகின்றனர். * ஷில்லாங் (Shillong) மலையில் காணப்படும் ஒரு பாம்புச்செடியில் நல்லபாம்பு படமெடுத்தாற்போன்ற பூ இருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. கோடைக்கானலிலும் இத்தகைய பாம்புச்செடி காணப்படுகின்றது. கோடைக்கானல் மலை உயரத்தில் இயற்கையில் பாம்பைக் காண முடியாது. இருப்பினும் இந்தப் பாம்புச்செடியின் படமெடுத்தாற் போன்று நிற்கும் பூவைக் கண்டு சிலர் பாம்பென்று பயந்து ஏமாறுகின்றனர். இந்தச் செடி சேப்பங்கிழங்கு இனத்தைச் சேர்ந்த செடி. இதன் பூவை மறைத்துக்கொண்டு

---

*For instance there are certain aroids which resemble multicoloured and variously spotted snakes. The inflorescence of Devils spittoon looks like the hood of snakes from a distance. In another aroid called 'Snake Plant' (Arisaema) common in Shillong, the spathe is greenish purple in colour and expands over the spadix like the hood of a cobra - A.C. Dutta-Text Book of Botany.

ஒரு மடல் மூடி யிருக்கிறது. இந்த மடல் படமெடுத்தாடும் நாகப்பாம்பின் படம்போல் நிமிர்ந்து பாம்பின் படத்தில் காணப்படும் வரிகளுடனும் புள்ளிகளுடனும் காணப்படுகின்றது. இந்தச் செடியைச் செடி நூலில் "Arisaema Leschenaulti" என்றழைக்கின்றனர். சங்க நூல்களும் இச் செடியைக் குன்றிலேயும் மலையிலேயும் கண்டு யானையும் குரங்கும் அஞ்சியதாக அகப்பாடல்கள் (309,288) கூறுவது கவனிக்க வேண்டிய செய்தியாகும். மனிதரே இச் செடியைக் கண்டு அஞ்சும்போது குரங்கும் யானையும் அஞ்சினதில் வியப்பில்லை. ஆதலின் சங்க இலக்கியத்தில் கூறப் படும் பாம்புச்செடி கோடைக்கானலில் தற்போது காணப்படும், நாகப்பாம்புச் செடி யென்றழைக்கப் படும் செடியாகவே இருக்கலாம்.

இனி நற்றிணையில் வரும் பிறிதொரு செய்தியைக் கவனிப்போம்.

"வேனி லோதிப் பாடுநடை வழலை
வரிமர னுகும்பின் வாடி யவண"

என்ற நற்றிணை 92ஆம் பாடல் வரிகளில் வழலைப் பாம்பைப்பற்றிய தொரு குறிப்பு வருகின்றது. ஓந்தியாகிய வழலை என்று பொருள் கொண்டு அது மரலின் இளமடல்போல வாட்டமுள்ளதாக உரையாசிரியர் கூறுகின்றார். "வழலை ஒருவகைப் பாம்பு; அதனைப் போறலின் ஓந்தி வழலை என்றார் போலும்" என்றும் உரையெழுதினார். வழலையைப் போல ஓந்தியிருப்ப தாகக் கூறுவது பொருத்தமின்று. வேனிலோதியும் பாடுநடை வழலையும் வரிமரல் நுகும்பு போல வாடிய தாகக் கூறின் மிகவும் பொருத்தமாக இருக்கும்.

அதிலும் வழலையை வரிமரல் நுகும்புபோலிருப்பதாகக் கூறினர் என்று சொன்னால் முற்றிலும் பொருந்தும் ஏனெனில் வழலைப் பாம்பு கட்டுவிரியன் போல வெண்மையும் கருமையும் உடைய கட்டுக்களையுடையது. ஆதலின் அதை வெண்மை கலந்த வரிகளையுடைய வாடிய மரல் நுகும்போடு ஒப்பிடப்பட்டது மிகவும் பொருத்தமாயிருக்கும். மரல் நுகும்பு (குருத்து) உருவிலும் பாம்பு போலவே தோன்றுகிறது. ஆதலின் வழலை மரல் போல் வாடியிருப்பதாகப் பொருள் கொள்ள வேண்டும். இப்பொருளின் பொருத்தம் பின் வரும் செய்தியால் நன்குக வலியுறுத்தப்படும்.

மருள் (Bowstring Hemp) என்றே தற்காலத்தில் சில விட்டுங்களில் மரலை அழைக்கின்றனர்; இதன் நாரை வில்லிற்கு நாணகக் குறச் சிறுர் பயன்படுத்துவது பற்றிச் சங்க நூல் கூறுகின்றது. ஆங்கிலப் பெயரும் 'வில்நாண் செடி' என்றே சொல்கின்றது. இச்செடி வாடுவதுபற்றியும், இதன் பழத்தைப்பற்றியும் சங்க நூற்களில் கூறப்பட்டுள்ளன. புதுவையில் ஆராய்ச்சிக் குப்பம் என்ற ஊரில் இம்மருள் பூண்டைப் பார்த்தேன். ஒரு குடியானவனிடம், 'இதற்குப் பெயரென்ன' என்று கேட்டேன். அதற்கு அவன் அளித்த விடை என்னை ஓர் ஆராய்ச்சியிலேயே ஆழ்த்தியது. 'இதை மரநாகம்னு சொல்லுவாங்க' என்றான். மீண்டும் கேட்டேன். அதே விடையே கூறினன். உடனே 'மரவநாகம் வணங்கி மாற்கணம்' என்ற வரிகள் என் நினைவில் பளிச்சிட்டன. தொல்காப்பியப் பொருளதிகார உரையைப் புரட்டினேன். நச்சினார்க்கினியர் இவ்வரியை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

## 7. நரந்தம் (LEMON GRASS)

கி. பி. முதலிரண்டு நூற்றாண்டுகளில் இந்தியாவி லிருந்து கிரேக்க, ரோமாபுரிநாடுகளுக்கு ஏற்றுமதியான பொருள்களில் மிளகு மிகவும் புகழ்வாய்ந்தது. மிள கைத்தவிர ஏற்றுமதியான வேறு சில மணப்பொருள் களையும் (Spices) கிரேக்க ஆசிரியர்கள் குறித்திருக்கின் றார்கள். அவைகளில் NARD என்ற ஒரு பொருளைக் குறிப்பிட்டிருப்பதைக் கவனிக்கவேண்டும். இத்துடன் 'மலைப்பத்திரம்' (Malapothram) என்னும் மணப் பொரு ளையும் குடுப்பிட்டுள்ளார். 'மலைப்பத்திரம்' என்பது கறி இலையைக் குறிப்பிடுகின்றது. 'Nard' என்பது என்ன வென்று ஆராயுங்கால் அதை அறிந்துகொள்ள சங்க நூல்களில்தான் பொருத்தமான சான்று கிடைக் கின்றது. இது சங்க நூல்களில் குறிப்பிடும் நரந்தமே தவிர வேறில்லை என்றுணரும்போது மிகுந்த வியப் பைத் தருகின்றது.

நரந்தம் என்றொரு புல் பற்றிய செய்திகள் சங்க நூற்களில் வருகின்றன. இந்தப் புல் செடி நூலில் 'Cymbopogon Nardus' என்ற பெயருடன் விளக்கப்படு கின்றது. இப்புல்லிலிருந்து ஒரு நறுமணமான எண் ணெய் எடுக்கப்படுகின்றது. இந்தப் புல் மலையாளப் பகுதியில் மேட்டுப் பகுதிகளில் பயிராக்கப்படுகின்றது. அதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் அமெரிக்காநாட் டிற்குப் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டு "டாலர்" வருவாயைத் தருகின்றது. இது பல பொருளுக்கு நறுமணமூட்டப் பயனாகின்றது.

நரந்தம் புல்லின் மணத்தைப் பழந்தமிழர் மண மூட்டுவதற்குப் பயன்படுத்தியதைச் சங்க நூலிலிருந்து அறியலாம்.

"நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே"

என்று ஔவையார் அதியமானைப் பற்றிப் பாடுகிறார். அரசர்கள் தங்கள் கைகளுக்கு நரந்த நறுமணத்தை ஊட்டும் வழக்கம் உண்டென்பது தெரிகிறது. இது தற்காலத்தில் உடலில் தீய நாற்றத்தைப் போக்க 'ஓ தெ கொலோன்' என்பதைப் பயன்படுத்துவதைப் போன்றதாகும். நரந்த நறுமணம் மகளிர் கூந்தலுக்கு ஊட்டப்பட்டதை "நரந்த நாறிருங் கூந்தல் எஞ்சாது நனிபற்றி" என்று வரும் 54 ஆம் கலிப்பாடல் வரியி லிருந்து உணரலாம். மலர் மாலைக்கு நரந்த நறு மணத்தை ஊட்டும் வழக்கமும் இருந்திருக்கின்றது.

"நரந்தப் பல்காழ்க் கோதை சுற்றிய
வைதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்"

(புறம், 302)

இங்கு நரந்தம் பூவால் பலவடங்களாகத் தொகுக்கப் பட்ட மாலை என்று உரை கூறியிருக்கின்றனர். நரந்தம் புல்லிற்கு நறுமணமான பூ இல்லை. இங்கு நரந்தம் எனப்படுவது நரந்தம் புல்லில் எடுக்கப்பட்டுப் பூசப் படும் எண்ணெய் மணமே ஒழியப் பூவன்று. நரந்த நறுமணத்தையுடைய பல வடங்களாலான மாலையால் சுற்றப்பட்ட யாழ் என்று பொருள் கூறவேண்டும்.

"நரந்தங் கண்ணி இவளொடு இவனிடைக்
கரந்த உள்ளமொடு கருதியது பிறிதே"

என்ற பாடல் வரிகளுக்கு நரந்த நறுமணம் ஊட்டப் பட்ட கண்ணி என்பதே பொருளாம். மாலைக்கு நறு மணமூட்டும் பழக்கத்தை,

"சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை"

என்று வரும் திருமுருகாற்றுப்படை வரிகளிலிருந்து உணரலாம். பிற்கால உரையாசிரியர்கள் நரந்தம் என்று வருமிடங்களில் நரந்தம் பூநாறும் என்றும், நாரத்தை மலர் என்றும், நறை என்றும், கத்தூரி என்றும் பல படப் பொருள் கூறிச் சென்றனர். நரந்தம் பூ என்று சங்க நூற்களில் எங்குமே பயிலவில்லை.

"நணியிருஞ் சோலை நரந்தந் தாஅய்
ஒளிர்சினை வேங்கை விரிந்தவி ருதிரலொடு"

என்று வரும் பரிபாடல் ஏழாம் பாடல் வரிகளுக்கு உரையாகப் பரிமேலழகர், வையை நரந்தம் புற்களை வாரி வருவதாகக் கூறுகிறார்.

"காவே, சுரும்பிமிர் தாதொடு தலைத்தலை மிகூஉ
நரந்த நறுமலர் கண்களிக் கும்மே"

என்ற பதினொரும் பாடல் வரிகட்கு உரை கூறும்போது நரந்தம் பூ என்று கூருது நரந்தம் போல மணமுள்ள பூக்களை வழங்கும் கா என்று பரிமேலழகர் பொருள் கூறிச் சென்றதைக் கவனிக்க வேண்டும். நரந்தம் புல்லுக்குத்தான் மணமொழிய அதன் பூவுக்கு மணம் கிடையாது. நரந்தம் என்பதற்கு நறை என்றும் பொருள் கூறப்பட்டிருக்கின்றது. இது தவறு. நறை ஒரு நறுமணமான கொடி; நரந்தம் ஒரு புல் என்பது சங்கநூல் கற்ருரறிவர்.

"நறையும் நரந்தமு மகிலு மாரமும்
துறைதுறை தோறு பொறையுயிர்த் தொழுகி"

என்று வரும் பொருநராற்றுப்படை 238-42 ஆம் வரிகள் நறைவேறு, நரந்தம் வேறு என்பதைத்தெளிவாகக் காட்டுகின்றன. நறை ஒரு நறுமணமுள்ள கொடி, நரந்தம் நறுமணமுள்ள புல், அகிலும், ஆரமும் நறுமணமுள்ள மரங்கள்.

இந்த நரந்தம் புல்லைப்பற்றிப் பதிற்றுப்பத்திலும், புறநானூற்றிலும் வரும் செய்திகள் ஆராயத்தக்கனவாகும்.

"கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி
பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவு
மாரியர் துவன்றிய பேரிசை யிமயம்"

(பதிற்றுப்பத்து, 2)

"நரந்தை நறும்புல் மேய்ந்து கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி யயல
தகரத் தண்ணிழல் பிணையொடு வதியும்
வடதிசை யதுவே வான்றோ யிமயம்" (புறம், 122)

நரந்தம் புல் இமயமலைச் சாரலில் வளர்கின்றது. கவரிமான் அதை விரும்பி மேய்கின்றது. இமயத்தில் ஆரியர் வாழ்கின்றனர். இதில் வரும் அரிய செய்தி "பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவும்" என்பதாகும். இமயத்திற்குத் தொடர்புடையதென்று பிறநாட்டாரால் போற்றப்பட்ட அருவி கங்கையாறுகும். 'பரந்திலங் கருவி' எனப்படுவது கங்கையாறுகவே இருக்கலாம். ஆதலால் பழந்தமிழர் நரந்தம் புல்லொடு கங்கையாற்றையும், இமயத்தையும், கவரிமானையும் இணைத்தே அறிந்திருந்தனர். இச்செய்தி பண்டைக் கிரேக்க ஆசிரியரான 'இப்போகிரேட்டஸ்' (கி. மு. 460) என்பவர்

எழுதியிருக்கும் செய்தியொடு ஒத்திருப்பது மிகவும் வியப்பைத் தருவதாகும். இந்தக் கிரேக்க ஆசிரியர் இந்தியாவில் கிடைக்கும் மருந்துச் செடிகளான மிளகு, இஞ்சி, நரந்தம் ஆகியவைகளைப்பற்றிக் கூறியிருக்கிறார். நரந்தத்தை இவர் "Nardin of gangetis" என்றழைக்கிறார். பட்டினப்பாலை 'கங்கை வாரி" என்று அழைப்பது போல் 'கங்கை நரந்தம்' என்று அழைக்கிறார். இம் முறையில் அழைக்கப்படுவதற்குக் காரணம், கங்கை யாறு நரந்தம் புல் விளையும் மலைச் சாரலின் வழி பாய்ந் ததுதான். இச் செய்தி 'பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவு மாரியர் துவன்றிய பேரிசை இமயத்தொடு' என்று வரும் பதிற்றுப்பத்துச் செய்தியுடன் ஒத்திருப் பது மிகவும் வியப்பைத் தருவதாகும். வையை ஆறு நரந்தம் புல்லை வாரி வருவதாகவும் துறைகளில் தள்ளு வதாகவும் பரிபாடலில் கூறப்பட்டிருப்பதையும் கவ னிக்கவும். வையை பொதிய மலையில் தோன்றி இழி கின்றது இது தோன்றும் இடமான மேற்குத் தொடர்ச்சி மலையில் நரந்தம் புல் இயற்கையாக வளர் கிறது. இதையே வையையாறு வாரி வருவதாகப் பரிபாடல் கூறுகிறது. மற்றும் அதர்வவேதத்தில் ஆடைகளுக்கு மணமூட்டப் பயன்பட்ட மணப்பொருள் களில் ஒன்றாக 'நலத' (Nalada) அல்லது 'நரத' (Nard) என்று ஒன்று குறிப்பிடப்படுகிறது. இது நரந்தம் என்பதில் ஐயமில்லை. இதிலிருந்து அதர்வவேதத்திலே நரந்தம் என்ற தமிழ்ச் சொல் புகுந்துவிட்டது தெரி கின்றது. 'நலதா' என்ற மணப் பொருள் செடியி லிருந்து பெறப்பட்டதாகவும் மருந்துக்கும் சமையலுக் கும் பயன்பட்டதாகவும் வடமொழி நூல்களில் குறிப்பி டப்பிடப்படுகின்றது.

'நார்தின்' (Nardin) 'நார்டு' (Nardus) என்று வரும் கிரேக்கப் பெயர்கள் நரந்தம் என்ற தமிழ்ச் சொல்லி லிருந்தே வந்திருக்கின்றன. நறுமணமுடையது என்ற பொருளின் அடிப்படையாக நறை, நாரத்தை, நரந்தம் என்ற பல சொற்கள் தோன்றின. 'ஆரஞ்சு' என்ற சொல்லே நாரங்காய் என்ற சொல்லிலிருந்து வட மொழியில் 'நாகரங்கா' ஆகி ஆரஞ்சு ஆக மாறியதென் பர். பிங்கலந்தை நிகண்டு கூறும் 'நார, நரந்த, நாரங்க, நாரத்தை" ஆகிய நான்கும் ஒரே வேர்ச் சொல் அடிப் படையில் தோன்றின். அந்த வேர்ச்சொல் தமிழ்ச் சொல்லே. கிரேக்கர் 'நரந்தம்' என்ற சொல்லிலிருந்து அல்லது வடமொழியில் வழங்கப்பட்ட தமிழ்ச் சொல்லிலிருந்து இந்த மணப்பொருளை பெயரிட் டழைத்தனர் என்று நன்கு விளங்கும்.

* கிரேக்க வரலாற்றாசிரியர்கள் இந்த நரந்தத்தைப் பற்றி எழுதி யிருக்கின்றனர். இப்போகிரேட்டஸைத்

---

*Hippocrates (460 B. C.) said of 'Nardin' of Dioskorides called also 'gangetis' because the Ganges flows from the foot of the mountain where the plant grows - Dymock, Warden and Hooper's Pharmacographica Indica.

Dioskorides (1st century A.D.) in his Herbal specifically states that following plants were brought from India for Medicinal purposes-Kardomum, NARDOS, Malabathrum, Kostos, Calamus Aromaticum, Agallocha.

Periplus lists the emporia in India. At market town of Barbaricum in the mouth of 'Sinthu' the goods exchanged were sent up-country to minnagara which was then held by parthians-exports from them were costus, nard (Sanskrit Nalada ointment from a plant used also in drugs and cookery)

தவிர மற்றும் டயாஸ் கொரைடைஸ் (Dioskorides), பிளினி (Pliny) பெரிப்ளூஸ் (Periplus) ஆகியோரும் நரந்தத்திலிருந்து பெறும் நறுமணப் பொருளைப்பற்றி எழுதி யுள்ளனர். டயாஸ் கொரைடஸ் கி. பி. முதல் நூற்றாண்டில் இந்தியாவிலிருந்து கிரேக்க நாட்டுக்குச் சென்ற பொருள்களில் மலைப்பத்திரத்தையும், அகிலை யும், நரந்தத்தையும் (Nardos குறிப்பிடுகிறார். சிந்து நதியின் கரையில் கிரேக்கர்களுக்கும் இந்தியர்களுக்கும் பண்டமாற்றாக பயன்பட்ட பொருள்களில் கோட்டத் தையும், நரந்தத்தையும் பெரிப்ளூஸ் கூறுகிறார். இதே பெரிப்ளூஸ் பாண்டி நாட்டில் இருந்து கிரேக்கர்கள் பெற்ற முத்தையும்பற்றி எழுதியிருக்கிறார். இந்தி யாவில் விளையும் செடிகளில் நரந்தத்தையும் 'செலு சிடுகள்' என்ற இனத்தார் தங்கள் நாட்டில் பயிரிட முயன்றதாகப் பிளினி என்பார் கூறுகிறார். நான்காம் ஆண்டியாக்கஸ் (கி, மு. 175–165) என்ற மன்னன் தன் னுடைய வெற்றி விழாவில் தான் கைப்பற்றிய 800 இந்தியத் தந்தங்களையும், நரந்தத்தையும் கண்காட்சிப் பொருளாகக் காட்டியதாகக் கூறப்பட்டிருக்கிறது. இவைகளிலிருந்து கிரேக்கர்கள் எந்த அளவு நரந் தத்தை கி. மு., கி. பி. முதல், இரண்டு, மூன்று நூற் றாண்டுகளில் உணர்ந்தனர், போற்றி வந்தனர் என் பது தெரிகிறது. கிரேக்க மொழியில் நரந்தத்தைக்

---

Pliny says that the Selucids had attempted to naturalize certain Indian plants such as Ammonum and 'nardum'.

Antiochus V (175-165 B.C.) exhibited 800 tusks of Indian ivory and spices such as cinnamon and 'Nard' in his triumph as Daphne in 166 B. C. (Polybius. xxx 25, 12).

குறிப்பிடும் சொல் தமிழ்ச்சொல்லே என்பது வரலாற்றுசிரியர்கள் பலருக்கும் தெரியாது.

ஆதலால் கிரேக்கர் இறக்குமதி செய்த இந்த மணப்பொருள் வடநாட்டுக்குத் தமிழர் ஏற்றுமதி செய்த நரந்த எண்ணெயேயாகும். வடநாட்டில் நரந்தம் புல் விளையும் மலையையும் அதனருகில் பாயும் அருவியையும், அதை உண்ணும் கவரிமானையும் சங்க நூற் புலவர்கள் உணர்ந்திருந்தனர். ஆனால் பிற்காலப் புலவர்களோ நரந்தம் என்பது புல்லோ, பூவோ, கொடியோ, மரமோ என்று மயங்குமளவு அறிவுலகில் பின் தங்கிவிட்டனர். சேந்தன் திவாகரம் 'நரந்தம் நாரத்தை ஆகுமென்ப' என்று கூறுகின்றது. பிங்கலந்தை நிகண்டு "நார, நரந்த, நாரங்க, நாரத்தை" என்று கூறுகின்றது. நிகண்டு ஆசிரியர்களுக்கும் நரந்தம் ஒரு நறுமணமான புல் என்பது தெரியாதிருந்ததெனத் தெளிவாகின்றது. நரந்தம் என்பதை நாரத்தை மரமாகப் பொருள் கொண்டிருக்கின்றனர். நாரத்தை மரத்தை 'நாரங்க' என்று மலையாளத்தில் கூறுவார்கள். 'நார, நரந்த, நாரங்க, நாரத்தை' ஆகிய நான்கும் நறுமணமுடைய வேறு வேறு செடிகள் என்பதை உணராத நிகண்டாசிரியர்கள் ஒரே மரமெனக் கொண்டார்கள். நரந்தம் ஒரு புல் என்பதைப் பிற்காலத்தில் உணராது போகவே அதன் பெயர் மறக்கப்பட்டு இக்காலத்தில் 'எலுமிச்சம் புல்' என்று அழைக்கப்படுகின்றது. மலையாளத்தில் 'சுக்கு நாறிப்புல்' என்றழைக்கின்றனர்.

———

## 8. முருக்கும் கவிரும்

சங்க நூல்களில் கூறப்படும் அழகிய சிறந்த பூக்களுள் முருக்கும் கவிரும் இரண்டாகும். முருக்கும் கவிரும் ஏறக்குறைய ஒரே வடிவான இலைகளையும் ஒரே நிறமான பூக்களையும் உடையவை. இதனால் முருக்கும் கவிரும் ஒன்றேயென்று மயங்கி உரை எழுதலாயினர். சங்க காலத்தில் அவைகள் தனித்தனியே சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. தற்காலம் முருக்கு என்பது முருக்கமரம் என்றும் கவிர் முள்முருங்கை என்றும் கூறப்படுகிறது. முருக்க மரம் நடுத்தரமான மரம். இதன் இலைகள் அகன்றவை. தின்பண்டங்களைக் கட்டஇன்றும் இதன் இலைகளை உணவு விடுதிகளில் பயன்படுத்துகின்றனர். வேனிற்காலத்தில் இலைகளை முற்றிலும் உதிர்த்து விட்டு இம்மரம் பூக்கின்றது. பூவுடன் காணப்படும் இம்மரம் மிகவும் அழகாகவும் கவர்ச்சியாகவும் இருக்கும். மஞ்சள் நிறம் சிறிது கலந்து சிவந்து, கிளிமூக்குப்போல் வளைந்து பூக்கும், முருக்க மரம் வேனிற்காலத்தில் கண்களுக்கு ஒரு களிவிருந்தாகும். காடுகளில் முருக்கமரங்கள் அடர்ந்து கிடக்கும் பகுதிகளில் வேனிற்காலத்தில் ஒரே சிவப்பாக இம்மரங்கள் பூத்துக் குலுங்கும்போது காடுபற்றி எரிகின்றதுபோலத் தோன்றும். சில சமயங்களில் காடுகளைப் பாதுகாக்க இருக்கும் அலுவலர்கள் கூடக் காடுபற்றி எறிகின்றதோ என்று ஏமாந்து விடுவார்களாம். இதனால்தான் இந்த மரத்தை 'காட்டுத் தீ' (Flame of the forest) என்று ஆங்கிலத்தில் பெயரிட்டழைத்தனர். இதன் சிவந்த வளைந்த பூவைக் கண்ட காளிதாசர் தன் காவியத்தில் இதைக் கிளிமூக்குக்கு

ஒப்பிட்டுப் பாடினர். செடி நூலார் சிலர் கதம்ப இருலின் செக்கச் சிவந்த கொடுக்குக்கு (Lobster's claw) ஒப்பிட்டுக்கூறினர். சங்க நூல்களில் இன்னும் பொருத்தமாக இயற்கையிலே காட்டில் கண்டறிந்த ஒன்றை உவமையாகக் கையாண்டது சங்கப் புலவர் களின் இயற்கைபற்றிய நுண்ணிய ஆராய்ச்சியைக் காட்டுகிறது.

"வாள்வரி வயமான் கோளுகி ரன்ன
செம்முகை யவிழ்ந்த முண்முதிர் முருக்கின்
சிதரார் செம்ம ருஅய் மதரெழின்
பைங்கண் வல்லியங் கல்லளைச் செறிய
முருக்கரும் பன்ன வல்லுகிர் வயப்பிணவு" (அகம், 91)

"உதிரந் துவறிய வேங்கை யுகிர்போல்
எதிரி முருக்கரும்ப வீர்ந்தண்கார் நீங்க எதிருநர்க்
கின்பம் பயந்த விளவேனில் காண்டொறுந்
துன்பங் கலந்தழியு நெஞ்சு" (ஐந்திணையைம்பது, 31)

உதிரந்தோய்ந்த புலியின் நகம்போல முருக்கின் அரும்பு இருப்பதாகக் கூறப்பட்டது நினைந்து நினைந்து இன்புற வேண்டியதாகும்.

முருக்கமரம் பூத்திருக்கும்போது பற்றியெரிவது போன்ற தோற்றமுடன் இருப்பதைச் சங்க நூல்களும் குறிப்பிடாமலில்லை.

"கருநனை யவிழ்ந்த வூழுறு முருக்கி
னெரிமருள் பூஞ்சினை இனச்சிதரார்ப்ப"

(அகம் - பாலை, 41)

"பொங்கழல் முருக்கி னொண்குரல் மாந்தி" (அகம், 277)

"பொங்கழல் முருக்கு" என்று அகநானூறு கூறினதைத் தான் 'Flame of the forest' என்று ஆங்கிலத்தில் அழைக் கின்றனர்.

"மணிபுரை வயங்கலுள் துப்பெறிந் தவைபோலப்
பிணிவிடு முருக்கிதழ் அணிகயத் துதிர்ந்துக"

இதன் பூவைச் சிறந்த பவளத்திற்கு ஒப்பிட்டுக் (கலி, 33) கலித்தொகை கூறுகின்றது. மகளிர் அழகுக்காகக் கைவிரல்களுக்குச் செஞ்சாயம் ஊட்டும் வழக்கம் அக்காலத்திலே இருந்தது. முருக்கமலர்.

"நகைமுக மகளி ரூட்டுகிர் கடுக்கு" (அகம் 317)ம் என்று கூறப்பட்டிருக்கின்றது. மற்றும் இதன் பூ சேவலின் சிவந்த கொண்டைபோல இருப்பதாகவும் அகப்பாடல் கூறுகிறது.

"அழலகைந் தன்ன காமர் துதைமயிர்
மனையுறைக் கோழி மறனுடைச் சேவற்
போர்புரி யெருத்தம் போலக் கஞலிய
பொங்கழல் முருக்கி னொண்குரன் மாந்திச்
சிதர்சிதர்த் துகுத்த செவ்வி வேனில்" (அகம், 277)

போர்புரியும் சேவற் கோழியின் கொண்டைபோல முருக்கின் பூங்கொத்து விளங்கியதாகக் கூறப்பட்டிருக்கின்றது. இதன் அரும்பைப் 'பாசரும்பு' என்று கூறியிருப்பது இதன் அரும்பைப் பச்சையான புறவிதழ் மூடியிருப்பதையே குறிப்பதாகும்.

இதன் பூவைத் தவிரக் கண்ணில்படும் இம்மரத்தின் மற்றொரு பகுதி இதன் காய்ந்த காய்களாகும். இதன் காய்கள் முற்றிய காலத்தில் நீண்டு வளைந்து முறுக்கிக் காணப்படும். இதன் காயைப் பற்றியும் சில சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர்.

"..........................................கேழல்
வளைமருப் புறழு முளைநெடும் பெருங்காய்
நனைமுதிர் முருக்கின் சினைசேர் பெருங்கல்" (நற்றிணை)

"வேனின் முருக்கின் விளைதுணை ரன்ன
மாணு விரல வல்வாய்ப் பேஎய்" (நற்றிணை, 73)

முறுக்கி வளைந்த கருப்பான காய்களைப் பேயின் கை விரல்களுக்குக் கற்பனையாக ஒப்பிட்டிருப்பதை நோக்க வேண்டும்.

முருக்கமரம் கற்பாங்கான இடங்களில் வளர்வதாகக் கூறுவதும் உண்மையே. முல்லை திரிந்த பாலையில் பெரும்பாலும் காணப்படுவதாகச் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது. களர் நிலத்திலும் நன்கு வளரும் என்று செடிநூல் கூறும். முருக்கமரத்தைக் குறி பார்த்து வில்லெறியும் பெருமரக் கம்பமாக பயன்படுத்தியதாக "இகலின ரெறிந்த அகலிலை முருக்கின்" என்று புறம் 169 கூறுகிறது. நார் உரித்த முருக்கமரம் முனிவர்களின் தண்டுக் கோலாகப் பயன்பட்டதாகவுந் தெரிகிறது.

"செம்பூ முருக்கி னன்னா களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்து"

என்ற குறுந்தொகை 156 ஆம் பாடல் இச்செய்தியைக் குறிப்பிடுகின்றது.

முருக்கமரம் இளவேனிற்காலத்தில் பூப்பது எனக் குறிப்பிட்டிருப்பது உண்மையான செய்தியாகும். மார்ச்-ஏப்ரலில்தான் பூக்கின்றது. கலித்தொகையில் (33)

"பிணிவிடு முருக்கிதழ் அணிகயத் துதிர்ந்துக"

என்று கூறப்படுவதைக் கவனிக்க வேண்டும். "முருக்குத்தாழ் பெழிலிய நெருப்புற' ழடைகரை" என்று பதிற்றுப்பத்து கூறுகிறது. முருக்கமரத்தைக் குளங்

கள், ஏரிகளின் ஓரங்களில் அழகுக்காக வளர்த்தனர் என்று தெரிகின்றது. இன்றும் சில இடங்களில் ஏரி ஓரங்களில் முருக்கமரம் வளர்கின்றதைக் காணலாம். 'முருக்கேரி' என்ற ஊரில் ஏரியைச் சுற்றி முருக்கமரங்களை இன்று காணலாம். முற்றிய பருவத்தில் பூவிதழ் கீழே விழுந்து பரவிக்கிடைப்பதையும் குறிப்பிட்டுப் பாடியிருக்கின்றனர். இதன் பூவையும் முள் முருங்கை என்று கூறப்படும் கவிர்ப்பூவையும் பறவைகள் விரும்பிக் கொத்தித் தின்னும். இதனுல் பறவைகளின் வழியாகப் பூவின் தாது பரப்பப்பட்டு இதன் பூ கருவுறுவதாகச் செடிநூலார் (Botanists) கூறுவர்.

"பாசரும் பீன்ற செம்முகை முருக்கினப்
போதவி மூலரி கொழுதித் தாதருந்
தந்தளிர் மாஅத் தலங்கன் மீமிசை
செங்க னிருங்குயி னயவரக் கூஉ
மின்னிள வேனிலும் வாரார்" (அகம், 229)

மேலே காட்டிய பாடல்களில் குயில் இதன் அப்போதவிழ்ந்த மலரைக் கொத்தி இதன் தாதை அருந்துவதாகவும், இதன் பூவை மாந்துவதாகவும் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்குங்கால் எந்த அளவு சங்கநூற் புலவர்கள் இயற்கையில் ஈடுபாடுடையவர்கள் என்பது தெரியும்.

முருக்கமரத்தோடு மிகவும் ஒத்துள்ள மற்ருெரு மரம் சங்க நூல்களில் கூறப்படும் 'கவிர்' என்பதாகும். இதை முள்ளு முருங்கை என்று தற்காலத்தில் அழைக்கின்றனர்.

"கவிரித ழன்ன காண்பின் செவ்வாய்
அந்தீங் கிளவி ஆயிழை மடந்தை"

என்று வரும் அகப்பாட்டில் (4) மகளிரின் சிவந்த வாய் கவிர்ப் பூவின் இதழ்போல சிவந்திருப்பதாகக் கூறப்படு வதை நோக்கவேண்டும். முள் முருங்கையின் பூ முருக்கமரத்தின் பூவைவிடச் செக்கச் சிவந்து கருஞ் சிவப்பாகத் (Crimson) தோன்றும்.

"தளிர்புரை கொடிற்றிற் செறிமயி லெருத்திற்
கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ வன்ன
நெற்றிச் சேவ லற்றம் பார்க்கும்" (அகம், 367).

"பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்
கவிர்ப்பூ நெற்றிச் சேவலிற் றணியும்" (புறம், 326).

"கவிரலர் பூத்த சென்னி வாரணம்" (கல்லாடம்).

சேவலின் சிவந்த கொண்டைபோல முள் முருங்கைப் பூவிருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. "கவிரித முன்ன தூவிச் செவ்வாய் இரைதேர் நாரை" என்று குறுந் தொகை 103ஆம் பாடல் கூறுகிறது. நாரையின் சிவந்த தூவியிறகு முள்ளு முருங்கையின் மலரிதழ் போல இருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. சங்க நூல்களில் முருக்க மரத்தைப்பற்றிய குறிப்புக்கள் பல காணப்படுவதுபோல் முள் முருங்கையைப்பற்றிய செய்திகள் இல்லை. முள் முருங்கை முருக்கமரத்தைப் போல எளிதில் தென்படுவதில்லை. இதன் காரணமாகச் சங்க நூல்களில் இதைப்பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படவில்லை. இதன் இலையும் பூவும் முருக்கை ஏறக்குறைய ஒத்திருப்பதனுல் பிற்கால உரையாசிரியர் கள் சிலவிடங்களில் கவிர் என்பதற்கு முருக்கு என்றே பொருள் எழுதிச் சென்றனர். ஆனுல் சங்ககாலப் புலவர்களால் அவை நன்ருகப் பிரித்துணரப்பட்டிருந் தன. சேந்தன் திவாகரம் "கவிரே கிஞ்சுகம் முருக்

கெனக் கருதுவர்" என்று மயங்கிக் கூதுறுகிற இயற்கையறிவு குறைந்ததால் கவிர்வேறு முருக்குவேறு என்பதைப் பிற்காலத்துப் புலவர்களால் உணர முடியவில்லை. பெயரிலும் குழப்பம் பிற்காலத்தில் தோன்றியது. முருக்கம் என்ற பெயர் தற்காலம் வழங்குகிறது. ஆனால் கவிர் என்பதை முள் முருங்கை என்றழைக்கின்றனர். இது முருங்கையினத்தை சேர்ந்த மரமேயன்று. முள் முருக்கன் என்றும் அழைக்கின்றனர். அகப்பாடல் முருக்க மரத்திற்கே முள் இருப்பதை "முண்முதிர் முருக்கின்" என்று பொருத்தமாகக் கூறிற்று. கவிரை மட்டும் முள் முருக்கன் என்று தற்காலம் சொல்லுகின்றனர். மற்றும் கவிரைக் கலியான • முருக்கன் என்றழைக்கின்றனர். இம்மரம் திருமணச் சடங்குகளில் பயன்பட்டதால் 'கலியாண முருக்கன்' என்று பெயர் பெற்றதாகத் தெரிகிறது. முருக்கத்தைக் கிஞ்சுகம் என்று வடமொழியில் அழைத்தனர். ஆனால் 'கவிரே கிஞ்சுகம்' என்று திவாகரம் கூறுகிறது. முருக்க மரத்தை வடமொழியில் பலாச மென்பர். அதையே தமிழில் சிலவிடங்களில் 'மலைப் பொரசு' என்றழைப்பர். பிற்கால நிகண்டுகளில் புரசு என்றும் பெயர் கூறப்பட்டிருக்கின்றது. மக்கள் வாயில் முருக்கு முருக்கம் ஆகி முருக்கன் ஆனது கவனிக்கத்தக்கது. மகரவீறேற்ற அஃறிணைப் பெயர்கள் ஒன்பது னகர ஈறேற்று மயங்கும் என்று கூறப்பட்டிருப்பதைக் காண்க. 'கவிர்' என்ற பெயர் அழகு என்ற பொருளின் அடிப்படையிலே கவின் என்ற சொல்போல முள்முருங்கைக்குச் சங்க காலத்தில் வழங்கப்பட்டிருந்தாகத் தெரிகிறது. இவ் வழகிய பூவைச் சூடும் பூவாகச் சங்க காலத்தில் கருத

வில்லை. எருக்கு, முருக்கு முதலியவை சூடாப்பூ என்று கருதினர். ஆனால் முருக்கு ஊரையும் குளத்தையும் அணி செய்வனவாகக் கருதினர். முருக்கமரமும் கவிரும் தோட்டங்களையும் சாலைகளையும் ஊரையும் அணிசெய்யும் மரங்களாகத் (Ornamental trees) தற்காலத்தில் கருதுகின்றனர். செடிநூலில் முருக்கமரத்தை Butea Frondosa (Flame of the forest) என்றும் கவிரை Erythihina Indica (Indian coral tree) என்றும் அழைக்கின்றனர்.

---

## 9. கொன்றை

சங்க இலக்கியத்தில் பேசப்படும் அழகிய பூக்களுடைய மரங்களில் கொன்றையும் ஒன்ருகும். கொன்றையின் பூக்கள் மிகமிக அழகானவை. சரம் சரமாக ஒள்ளிய மஞ்சள் நிறத்தில் மாலைகள் தொங்கினாற் போன்று பூத்துக் குலுங்கும் கொன்றையின் பூக்கள் சேய்மையில் காணும்போதே கண்களைக் கவர்ந்தீர்க்கும். கொன்றை மரம் குறுமரமாயினும் பூத்துக் குலுங்கும் காலத்திலும், மரமெல்லாம் கொழுந்துகளாக அரும்பியிருக்கும் காலத்திலும் பார்ப்பதற்கு மிகக் கவர்ச்சியாக இருக்கும். கண்களைப் பளிச்சென்று கவரும் பூக்களுடைய கொன்றை மரத்தைப்போல் மிகச் சில மரங்களே இயற்கையில் உள்ளன. இதன் பூக்கள் விரிவதற்கு முன் உருண்டை உருண்டையாக மாலையில் தொடுக்கப்பட்டதுபோல் தொங்கும். பூக்கள் பல பருவத்தில் அரும்பும் மொக்கும் பூவுமாக மாலையில் கோக்கப்பட்டனபோல் தொங்கியிருப்பதால், கொன்றையின் பூங்கொத்துச் சங்க நூல்களில் பொன்னிழைக்கும், பொன்மாலைக்கும் ஒப்பிட்டுப் பலவிடங்களில் பாடப்பட்டிருக்கின்றது.

"இழையணி மகளிரின் விழைதகப் பூத்த
நீடுசுரி யிணர சுடர்வீக் கொன்றைக்
காடுகவின் பூத்த வாயினு நன்றும்"

என்று வரும் நற்றிணைப் பாடலில் (302) வரும் கொன்றைப் பூவின் விளக்கம் மிகவும் அழகானது.

---

Cassia Fistula.

கொன்றை மரம் பொன் மாலைகள் அணிந்த மகளிரைப் போல நீண்ட சுடர்விடும் பூக்கொத்துக்களுடன் காண்பதாகக் கூறுவது இனிமையான விளக்கம்.

> "வண்டுபடத் ததைந்த கொடியிணை ரிடையிடுபு
> பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
> கதுப்பிற் றோன்றும் புதுப்பூங்/கொன்றை"
>
> (குறுந்தொகை, 21.)

> "ஆடுகளப் பறையின் வரிநுணல் கறங்க
> வாய்ப்பொன் னவிரிழை தூக்கி யன்ன
> நீடிணர்க் கொன்றை கவின்பெறக் காட்டச்
> சுடர்புரை தோன்றி புதறலைக் கொளாஅ"
>
> (அகம், 364.)

மேற்காட்டிய சங்கப்பாடல்களிலும் கொன்றை மரம் மகளிரின் பொன்மாலை போலப் பூத்துத் தொங்குவதாகக் கூறப்படுகின்றது. பிற்காலப் புலவர்களும் இந்த உவமையைப் பொன்னே போற் போற்றிக் கையாண்டனர். இதே ஒப்புமை ஆங்கில இலக்கியத்திலும் காணப்படுவது வியப்பைத் தருகின்றது.

ஆங்கிலத்தில் கொன்றையை 'LABURNAM' என்று அழைப்பர். இந்த ஆங்கிலச் சொல்லுக்குப் பொருள் பொன்மாலை என்பதாகும். மேலும் இதன் பூங்கொத்தை ஆங்கிலத்தில் 'Golden Shower' என்றும் 'Streaming gold' என்றும் கூறுவர்.

> "கவலை கெண்டிய வகல்வாய்ச் சிறுகுழி
> கொன்றை யொள்வீ தாஅய்ச் செல்வர்
> பொன்பெய் பேழை மூய்திறந் தன்ன
> காரெதிர் புறவி னதுவே" (குறுந்தொகை, 233.)

கவலைக் கிழங்கைத் தோண்டியெடுத்த குழியில் கொன்றையின் ஒள்ளிய பூக்கள் வீழ்ந்திருப்பது பொன்

அணிகள் இருந்த பெட்டியைத் திறந்தாற்போலக் காணப்படுவதாகக் கூறியிருப்பது மிக அழகான, நினைந்து நினைந்து இன்புறத்தக்க உவமையாகும். கொன்றையின் பூ சுடு பொன்னுக்கும், அடர் பொன்னுக்கும் உவமித்து ஐங்குறுநூறு,

"அடர்பொன் னென்னச் சுடரிதழ் பகரும்" (430)

"அடர்பொன் னென்ன கொன்றை சூடி" (432)

என்று வரும் பாடல் வரிகளில் கூறுகிறது.

டென்னிசன் (Tennyson) என்ற மாபெரும் ஆங்கிலக் கவிஞர் இயற்கைச் செய்திகளை எடுத்துத் தன் பாட்டுக்களில் கையாளுவதில் மிக்க திறமை வாய்ந்தவர் என்று கூறுவர். அவர் ஒரு பாடலில் "Laburnam Dropping-wells of fire" என்று கூறியதை எடுத்துக் கூறி இயற்கையைப்பற்றிய அவருடைய அறிவையும் புலமையையும் போற்றி ஆங்கில இலக்கியப் புலமையாளர்கள் எழுதியிருக்கின்றனர். ஆனால் சங்க இலக்கியத்தில் இயற்கை (Nature)யை உள்ளது உள்ளபடியே படம் பிடித்தாற் போன்று பாடிய புலவர்கள் பலர் உளர். ஆனால் அதை உணர்ந்தறிந்து இன்புற ஆற்றல் சான்ற அறிஞர் தமிழருள் சிலரேயுளர். மலையாளத்தில் ஓணத்துக்கு அடுத்தபடியாகக் கொண்டாடப்படும் விழா 'விசு' என்பதே. மலையாளத்தில் ஆண்டுப் பிறப்பு அந்த நாளிலே வருகின்றது. பழங்கால நம்பிக்கையின்படி காலையில் எழுந்ததும் எதைப் பார்க்கிறார்களோ அதைப் பொறுத்து அந்த ஆண்டின் வளம் இருக்குமாம். இந்தச் சடங்கை 'விசுக்காணி' என்பர். செம்பில் அரிசி, பொன் அணிகள், பலாப்பழம் முதலியவைகளை வைப்பர். அதன்மேல் கொன்றைப் பூக்

களைப் பரப்புவர். எழுந்ததும் கொன்றைப் பூக்களைப் பார்த்தால் பொன் கொழிக்கும் செல்வம் வளரும் என்ற பழம் நம்பிக்கை இது. சங்க காலத்தில் பொன்னுக்கு உவமித்துப் போற்றியதின் அடிப்படையில் தோன்றிய நம்பிக்கையாக இருக்கலாம்.

கொன்றையின் பூக்கள் ஒன்ருெடொன்று சேர்ந்து பூத்திருக்கும் கொத்தைச் செடி நூலார் 'Panicle' என்று கூறுவர். இது சங்கப் பாடல்களில் 'கொடியிணர்' என்றழைக்கப்படுகின்றது 'இணர்' என்பது பல பூக்கள் ஒரே காம்பில் சேர்ந்திருக்கும் தொகுதியை (மஞ்சரியைக்) குறிக்கும்.

"கொம்புசேர் கொடியிண ரூழ்த்த" (குறுந்தொகை, 66.)

"கொன்றை கொடியிண ரூழ்ப்ப" (பரிபாடல், 8: 24.)

"வண்டுபடத் ததைந்த கொடியிண ரிடையுடுபு"
(குறுந்தொகை, 21.)

சங்கப்பாடல்களில் வழங்கும் 'கொடியிணர்' என்ற சொல்லே ஒரு கலைச் சொல்லாக்கம். கொன்றைப் பூங்கொத்தில் காணப்படும் தனித்தபூ எப்படியிருக்கின்றது என்பதைச் சங்கப் புலவர்கள் விளக்காது விட்டுவிடவில்லை.

"தவளை வாய பொலஞ்செய் கிண்கிணி
காசி னன்ன போதீன் கொன்றை"

என்று குறுந்தொகைப் பாடலில் (148) கொன்றையின் தனிப்பூ மிக அழகாக விளக்கப்பட்டிருக்கின்றது. கிண்கிணியில் உருண்டையாக வெண்கலத்தால் செய்யப்பட்டிருக்கும் குண்டு வாய்ப் பகுதியில் சிறிது திறந்திருக்கும். இது கொன்றையின் மலரும் பருவ மொக்கின் நுனியில் இதழ்கள் சிறிது திறந்திருப்பது

போல இருக்கும். மொட்டாகி அன்றலரும் மலர் சிறிது திறந்தும் திறக்காமலும் இருக்கும். இதை நேரில் கண்டு ஒப்பிட்டுப் பார்ப்பவர்களுக்கு இதன் பொருத்தமும் அழகும் தெரியும். உருண்டையான காசுபோலக் கொன்றைப் பூ இருப்பதாகக் கூறப்பட்டிருப்பதும் அழகிய உவமையாகும். சிறிது திறந்தும் திறக்காமலும் இருக்கும் பருவத்தைக் குறிக்கவே "போதின் கொன்றை" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அக்காலத்துக் காசு உருண்டை வடிவினது என்பது இதிலிருந்து தெரியும். பிற்காலத்தில் பெரியாழ்வாரும்,

"பொருப்பிடைக் கொன்றை நின்று
முறியாழியும் காசும் கொண்டு
விருப்பொடு பொன் வழங்கும்
வியன் மாலிருஞ் சோலையதே"

என்று கொன்றையின் பூவைப் பொன்னிற்கும் காசுக்கும் உவமித்தார். கொன்றையின் இளங்கொழுந்தும் சிவந்து அழகாகக்காணப்படும். இளவேனில் துவக்கத்தில் கொன்றைமரம் முழுவதும் ஒரே இளந்தளிராகத் தோன்றும். செம்புத் தகடுபோலச் சிவந்து பளபளப்பாக ஒளிவிடும் இதன் தளிர்கள் பார்க்க மிக இனியதாக இருக்கும். இதன் கொழுந்தையும் பொன்னுக்கு உவமித்துக் கூறுவது உண்டு.

"முறியிணர் கொன்றை நன்பொன் கால"

என்று வரும் முல்லைப் பாட்டு வரியில் முறியும் இணரும் பொன்னைப்போல ஒளிவிட்டதாகக் கூறப்பட்டிருக்கின்றது. கொன்றைப் பூ பொன்னைப் போலத் தோன்றுவதை அக்காலத்தில் சங்கப் புலவர்கள்

கூறியதையே இக்காலத்து ஆங்கிலப் பெயர்கள் குறிக்கின்றன. கொன்றையின் பூ பளிச்சென்று ஒளிவிடுவதால் இதன் பூக்களை 'ஒள்ளிணர்' 'சுடர்வீ' என்று அழைத்தனர்.

கொன்றையின் பூ நன்றாக மலர்ந்து உதிருமுன் கொம்பு போன்று வளைந்து காணப்படுவதாக அகப் பாட்டில் கூறப்பட்டிருப்பதும் உண்மையே.

',வள்ளுயிர் வணர்மருப் பன்ன வொள்ளிணர்ச்
சுடர்ப்பூங் கொன்றை யூழுறு விளைநெற்(று)"

(அகம், 115.)

நெற்றாகும் முன்னால் உதிரும் பருவப் பூவின் உருவம் வளைந்த கொம்பு போல் இருப்பதாகக் கூறியது பொருத்தமே. கொன்றையின் முதிர்ந்த பூ காம்பிலிருந்து கழன்று வீழும். அப்போது கீழே விழுந்து பூ உட்டுளையுடையதாகக் காணப்படும். இதையே,

"மீநெடு பொலிந்த வானின் தோன்றித்
தேம்பாய்ந்து ஆர்க்குந் தெரியிணர்க் கொற்கின்
காலுறக் கழன்ற கட்கமழ் புதுமலர்

என்று நற்றிணை (302) பாடல் கூறுகிறது.

கொன்றையின் பூ கீழே வீழ்ந்து கிடக்கும்போது மஞ்சள் நிறம் மாறிப் பழுப்பாக மாறிவிடும். இதையே,

...............................கொன்றை
"ஊழுறு மலரிற் பாம்பட முற்றிய
பசலை மேனி................"

என்று அகப்பாடல் (398) கூறுகின்றது.

கொன்றையின் முற்றியகாய்கள் கறுப்பாய், நீண்டு தொங்கும். உள்ளே துளையுடையதாக இருக்கும். அதனால் குழற்காய்க் கொன்றை என்று கூறப்பட்டுள்

ளது. "கொன்றையங் குழலூத கேளாமோ தோழி" என்று வரும் பாடல் வரிகளிலிருந்து கொன்றையின் முதிர்ந்த காயைக் குழலாகப் பயன்படுத்தியது தெரிகிறது. "துணர்க்காய்க் கொன்றை குழற்பழ மூழ்த்தன" என்று ஐங்குறுநூறு கூறுகிறது. கொன்றைக் காய்கள் முற்றி நெற்றுகி விழுந்து பாறையில் பரவிக் கிடப்பதாக அகநானூறு 115-ஆம் பாடல் கூறுகிறது. கொன்றைமரம் கற்பாங்கான இடத்தில் விளையக்கூடிய மரம் என்று செடிநூல் கூறுவதை நோக்குக. பிற்காலத்தில் கல்லாடம் கொன்றையின் கரிய நெற்றுக் காயைக் காரெலியின் வாலுக்குப் பொருத்தமாக ஒப்பிட்டது நகைப்பைத் தருகின்றது. "கடுக்கைச் சிறுகாய் அமைந்த வால் கருப்பை" என்று கல்லாடத்தில் கூறப்படுகின்றது.

*"கடுக்கையம் பொலந்தார் நிரை நிரை நாற்றி*
*நெடுங்காய் மயிர் அமைத்து*
*தோன்றி மரகதத் தண்டில் விளக்கெடுப்ப"*

என்று கல்லாடத்தில் சடைமயிர்போல கொன்றையின் நெடுங்காய் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

*"பொரியரை ஞெமிர்ந்த புழற்காய் கொன்றை*
*நீடிய சடையோ டாடா மேனிக் (கு)* (நற்றிணை 296.)

நற்றிணையில் கொன்றை மரம் நீண்ட சடையோடாடுவதாகக் கூறப்பட்டிருப்பதைப் பின்பற்றியே கல்லாடத்தில் இந்த உவமை பயின்றிருக்கின்றது. சடைமுடியுடைய சந்நியாசிகளின் கற்றைச்சடை போலிருப்பதாகக் கூறப்பட்டிருப்பது அழகாயிருக்கின்றது. "அயிர்ப்புக்கொண் டன்ன கொன்றையந் தீங்கனி, பறையறை கடிப்பின் அறையறையாத் துயல்வர, வெவ்வெளி வழங்கும் வேய்பயில் அழுவத்து" என்று வரும்

நற்றிணை 46 ம் பாட்டில் கொன்றைக்கனி பறையை அடிக்கும் கடிப்பிற்கு உவமிக்கப்பட்டிருப்பது பொருத்தமாகும்.

கொன்றை மரம் கொழுந்து விடுங்கால் பார்க்க அழகாக இருக்கும். கொன்றையின் மெல்லிய கிளைகளிலும் இலைகளிலும் பனி தவழ்ந்திருப்பது, அழகிய நுண்ணிய துகில் போல இருப்பதாகப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

> "கொன்றை மென்சினைப் பனிதவழ் பவைபோற்
> பைங்கா முல்குல் நுண்டுகி லுடாஅக்"

கொன்றையின் ஒழுங்கான அழகிய மலர்க் கொத்தைக் கண்டு மகிழ்ந்ததன் காரணமாகவே உரையாசிரியர்களும் செய்யுளியலில் செந்தொடைக்கு ஒப்புமையாகக் கொன்றை மலர்த் தொடையைக் கூறினர். "செந்தொடையுஞ் செய்யுட் பொலிவு செய்யுங்காற் கொன்றையுங் கடம்பும் போல நின்றவாறே நின்று தொடைப் பொலிவு செய்யுமென்பதாம்" என்று பேராசிரியர் தொல்காப்பியச் செய்யுளியலில் உரை எழுதினார். அசை, சீர், இசை முதலியவற்றால் அழகும் இணக்கமும் கோணமையும் பெற்று, இயல்பிலே மாலையாய்த் தூங்கும் கடப்பம் பூவும் கொன்றைப் பூவும் போன்ற, மற்ற செயற்கைத் தொடை வேண்டாது செய்யுளைச் சிறப்பித்து நிற்றலாற் செந்தொடை எனப்பட்டது என்று விளக்கமும் வேறொரு உரையாசிரியர் கொடுத்தார். இயற்கையிலேயே மாலையாகத் தொங்கும் தன்மையையும் அழகையும், இணக்கம்,கோணமை, ஒழுங்கு ஆகிய எல்லாக்

குணங்களையும் கொன்றையின் மலரில் கண்டு அதையே 'செந்தொடை' என்று அழைத்தனர். இதி லிருந்து எந்த அளவு கொன்றையின் மலர்க் கொத்தை அறிந்து போற்றினர் என்பது நன்கு தெரிகின்றது. சங்க காலத்திலேயே கொன்றையின் மலரைக் கொடி யிணர்க்கொன்றை, தூங்கிணர்க் கொன்றை, நீடிணர்க் கொன்றை, பொலந்தார்க் கொன்றை என்றெல்லாம் குறிப்பிட்டிருக்கின்றனர். கொன்றையின் பூத்தொட ரைக் கண்டுகளித்து நன்கு தெரிந்திருந்தனர். "கொன் றைக் கோதை நிலை" (462) "குறும்பல் கோதை கொன்றை" (497) என்று ஐங்குறு நூறு, கொன் றையின் மலர்த் தொடரைக் 'கோதை' யென்றே அழைக்கின்றது. 'நான்மலர்க் கொன்றையும் பொலந் தார் போன்றன" என்று பரிபாடல் பகர்கின்றது. இணர், தார், கோதை, தொடை ஆகிய சொற்களைக் கொன்றையின் மாலைபோன்ற மலர்த்தொகுதிக்கு வழங்கிவந்திருப்பதுபோல வேறு எந்த மரத்தின் பூவிற்கும் வழங்கவில்லை. மிகப் பிற்கால நூலான பேரூர்ப் புராணமும் "கடுக்கையந் தொங்கல்" என்று கூறிற்று. கொன்றையின் பூங்கொத்து 'ஓர் அடி நீளத் திற்குக் குறையாது காணப்படும்.

'பொரியரை ஞெமிர்ந்த புழற்காய்க் கொன்றை" என்ற வரியில் (நற்றிணை 296) கொன்றையின் பொரிந்த அடிமரம் கூறப்பட்டிருப்பது உண்மையான செய்தியாகும். கொன்றையின் அடிமரம் வழவழப் பாக இருக்காது. பட்டை பொரிந்துதான் காணப் படும். கொன்றை கற்பாங்கான பகுதியில் காணப் படுவதாகச் சங்க நூல்களில் கூறப்படுவதும் இயற்

கையை ஒட்டிய செய்தியே. "நெடும்பொறை மிசை குறுங்காற் சொன்றை" என்று ஐங்குறுநூறும் (430) கொன்றைபத் தீங்கனி "அறையறையாத் துயர்வர" என்று நற்றிணையும் (46) கூறுவதை நோக்க வேண்டும். வறட்சியான பகுதிகளிலும் கற்பாங்கான இடங்களிலும் இயற்கையாக இந்த மரங்கள் காணப் படுகின்றன. சங்கப்பாடல்களிலும் கொன்றை முல்லை யிலும் பாலையிலும் பயில்வது இயற்கையில் காணப் படும் செய்திக்கொத்ததேயாகும்.

கொன்றை, கார்காலத்தில் பூப்பதாகச் சங்க நூல்களிலும் பிற்கால நூல்களிலும் பலவிடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. சங்க நூல்களிலும் காருக்கு எதிராக மலர்வதாகவும், வம்பமாரியைக் காரென மதித்து மலர்வதாகவுந் தெளிவாகக் கூறப் பட்டுள்ளது.

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்"
(அகம், 1: கடவுள் வாழ்த்து)

"கார்விரி கொன்றை கலந்த கண்ணுதலான்"
(தேவாரம் திருஞானசம்பந்தர்)

"மழைக்கரும் பும்மலர்க் கொன்றையினானை"
(தேவாரம், சுந்தரர்.)

கொன்றையின் இயற்கையான மாலை சிவபெருமா னுக்கு அடையாள மாலையாகக் கருதப்பட்டது.

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை"

என்று புறம் (11) பொன்னார்மேனியனின் மார்பில் தவழும் தாரும் கொன்றை, தலையில் அணியும் கண் ணியும் கொன்றை என்று கூறுகிறது.

இக்காலத்தில் காணப்படும் கொன்றையில் இரண்டு மூன்று இனங்கள் உள்ளன. அவைகளில் மஞ்சள் பூவையுடையதே சங்கப் பாடல்களில் கூறப் பட்ட கொன்றையாகும். பிற கொன்றைகள் வெளி நாட்டிலிருந்து கொணரப்பட்டு இங்கு வளர்வன. இவைகளின் பூக்கள் மஞ்சளாக இன்றி வேறு நிறங் களில் காணப்படும் 'சரக்கொன்னே' என்று கூறப் படுவதே சங்க நூற்களில் கூறப்படும் கொன்றை யாகும். பிற்காலப் பாடல்களில் கொன்றையைக் கடுக்கை என்றும் அழைத்தனர். "இணர்ததை கடுக்கை ஈண்டிய தாதில்" — அகம் 393. "ஒல்குநிலைக் கடுக்கை அல்குநிழல்அசைஇ"(அகம்.399.) மேற்காட்டிய அகப்பாடல்களில் 'கடுக்கை' யென்றே கொன்றை அழைக்கப்படுகிறது. கடுக்கன் என்று காதில் அணியும் அணி ஒன்றுளது. அது கொன்றையின் மலரும் பருவத்து அரும்புபோ லிருப்பதால் 'கடுக்கை' கடுக்கன் ஆனதாகத் தெரிகிறது. ஓலை, குழை என்ற செடிகளின் பாகங்கள் அணிகளுக்குப் பின்னுல் பெயர் பெற்றவகை தெரிந்ததே. அழகான இதழ்களுடன் காணப்படுவதால் கொன்றைக்கு 'இதழி' என்றும் பெயர் உண்டு. இது தேவாரத்தில் வழங்குகிறது. இதன் காய்கள் 3 அடி நீளம் இருக்கும். இதன் காய் களைக் குரங்குகள் விரும்பி உண்பதால் இந்தி மொழி யில் கொன்றையைப், 'பந்தர்லத்தி' என்று குரங்குத் தடி என்ற பொருளில் வழங்குகின்றனர்.

---

# 10. பாதிரி

பாதிரி என்ெறாரு மரத்தின் மணமிகுந்த பூவைப் பற்றிச் சங்க நூல்களில் சில செய்திகள் கூறப்பட்டுள்ளன. பாதிரி மரத்தின் பூவைப்பற்றிக் குறிப்பாகக் காணப்படும் செய்திகளிலிருந்து இஃது இந்த இனத்தில் இன்னமரம் என்று அறுதியிட்டுக் கூற முடிகிறது. பாதிரியின் மலர் மஞ்சள் நிறமானது, பொன்னிறமானது என்ற செய்தி சில விடங்களில் கூறப்பட்டிருக்கின்றது.

> "பைங்கூற் பாதிரிப் போதுபிரிந் தன்ன
> அங்கோ சிகமும் வங்கச் சாதரும்"
>
> (பெருங்கதை, 142 : 204)

> "கோசிக, ஆடை பூத்தன பாதிரி"
>
> (சிந்தாமணி, 1650)

பாதிரியின் பூ கோசிக ஆடைக்கு ஒப்பிட்டிருப்பது முக்கியமான செய்தியாகும். கோசிக ஆடை என்பது காசியில் நெய்யப்பட்ட பட்டாடையாகும். இது பொன்னிறமானது. வடமொழியில் 'கவுசிகா' (Kousika) 'என்றழைக்கப்படும். இதிலிருந்து பாதிரிப்பூ மஞ்சள் நிறமானது, பொன்னிறமானது என்பது தெளியப் பெறும். பொற்றகடு போன்ற பாதிரி மலர் என்றும் கூறப்படுகின்றது. மற்றும் பாதிரிப்பூவின் நிறத்திற்கு யாழின் பத்தரை மூடியுள்ள நிறமூட்டப்பெற்ற தோல் உவமிக்கப்பட்டிருப்பதையும் கவனிக்கலாம். யாழின் போர்வையாகப் பயன்படும் இத்தோல் பச்சையென்று சங்க நூல்களில் வழங்கும். இத்தோல் துவரூட்டிப்

பாடம செய்யப்பட்டதாய்ப் பொன்னிறமாய் இருக்கும். மலைபடுகடாம் "புதுவது போர்த்த பொன்போற் பச்சை" (வரி 28) என்று கூறிற்று. பொருநராற்றுப் படையும் "விளக்கழ லுருவின் விசியுறு பச்சை" (வரி 5) என்று கூறிற்று. சிந்தாமணியும் "விளக்கழ லுறுத்தபோ லும் விசியுறு போர்வை" (559) என்று கூறியது.

"காய்சினந் திருகிய கடுந்திறல் வேனிற்
காசிலை யொழித்த பராஅரைப் பாதிரி
வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்தத
னுள்ளகம் புரைபு மூட்டுறு பச்சை"
(பெரும்பாணாற்றுப்படை, 3-6.)

பாதிரியின் மலரைப் பிளந்தால் அதன் இதழ்கள் நிற மூட்டப்பெற்ற யாழின் போர்வை போலிருப்பதாகப் பெரும்பாணாற்றுப்படை கூறுவதிலிருந்து பாதிரிப் பூவின் நிறம் தெளிவாகின்றது. பாதிரிப்பூவின் நிறம் விளக்குச்சுடர் போன்றது, பொன்போன்றது என்பது விளங்கும்.

பெரும்பாணாற்றுப்படையில் காட்டப்பட்ட இதே வரிகளில் வேறோர் உவமையும் உள்ளது. பாதிரியின் நிறம் யாழின் போர்வையின் நிறத்தோடு ஒத்து இருப் பது மட்டுமின்றி அதன் அமைப்பும் யாழின் போர் வையை ஒத்து இருக்கின்றது. பொருநராற்றுப் படையில் யாழின் போர்வை இளஞ்சூலுற்ற ஒரு பெண்ணின் வயிற்றின் தோற்றத்துக்கு ஒப்பிடப்பட் டிருக்கின்றது.

"விளக்கழ லுருவின் விசியுறு போர்வை
யெய்யா விளஞ்சூற் செய்யோ ளவ்வயிற்

றைதுமயி ரொழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை''
(பொருநராற்றுப்படை, 5-8.)

இளஞ்சூலுள்ள பெண்ணின் வயிறு யாழின் போர்வையை ஒத்திருத்கின்றது. சிவந்த பெண்ணின் வயிற்றின் நடுவில் காணப்படும் அழகிய மயிரொழுங்கு யாழின் போர்வையில் பொல்லம் பொத்தியதுபோல் காணப்படுகிறது. பொல்லம் பொத்துதல் என்பது இரண்டு தோல்களும் தைக்கப்பட்டதையே குறிக்கின்றது. போர்வையில் தைத்த ஒழுங்கு பெண்ணின் வயிற்று மயிரொழுங்குபோலக் காணப்படுகிறது. இது தான் நுட்பமான உவமை. மகளிரின் வயிற்று மயிருக்குப் பொல்லம் பொத்துதல் உவமிக்கப்பட்டவாறே பாதிரி மலரின் உள்வயிற்று மயிரொழுங்கு, யாழின் போர்வையின் பொல்லம் பொத்துதலுக்கு உவமிக்கப் பட்டிருப்பதை நச்சினார்க்கினியர் கவனிக்கவில்லை. அதனால் பாதிரி ''வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்ததன் உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சை" என்பதற்குப் பொருத்தமின்றிப் பொருள் கூறினார். பாதிரிப்பூவின் நிறத்திற்கு மட்டுமின்றி பாதிரிப்பூவின் வயிற்றில் காணப்படும் குறுமயிருக்கும் யாழின் போர்வை ஒத்திருக்கின்றது. பெண்ணின் வயிற்று, மயிரொழுங்குக்கு எப்படிப் பொல்லம் பொத்துதல் பொருந்தி யிருந்ததோ அதே போல பாதிரி மலரது வயிற்றின் உள்ளகத்தில் காணப்படும் குறுமயிரொழுங்கு யாழின் போர்வையில் பொல்லம் பொத்துதலை ஒத்திருந்தது. இதையே பெரும்பாணாற்றுப்படை வரிகள் குறிக்கின்றன. இவ்வாறு கொள்வதற்கு வேறு பாடல் சான்றுகளும் இருக்கின்றன.

"முதிரா வேனி லெதிரிய வதிரல்
பராஅரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்
நறுமோ ரோடமொ டுடனெறிந் தடைச்சிய
செப்பிடந் தன்ன நாற்றந் தொக்குட
னணிநிறங் கொண்ட மணிமரு ளைம்பால்"

(நற்றிணை, 337)

"வேனிற் பாதிரிக் கூன்மல ரன்ன
மயிரேர் பொழுகிய வங்கலும் மாமை"

(குறுந்தொகை, 147)

பாதிரி மலரின் உள்ளே காணப்படும் குறுமயிரொழுங்குக்குத் தலைவியின் வயிற்றுமயிரொழுங்கை ஒப்பிட்டுக் குறுந்தொகை கூறுவதைக் கவனிக்கவேண்டும். பாதிரிக்குக் குறுமயிர் உண்டென்று நற்றிணைப்பாடலும் கூறுகின்றது. இந்தக் குறுமயிரொழுங்கே மகளிரின் வயிற்று மயிரொழுங்குக்கும், பெரும்பாணாற்றுப்படையில் பொல்லம் பொத்திய பச்சைக்கும் ஒப்பிட்டுக் கூறப்பட்டிருக்கின்றது. இம்மயிர் பாதிரிமலரின் வயிற்றில் இதழ் உள்ளில் காணப்படுவதால் வயிற்றிடையே வகுத்து அதன் உள்ளகம் போன்று யாழ்ப்போர்வை பொல்லம் பொத்திய போர்வை இருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. இந்தப் பொருத்தமான ஒப்புமையின் நுண்மையை உணராது உரையாசிரியர் "வண்டையுடைய பூவினுடைய வயிற்றகத்தைப் பிளந்த புலாலினுடைய உள்ளிடத்தையொக்கும் நிறமூட்டப்பட்ட தோல்" என்று பொருள் கூறினர். மாமலர்என்பதற்குப் பெரியமலர்என்றுநேரிய பொருள் கொள்ளலாம். பாதிரிப்பூவின் வயிற்றகத்தைத் திறந்தால் எப்படிப் புலாலின் நிறமுடைய உள்ளிடத்தையொக்கும் என்று தெரியவில்லை. புலாலின் நிறத்

திற்கும் பாதிரியின் நிறத்திற்கும் என்ன ஒப்புமையோ தெரியவில்லை. பாதிரிமலரின் வயிற்றில் காணப்படும் மயிரொழுங்கே பெண்ணின் வயிற்று மயிரொழுங்குக்கு ஏற்கெனவே ஒப்பிடப்பட்டதிலிருந்து, அதுவே பொல்லம் பொத்திய தோலைப்போலிருந்தது என்று பொருள் கொள்வதே பொருத்தமானது. பாதிரி மலருக்குக் குறுமயிர் உண்டா என்பது தெளியவேண்டும். செடிநூல் (Botany) பாதிரிமலரின் அடிப்பகுதியில், இதழ் உள்ளகத்தில் குறுமயிர் இருப்பதாகவே கூறுகிறது. பாதிரி மலரை வெட்டிப் பார்த்தால்—செடிநூலறிஞர் இப்படித்தான் ஆராய்வர்—மலரிதழின் அடிப்பகுதியில் மகரந்தத் தாள்கள் துவங்குமிடத்தில் சுற்றிலும் ஒரேவரிசையாகக் குறுமயிர்கள் (Filaments with a short tuft of wooly hairs at the very base)உண்டுஎன்று செடிநூல் கூறுகின்றது. இதே செய்தியைப் பெரும்பாணாற்றுப் படையும் மற்றும் இரண்டு சங்கநூல்களும் கூறுவது மிக மிக வியப்பைத் தருகின்றது.

பாதிரி மலரிதழில் மயிர் உண்டென்பதைச் சீவக சிந்தாமணி 52ஆம் பாடலும் குறிப்பாக உணர்த்துகின்றது. பாதிரிப்பூ வொத்த நத்தையின் நாக்கு என்று கூறப்பட்டதைக் கவனிக்கவேண்டும். நத்தையின் நாக்கு சுரசுரப்பானதாக இருக்கும். அதேபோல் பாதிரிப்பூவும் குறுமயிருடையதாக சுரசுரப்புடையதாக இருக்கின்றது. 'நித்திலப் பந்துடனீன்று பாதிரி ஒத்த பூ வுடற்றியநாவி ஞகிஞற்' சீவகசிந்தாமணி 52ஆம் பாடல். சீவகசிந்தாமணியில் நத்தையின் சுரசுரப்பான நாக்கு பாதிரிமலரின் இதழுக்கு ஒப்பிடப்பட்டிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

மேலே காட்டிய பெரும்பாணாற்றுப்படை வரிகளே வேறுசில செய்திகளையும் கூறுகின்றன. வேனிலில் பாதிரி பூப்பதாகக் கூறுகிறது. அதுவும் உண்மையே. செடி நூற்படி ஏப்ரல், மே மாதங்களில் இது பூக்கின்றது. "வேனிற்பாதிரி" என்றொரு வழக்கே ஏற்பட்டுவிட்டதன் காரணமாக 'வேனிற்கட் பாதிரி' என்று நன்னூல், மயிலைநாதனுருரை கூறுகிறது; 'வேனிற்பாதிரி' என்று குறுந்தொகையும் (167), அகநானூறும் (257) அழைக்கின்றன. கடுந்திறல் வேனிலில் பசிய இலையை ஒழித்துவிட்டுப் பாதிரி பூப்பதாகவும் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது. இதுவும் செடிநூற்படி உண்மையே. மரத்தில் இலைகளுதிர்ந்த பிறகு பூக்கள் தோன்றுவதாகச் செடிநூல் (Flowers appearing after the leaves) கூறுகின்றது. "வள்ளிதழ் மாமலர்" என்று கூறப்பட்டிருக்கிறது. இதில் பாதிரிப்பூவின் இதழ் கொழுவியதாகக் காணப்படுவது கூறப்பட்டிருக்கின்றது. இதன் பூவிதழ்கள் தடித்து இருப்பதாகவே (Corolla tube narrow and much swollen upwards) செடி நூலும் கூறுகிறது.

பாதிரியின் மலர் சிறிது வளைந்து காணப்படும், என்று கூறப்படும். இதன் இதழ்வட்டம் குழாய் போன்று வளைந்துஉள்ளதாகச்(Corolla tubular Companulate and Curved) செடிநூல் கூறுகிறது. சங்க நூல்களிலும் 'கூன்மலர்' என்றே அழைக்கப்படுகின்றது.

"வேனிற் பாதிரிக் கூன்மல ரன்ன" (குறுந்தொகை, 147.)

"வேனிற் பாதிரிக் கூனி மாமலர்
நறைவாய் வாட றுநாட்சுர(ம்)" (அகம், 257)

"பைங்கூற் பாதிரிப் போதுபிரிந் தன்ன" (பெருங்கதை)

'கூன்மலர்' என்றதால் பாதிரிமலரின் வளைந்த தன்மையைச் சங்கப்புலவர்கள் தெரிந்து இருந்தது தெளிவாகிறது.

சங்க நூல்களில் பாதிரிப் பூவைப்பற்றி வேறொரு முக்கிய செய்தியும் வருகின்றது. பாதிரிப்பூவின் தலை பஞ்சுபோல் இருப்பதாகவும் பூவின் இதழில் வரிகள் காணப்படுவதாகவும் கூறப்பட்டிருக்கின்றன.

"அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ
எரியிதழ் அலரியொடு இடைபட விரைஇ" (அகம், 191)

"இணருறு புடைவதன் றலையும் புணர்வினை
யோவ மாக்க ளொள்ளரக் கூட்டிய
துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி
வாலித ழலரி வண்டுபட வேந்திப்
புதுமலர் தெருவுதொறு நுவலும்
நொதும லாட்டிக்கு நோமென் நெஞ்சே" (நற்றிணை, 118)

துய்த்தலைப் பாதிரி என்றதால் பாதிரிப்பூவின் தலைப்பகுதி பஞ்சுபோன்றிருக்கும் என்பது தெரிகிறது. பாதிரிப்பூவின் இதழ்கள் குழாய்போலச் சேர்ந்திருக்கின்றன. ஆனால் தலைப்பகுதியில் இதழ்களின் நுனியின் ஓரம் பஞ்சுபோல் மடிந்து (Cuisped) மென்மையாக இருக்கும். இதையே சங்கப்பாடல் 'துய்த்தலை' என்று கூறுகின்றது. நற்றிணையில் "ஓவமாக்கள் ஒள்ளரக்கு ஊட்டிய துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி" என்று விளக்கப்பட்டிருக்கின்றது. இதற்கு ஓவமாக்கள் ஒள்ளரக் கூட்டிய எழுதுகோல் போன்ற பாதிரி என்று பொருள் கொண்டனர். இது தவறு. துகிலிகைக்கும் ஒள்ளரக்கு ஊட்டியதற்கும் யாதொரு தொடர்புமில்லை. பாதிரிப்பூவின் துய்த்தலைதான்

துகிலிகை போலிருக்கிறது. துகிலிகையின் நுனி பஞ்சுபோல் மெல்லிய துகிலினால் அமையப்பெற்றது. பாதிரியிதழின் நுனிப்பகுதியும் பஞ்சுபோல் துகிலிகையின் நுனிபோல் மென்மையாக இருக்கின்றது. ஓவமாக்கள் ஒள்ளரக்கு ஊட்டியதுபோல துகிலிகையன்ன துய்த்தலைப் பாதிரி இருக்கின்றது. பாதிரி மலர் ஒள்ளரக்கூட்டியது போலிருக்கின்றது என்று சொல்வதன் பொருத்தம் என்ன?

"அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன
செவ்வரி யிதழ சேணுறு நறவின்" (நற்றிணை, 25)

நறைக்கொடியில் பூத்த மலரிதழில் செவ்வரிகள் படர்ந்திருந்த தன்மை வெள்ளிய சங்கின் முதுகில் அரக்கைத் தீற்றினாற்போல் இருந்ததாக நற்றிணை கூறுகின்றதை இதன் சார்பாக ஒத்திட்டுப் பார்க்க வேண்டும். நறையிதழில் அரக்கீர்த்தது போலத்தான் பாதிரி மலரும் ஒள்ளரக்கூட்டப்பட்டது போலிருந்தது. செடிநூலிலும் இந்தச் செய்தியே கூறப்பட்டிருப்பது வியப்பிலும் வியப்பைத் தருகின்றது. பாதிரிமலரின் உள்ளகத்தில் கருஞ்சிவப்பான வரிகள் உள்ளதாக (veined and tinged with reddish purple) செடிநூலும் கூறுகின்றது. பாதிரிப்பூவுக்கு நிறமான வரிகள் இருப்பதைப்

"புன்காற் பாதிரி யரிநிறத் தொள்வீ"

என்று அகநானூறு 237ஆம் பாடலும் குறிப்பிடுகின்றது. வரிகளுடன் கூடிய நிறமான பூ என்று கூறப்படுவதைக் கவனிக்கவேண்டும். பாதிரி மலரைக் கண்டு ஆராய்ந்தறியாத பிற்கால உரையாசிரியர் துகிலிகையால் ஒள்ளரக்கூட்டியதாகக் கொண்டு பொருத்தமில்லாமல் பொருள் எழுதினார்.

பாதிரி மலர் நல்ல நறுமணமுடையது என்று சங்க நூல்களில் குறிப்பிட்டிருக்கின்றது. மேலே காட்டிய நற்றிணை 338 ஆம் பாட்டில் பாதிரி மலரைச் செறித்து வைத்திருந்த பூச்செப்பைத் திறந்தாற்போல் நறுமணம் வீசும் கூந்தல் என்று கூறப்பட்டிருக்கின்றது. நற்றிணை 118ஆம் பாடலிலும் வண்டு மொய்க்கும் பாதிரி மலர்களை வட்டிலில் ஏந்திப் பெண்கள் தெருவுதோறும் கூவி விற்றதாகக் கூறியிருக்கின்றது.

"கானப் பாதிரி கருந்தகட் டொள்வீ
வேன லதிரலொடு விரைஇக் காண்வர
சில்லைங் கூந்த லழுத்தி மெல்லிணர்" (அகம், 261)

"மாக்கொடி யதிரற் பூவொடு பாதிரித்
தூத்தகட் டெதிர்மலர் வேய்ந்த கூந்தல்" (நற்றிணை, 52)

"பாதிரி கமழு மோதி யெண்ணுதல்
இன்னகை விறலியொடு மென்மெல வியலிச்" (புறம், 70)

மேற்காட்டிய பாடல்களிலும் மணத்துக்காகத் தங்கள் கூந்தலில் பாதிரி மலரை அணிந்ததாக கூறப்பட்டிருக்கின்றது. பாதிரி மலர் நறுமணமுடையது (fragrant) என்று செடிநூலும் கூறுகிறது. அலரியிதழொடு பாதிரி மலரையும் இடைஇடையே கட்டிய மாலையை அணிந்ததாக அகநானூற்றுப் பாடல் (191) கூறுகின்றது. பாதிரிமலரால் மாலை தொடுப்பதைப்பற்றி அகநானூறு 261ஆம் பாடல் கூறுகிறது. பாதிரி மலர் மிகுந்த குளிர்ச்சியைத் தருவதாகக் கருதினர். "அந் தண் பாதிரி" என்று அகப்பாடல் 99பாதிரியின் குளிர்ந்த பூவைக் குறிப்பிடுகின்றது. சிலப்பதிகார உரையில் அழற்றிறம் பட்டோன் அபிநயம் உரைக்குங்கால் "பனிநீருவப்பும், பாதிரித்தொடையலும்" விரும்புவ

தாகக் கூறப்பட்டிருக்கின்றது. மற்றும் நாலடியாரில் (139ஆம் பாட்டு) ஒண்ணிறப் பாதிரிப்பூவை மண் குடத்தில் அடைத்துப் பின்னர் அதே குடத்தில் நீரை வார்த்துப் பாதிரிப்பூவின் மணமேறிய நீரில் நீராடுவர் என்று குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

பாதிரி மலரின் அகவிதழ் மட்டுமன்றிப் புறவிதழும் சங்க நூல்களில் பேசப்படுகின்றது. அகநானூறு 261ஆம் பாடலில் "கானப் பாதிரி கருந்தகட் டொள்வீ" என்று கூறுவதைக் கவனிக்கவேண்டும். "கருந்தகடு" என்று பாதிரிப் பூவின் புறவிதழ் குறிக்கப்படுகின்றது. சங்க நூல்களில் 'தகடு' என்று குறிப்பிடப்படுவது பூவின் தடித்த புறவிதழேயாகும்.

"மரக்கொடி யதிரற் பூவொடு பாதிரித்
தூத்தகட் டெதிர்மலர் வேய்ந்த கூந்தல்"

என்று வரும் நற்றிணைப் பாடல் வரிகளிலும் பாதிரி மலரின் புறவிதழ் "தூத்தகடு" என்றே அழைக்கப்படுகின்றது. பாதிரி மலரின் புறவிதழ் கருஞ்சிவப்பாக இருக்கும். இதே "கருந்தகட் டொள்வீ" என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றது. பாதிரி மலர் உதிரும் பருவத்தில் இதழ்கள் பிரிந்து சோர்ந்து விழுந்துவிடும்.

"பாதிரி யூழ்முகை யவிழ்விடுத் தன்ன
மெய்களைந் தினனொடு விரைஇ......" (புறம், 399)

பாதிரி மலரின் இதழ்கள் சோர்வது உடம்பில் ஆடைகளைவது போலிருந்ததாகப் புறநானூறு கூறுகிறது.

பாதிரிமரம் 'கானப்பாதிரி' என்றும், 'அத்தப் பாதிரி' என்றும் சுரத்தில் காணப்படுவதாகவும் கூறப்படுவதிலிருந்து பாதிரிமரம் வறட்சியான நிலத்திலே

வளர்வதாகக் கூறப்படுவது விளங்குகிறது. பாதிரி பாலைக் கருப்பொருளாகவே கூறப்படுகின்றது. செடி நூலிலும் வறட்சியான காடுகளில் (Dry forests) பாதிரியில் ஒரு வகை காணப்படுவதாகக் கூறப்பட்டிருக்கின்றது.

சங்க நூல்களில் பாதிரி என்றே வழங்கப்பட்ட இம்மரம் முதன் முதலாக சிலப்பதிகாரத்தில் தான் பாடலம் என்று அழைக்கப்படுகிறது. "பாடலந் தன்னொடு பன்மலர் விரிந்து" என்று சிலம்பில் வருகின்றது. சூடாமணி நிகண்டிலும் பாதிரிக்குப் பாடலம் என்ற பெயர் கூறப்பட்டிருக்கின்றது. திருப்பாதிரிப்புலியூர் பாதிரியைத் தலமரமாகப் பெற்றது. அதனால் பெயர் பெற்றது. அதையே 'பாடலி' என்றும் வழங்குவர். தற்போது பாட்னா என்று வழங்கும் ஊரும் 'பாடலி' என்றே நந்தர் காலத்தில் பாதிரிப்பூவின் பெயரால் வழங்கியதாக வரலாறு கூறும்.

பாதிரிப்பூ கோசிக ஆடைபோல் நிறமானது; பாதிரிப்பூவின் தலைப்பகுதி பஞ்சு போன்றது; பூவிதழில் சிவப்புக்கோடுகள் உண்டு: பாதிரிப்பூவின் அடிப் பகுதியில், இதழுள் குறுமயிர் உண்டு; இலைகளைக் களைந்தபின் பாதிரி பூக்கும்; நறுமணமுடையது; பூ வளைந்த உருவம் உடையது; அகவிதழ் கொழுவியது; புறவிதழ் கருஞ்சிவப்பானது; ஆகிய இச்செய்திகள் சங்க நூல்களில் பாதிரிப் பூவைப்பற்றிக் கூறப் பட்டவை. இச்செய்திகளைச் செடி நூலறிவு கொண்டு ஆராய்ந்து ஒப்பிட்டுப் பார்க்குங்கால் பாதிரி என்பது (Stereospermum) என்ற ஒரு மர இனத்தைச் (family) சேர்ந்ததென்றும், அதிலும் குறிப்பாக (Radermachera

Xylocarpa (Stereospermum Suaveolons D. E. Benth & Hook. F.) என்ற வகையைச் சேர்ந்தது என்பதும் தெளிவாகத் தெரிகின்றது. இந்த வகைக்குத்தான் பூக்கள் வெண்மையில் மஞ்சள் கலந்ததாக (White tinged with yellow) காணப்படுவதாகக் கூறப்படுகின்றது. சங்க நூல்களிலும் பொன்னிறமென்றும் 'வாலிது' 'ஒண்ணிறம்' என்றும் கூறப்படுவது இதற்கு அரண் செய்கின்றது. இதனால் தற்காலத்தில் பூம்பாதிரி என்று அழைக்கப்படும் பாதிரி மரத்தையே (Stereospermum Suaveolons)சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. இலைகளை யுதிர்த்தபின் இந்த மரங்களே பூக்கின்றன. வறட்சியான காடுகளிலும் இடங்களிலும் இந்த மரவகையே காணப்படுகின்றன. பூ மாதுளை, பூ மருது என்ற பெயர்களில் பூவின் சிறப்புக்காக பூ என்ற அடைமொழி பெயருடன் வழங்கப்பட்டது போல் சிறந்த பூவையுடைய ஒரு வகைப் பாதிரிக்கே பூம்பாதிரி என்று பெயரிட்டழைத்ததாகத் தெரிகின்றது. இதுவே சங்க நூல்களில் கூறப்பட்ட பாதிரியாகும்.

---

# 11. புன்னை

சங்க காலப் புலவர்கள் போற்றிப் பாடிய மரங்களில் புன்னையும் ஒன்றாகும். புன்னைமரம் இயற்கையில் வாழுமிடம், புன்னையின் கிளை, இலை, மொக்கு, பூ, மகரந்தத்தாது, காய் ஆகியவைபற்றிச் சங்கப் புலவர்கள் கண்டுணர்ந்து பாடியுள்ளனர். புன்னை மரத்தைப்பற்றி அழகான ஒரு காட்சி நற்றிணை 249ஆம் பாடலில் கூறப்பட்டிருக்கின்றது.

"இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத் தன்ன பாசிலை யகந்தொறும்
வெள்ளி யன்ன விளங்கிணர் நாப்பண்
பொன்னி னன்ன நறுந்தா துதிரப்"

இரும்பைப் போன்று கரிய நிறமுடைய கிளைகளுடன் கூடிய புன்னையின் நீலம் போன்ற பச்சையிலையுள் தோன்றும் வெள்ளியைப்போன்று விளங்கும் பூங்கொத்துப் பரப்பினுள் பொன்னைப் போன்ற நறிய மகரந்தத்தூள் உதிரும் என்று கூறப்பட்டிருப்பது மிகப் பொருத்தமான - அழகான விளக்கமாகும்.

கடற்கரையோரத்தில் ஒருசில மரங்களே வளரக் கூடியவை. கடற்கரைக்கு சிறிது தள்ளிக் காணப்படும் கானலில் (Littoral woodland) வளரும் மரங்களில் மிகவும் எளிதாகவும், பொதுவாகவும் காணப்படுவது புன்னைமரமென்று செடிநூலார் கருதுகின்றனர். இதையே சங்க நூல்களில் பலவிடங்களில் கடற் கானலில் காணப்பட்டதாகக் கூறியிருப்பது கூர்ந்து கவனிக்கத்தக்க செய்தியாகும். புன்னை மரத்தை நெய்தல் திணைக்குரிய மரமாகக் கடல்சார்ந்த இடத்தில் காணப்படுவதாகச் சங்க நூல்களில் பலவிடங்களில்

பாடப்பட்டிருக்கின்றது. கடற்கரையை அடுத்த சூழ் நிலையில் கூட்டமாகப் புன்னைமரம் காணப்படுவதாகச் செடிநூலாரும் கூறுவர். சங்க நூல்களில் கடல் அலைநீர் புன்னைமரத்தில் படுவதாகவும் கடற்கரை மணல் மேடுகளில் புன்னை காணப்படுவதாகவும் கூறப் பட்டிருப்பது முற்றிலும் உண்மையே.

" இருடிணிந் தன்ன வீர்ந்தண் கொழுநிழல்
நிலவுக்குவித் தன்ன வெண்மண லொருசிறைக்
கருங்கோட்டுப் புன்னை பூம்பொழில் புலம்ப''

(குறுந்தொகை, 123)

நிலவொளியைக் குவித்தாற்போன்றுள்ள வெண் மணலில் புன்னைமரம் காணப்படுவதாகக் கூறுவதைக் கவனிக்கவும்' புன்னையை ' எக்கர் புன்னை ' என்றும், (அகம், 20) 'கானல் புன்னை' (நற்றிணை, 74) என்றும் புன்னை மரம் காணப்படும் சூழல் விளக்கப்படுகின்றது. புன்னைமரம் கானலில் சூழ்ந்து காணப்பட்டதால் புன்னையம் பொதும்பு (அகம், 340), புன்னையங்கானல் (அகம், 80) புன்னைப் பூம்பொழில் (குறுந்தொகை, 123) என்றும் கூறப்படுகின்றது.

• புன்னைமரக்கிளை கரியதாகக் காணப்படும். கடற் கரை மரங்களில் இதைப்போன்ற கரிய கிளைகளை யுடைய பிற மரங்களைக் காண்பது அரிது. இதனுல் தான் ' கருங்கோட்டுப் புன்னை ' என்று சங்கநூல்களில் கூறப்படுகின்றது.

" கருங்கோட்டுப் புன்னை இறைகொண் டனவே''

(நற்றிணை, 67)

''இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை''

(நற்றிணை, 249)

"கருங்கோட்டுப் புன்னை மலரிற்று தருந்தி"

(நற்றிணை, 311)

"கருங்கோட்டுப் புன்னை பூம்பொழில் புலம்ப"

(குறுந்தொகை, 123)

"கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறும்"

(கலி.)

கருங்கோட்டுப் புன்னை என்று புன்னையின் கிளையைக் கூறியது மிகப் பொருத்தமான விளக்கமாகும். புன்னை மரம் கடற்கரைச் சூழ்நிலையில் வாழ்வதால் பொதுவாக நெடிதாக வளர்வதில்லை. இதன் கிளைகள் நேராக வளராது வளைந்து காணப்படுவதைப் பலரும் பார்த்திருக்கலாம்.

"முடமுதிர் புன்னை தடவுநிலை மாச்சினை"

(அகம், 10.)

"படப்பை நின்ற முடத்தாட் புன்னை"

(அகம், 180.)

"தடவுநிலைப் புன்னை தாதணி பெருந்துறை"

(அகம், 320.)

"கொடுங்காற் புன்னை கோடுதுமித் தியற்றிய"

(பெரும்பாண், வரி 266.)

புன்னையின் அடிமரமும், கிளையும் வளைந்திருப்பவாக் கூறப்பட்டிருப்பது செடிநூற்படியும் உண்மையான செய்தியே.

"கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்"

(நற்றிணை, 167)

மேற்காட்டிய நற்றிணைப்பாட்டில் "குடக்கு வாங்கு பெருஞ்சினை" என்று சொல்லப்பட்டிருப்பது நுண்ணிய

உண்மையான செய்தியாகும். கடற்கரையில் வீசும் ஈரக்காற்றினால், உப்பங்காற்றினால் ஊறு ஏற்படா திருப்பதற்காகப் புன்னையின் கிளைகள் மேற்கு நோக்கி வளைந்து நீட்டியிருப்பதுண்டு. இது செடிநூற்படி மிகவும் உண்மையான செய்தியாகும். இதே செய்தி நற்றிணை 91ஆம் பாடலிலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. நாரையானது புன்னையின் மேற்கு நோக்கிய கிளையில் கூடுகட்டுவதாக, 'மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பை" என்ற வரியில் கூறப்பட்டிருக்கின்றது. கடல் அலையின் துளிகள் புன்னை மரத்தில் வீசுவதாகக் கூறப் பட்டிருப்பதையும் கவனிக்கலாம்.

"வான்கடற் பரப்பில் தூவற் கெதிரிய
மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த
முடவுமுதிர் புன்னை தடவுநிலை மாச்சினை"

(அகம், 10)

கடற்றூவலினால் ஊறு நேராதிருக்கவே புன்னையின் கிளைகள் மேற்கு நோக்கி வளைந்து வளர்கின்றன. செடி நூலாரும், புன்னையின் கிளைகள் கடற்கரைப்பக்கம் நீட்டிக்கொண்டிராமல் உள் நாட்டையே (Inland) நோக்கி வளர்வதைக் கண்டு கூறியிருக்கின்றனர்.

பொதுவாக மரஞ்செடி கொடிகளின் பூக்கள்தாம் அழகானவை யென்று கருதப்படுகின்றது. ஆனால் புன்னை மரத்திற்குப் பூவைத்தவிர அதன் இலையும் மிக அழகானது. புன்னையின் இலை கரும்பச்சையாகப் பள பளவென்று காணப்படும். மெழுகு பூசினாற்போல் வழுவழுப்பாக ஒளிவிடும் புன்னை இலை பார்ப்பதற்கு அழகானது.

"வதிகுரு குறங்கு மின்னிலைப் புன்னை"

(குறுந்தொகை, 5)

"மின்னிலைப் பொலிந்த விளங்கிணர் அவிழ்பொன்"

(அகம், 80)

புன்னையின் இலை மின்னுவதாகக் கூறப்பட்டிருக்கின்றது. இதன் இலை கரும்பச்சையாக (Dark green) இருப்பதும் சங்க நூல்களில் கூறப்பட்டிருக்கின்றது.

"நீலத் தன்ன பாசிலை யகந்தொறும்"

(நற்றிணை, 249)

"நீனிறப் புன்னை கொழுநிழ லசைஇத்"

(நற்றிணை, 4)

"நீல்நிறப் புன்னைத் தமியொண் கைதை"

(நற்றிணை, 163)

நீலம்போன்ற பச்சையிலையென்றது புன்னையின் கரும்பச்சையைக் குறித்ததேயாகும். நீலநிறப் 'புன்னை யென்றது புன்னையின் இலைப் பரப்பைக் குறித்தே கூறப்பட்டது. செடி நூலிலும் இதன் இலையின் கரும்பச்சை நிறத்தையும் பளபளப்பையும் பார்த்துப் புன்னையிலையை மிக அழகிய இலையாகக் கருதினர். இதன் அழகிய இலைகளைக் கருதியும் (Handsome foliage) பூவிற்காகவும் பூங்காக்களில் (Parks) புன்னையை அழகுக்காக வளர்க்கின்றனர்.

புன்னையின் பூவைப்பற்றிப் பலவிடங்களில் சங்க நூல்கள் கூறுகின்றன. புன்னையின் பூ இணராக, கொத்தாகக் காணப்படுவதாகக் கூறப்பட்டிருக்கின்றது. செடி நூலிலும் புன்னையின் பூக்கள் தனித் தனியே காணப்படுவதில்லை, கொத்தாகக் (Inflorescence) காணப்படும் என்று கூறப்பட்டிருக்கின்றது.

"இணரவிழ் புன்னை யெக்கர் நீழல்"

(குறுந்தொகை, 299)

"மின்னிணர் புன்னையம் புகர் நீழல்"

(குறுந்தொகை, 303)

புன்னை பூங்கொத்து அழகாக விளங்குவதால் "விளங்கிணர்' '(அகம், 80), (நற்றிணை, 249) "மின்னிணர்" என்றும் கூறப்படுகின்றது. நற்றிணை, 249ஆம் பாடலில் 'வெள்ளி யன்ன விளங்கிணர் நாப்பண்" என்று மிக அழகாக இதன் பூங்கொத்து வருணிக்கப்பட்டிருக்கின்றது. இதன் பூ மிக வெண்மையானது. மொக்கு. பூ, பூவின் காம்பு ஆகிய எல்லாம் வெண்மையாகக் காணப்படுவதைப் (White wasey flowers) புன்னையில் தான் காணமுடியும். அதனால்தான் 'வெள்ளியன்ன விளங்கிணர்' என்று கூறினர். புன்னையின் அரும்பு குவிந்து உருண்டையாகக் காணப்படும். இதனால் இதைக் கழுவாத முத்திற்கு உவமித்துப் பாடினர்.

"கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ
மண்ணு பசுமுத்து ஏய்ப்பக் குவியிணர்ப்
புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்"

(நற்றிணை, 94)

"மண்ணு முத்தம் அரும்பிய புன்னை"

(அகம், 30)

"நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவும்"

(சிறுபாண், வரி 59.)

இதன் அரும்பு மரலின் மொக்குப்போல இருப்பதாக நற்றிணை, 278ஆம் பாடல் கூறுகின்றது. இதன் மொக்கு அவிழ்வதை அரும்பு உடைவதாக, "பனியரும்பு உடைந்த பெருந்தாள் புன்னை" என்று நற்றிணை 87ஆம் பாடல் கூறுகின்றது. புன்னையின் வெள்ளிய மொக்கு உடைவதை மிக அழகாக ஓர் உவமையின் வாயிலாகப் புலவர் ஒருவர் நற்றிணையில் பாடி யிருக்கின்றார்.

"உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன
பெரும்போது அவிழ்ந்த கருந்தாள் புன்னை"

(நற்றிணை, 201)

ஊர்க்குருவியின் முட்டை உருவிலும் நிறத்திலும் புன்னையின் முற்றிய வெள்ளை அரும்பை ஒத்திருக்கின்றது. புன்னையின் அரும்பு அவிழ்வது ஊர்க் குருவியின் முட்டையை உடைத்தது போன்று இருப்பதாகக் கூறப்பட்டிருப்பது மிக நுண்ணிய, அழகான உவமையாகும். "பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை" என்று ஐந்திணையம்பது பல்லிமுட்டையைப்போலப் புன்னையரும்பு காணப்பவதாகக் கூறியிருப்பது அழகிய உவமையாகும். புன்னையின் இதழ்கள் பிரிவது ஊர்க்குருவி முட்டை ஓடு உடைந்து விரிவதை ஒக்கும். அத்துடன் ஒப்புமை நின்றுவிடவில்லை. புன்னையின் அரும்பு உடைந்ததும் பொன்னிறமாக மகரந்தம் மேலே காணப்படும். இது முட்டையின் மஞ்சள் கருபோலக் காணப்படும். புன்னையின் மகரந்தத்தைப் பற்றியும் பல பாடல்கள் குறிப்பிடுகின்றன.

"பொன்னி னன்ன தாதுபடு பன்மலர்"

(நற்றிணை, 278)

"பொன்னேர் நுண்டாது புன்னை தாஅம்"

(நற்றிணை, 78)

"பொன்னி னன்ன நறுந்தா துதிர"

(நற்றிணை, 249)

"மின்னிலைப் பொலிந்த விளங்கின அவிழ்பொற்
றண்ணறும் பைந்தா துறைக்கும்
புன்னையங் கானல்........."

(அகம், 80)

"பொன்னேர் தாதின் புன்னையொடு கமழும்"

(நற்றிணை, 235)

"புதுமணற் கானல் புன்னை நுண் தாது
கொண்டல் அசைவளி தூக்குதொறுங் குருகின்
வெண்புறம் மொசிய வார்க்கும்" (நற்றிணை, 74)

"புன்னை நுண்தாது பொன்னின் நொண்டு"
(அகம், 230)

"புன்னை நறுவீ பொன்னிறங் கொளாஅ"
(அகம், 260)

"பொன்னிணர் அன்ன நறுமலர்ப்புன்னை வெஃகித்"
(அகம், 126)

புன்னைப்பூவின் நடுவில் மகரந்தத் தாள்கள் குவிந்து (Crowd of yellow stamens) மஞ்சளாகக் காணப்படும். மகரந்தப்பொடி மஞ்சளாக நிறைந்து காணப்படும். காற்றில் மகரந்தம் சிதறும். செடி நூலார் கண்டறிந்த படியே சங்கப் புலவர்களும் இதன் மகரந்தத்தைப் பல பாடல்களில் பொன்னின் நிறத்திற்கு ஒப்பிட்டுக் கூறிச் சென்றனர். ஏனைய மரத்தின் பூக்களைவிடப் புன்னை மரத்தின் பூவில் பொன்னிற மகரந்தம் நிறைந்து காணப்பட்டதையும் உதிர்வதையும் சங்கப் புலவர்கள் உணர்ந்து பாடியிருக்கின்றனர்.

புன்னையின் காய்களையும் சங்கப் புலவர்கள் கண்டறிந்து பாடியிருக்கின்றனர்.

"படுகாழ் நாறிய பராரைப் புன்னை
அடுமரன் மொக்குளி னரும்பு வாயவிழப்
பொன்னி னன்ன தாதுபடு பன்மலர்
சூடுநர் தொடுத்த மிச்சில் கோடுதொறு
நெய்கனி பசுங்காய் தூங்குந் துறைவனை"
(நற்றிணை, 278)

கிளைகள்தோறும் புன்னையின் பசுங்காய் தொங்கியதைக் கூறியிருப்பதைக் கவனிக்கலாம். புன்னைக்

கொட்டையிலிருந்து எண்ணெய் எடுப்பது தெரிந்த செய்தியாகும். சங்ககாலத்திலேயே புன்னையின் காய் எண்ணெய் எடுக்கப் பயன்பட்டதை "நெய்கனி பசுங்காய்" என்ற சொற்றொடர் குறிப்பாக உணர்த்துகின்றது.

புன்னைமரத்தைத் தற்காலத்தில் 'பின்னை' என்றழைக்கின்றனர். ஆங்கிலத்தில் புன்னைமரம் 'Poon' என்று வணிக வழக்கில் கூறப்படுகின்றது. இதை 'Colophyllum Inophyllum' என்றும், 'Alexandrian Laurel' என்றும் செடிநூலார் கூறுவர்.

———

## 12. முசுண்டையும் அடும்பும்

சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள அழகிய பூக்களுடைய கொடிகளில் முசுண்டையும் அடும்பும் சிறப்பானவையாகும். முசுண்டை சங்க இலக்கியத்தில் சில பாடல்களில் விளக்கப்பட்டிருக்கின்றது.

"மழையில் வானம் மீனணிந் தன்ன
குழையமன் முசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூ" (அகம், 264)

"தேம்படு சிமையப் பாங்கர்ப் பம்பிய
குவையிலை முசுண்டை வெண்பூக் குழைய
வானெனப் பூத்த பானாட் கங்குல்" (அகம், 94)

"வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து
சுரிமுகிழ் முசுண்டை யொடு முல்லை தாஅய்"
(மதுரைக்காஞ்சி, 280, 281 வரி)

"சுரிமுகிழ் முசுண்டைப் பொதியவிழ் வான்பூ
விசும்பணி மீனிற் பசும்புத லணிய" (அகம், 235)

"அகலிரு விசும்பி னூஅல் போல
வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை"
(மலைபடுகடாம், 100, 101 வரி)

"முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப்
பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழல்" (புறம், 320)

"புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூப்
பொள்போற் பீரமொடு புதற்புதன் மலரப்"
(நெடுநல்வாடை, 13, 14 வரி)

"கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்"
(சிறுபாணாற்றுப்படை, 166 வரி)

மேற்கூறிய பாடல்களில் முசுண்டைக் கொடியானது பாடப்பட்டிருக்கின்றது. முசுண்டை தமிழ்நாட்டில்

காணப்படும் அழகிய பூவையுடைய கொடிகளில் மிக முக்கியமானதாகும். இந்தக் கொடி தரையில் படரும் கொடி. மேலே தொத்தியும் படரும். இது பெரும்பாலும் வறட்சியான காடுகளில் அரிதாகக் காணப்படுகின்றது. இது புதல் புதலாகக் காணப்படுவதாகக் கூறப்பட்டிருப்பது உண்மையே. இது பம்பிக் காணப்படுவதாக (Straggling) அகம்-94 கூறுவதும் உண்மையே. இதன் இலையைக் 'குவையிலை' என்று அகப்பாடல் கூறுகின்றது. முசுண்டையைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள அதன் பூவின் வர்ணனைதான் உதவுகின்றது. இதன் மொக்கு சுரிந்து காணப்படுவது மிக முக்கிய செய்தியாகும். "சுரிமுகிழ் முசுண்டை" என்று அகநானூற்றிலும், மதுரைக்காஞ்சியிலும் கூறப்பட்டிருக்கின்றது. இதன் பூவிதழ்கள் முகிழாயிருக்கும் பருவத்தில் சுருட்டிக் கொண்டிருப்பதைச் (Contorted in bud) செடி நூலாரும் கூறியிருக்கின்றனர். பூ இதழ்கள் மொக்காயிருக்கும்போது ஒன்றையொன்று தழுவிச் சுருட்டிக்கொண்டு காணப்படுவதால் 'சுரி முகிழ்' எனப்பட்டது. முசுண்டை தனித்தனிப் பூக்களாகப் பூக்கின்றது. கொத்தாக அன்று. வெண்மையாகப் பெரிதாக இதன் பூ (Large and white) இரவில் பூக்கின்றது. இதன் காரணமாக மிக அழகிய உவமை கொண்டு இதன் அழகிய பூ விளக்கப்படுகின்றது. மேகமில்லாத வானத்தில் விண்மீன்கள் தோன்றுவதைப்போல் வெண்மையாக மலர்ந்த முசுண்டை எனக் கூறப்பட்டிருப்பது மிக அழகிய உவமையாகும். பசும்புதலில் வெள்ளிய முகிழ்கள் இரவில் விரிந்து பூப்பதற்கு வானத்தில் மீன்கள் தோன்றுவதை உவமித்திருப்பது மிகவும் பொருத்தமே. வெள்ளை நிறமான

அழகிய பூக்களில் முசுண்டையின் பூ சிறந்ததாகும். 'வெள்ளியன்ன ஒள்வீ' என்றும், 'வாலிய மலர' என்றும் கூறப்படுவதிலிருந்து இதன் வெண்மையான நிறத்தை நன்கு உணர்ந்திருந்தனர் என்பது தெரிகின்றது. இதன் மொக்கு சுரிந்து இருப்பதால் 'பொதியவிழ் வான்பூ' என்று அகநானூறு கூறுகின்றது. கார்த்திகை மீன்களைப்போல வெள்ளிதாகப் பூத்த எனக் கூறப்பட்டிருப்பதும் மிக அழகிய ஒப்புமையாகும். இதன் பூவை மட்டுமன்றி இதன் கனியையும் ஒரு பாட்டில் குறிப்பிட்டிருப்பது வியப்பைத் தருகின்றது.

"தொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்" என்று சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது. முசுண்டையின் கனி காய்ந்த கனியாகும். தீப்பட்டவிடத்தில் உடலில் தோன்றும் கொப்புளம் போல் வறண்ட தோல் மூடியதுபோல் இதன் காய்ந்த கனி (Dry fruit) காணப்படும். இக்கனி தானுக உடைவதில்லை. இதன் கனி கொட்டைபோல இருப்பதாகக் கூறவேண்டும். 'கொட்டங் கொள்ளவும்' என்பதற்கு மறுபாடமாகக் கொட்டை கொள்ளவும் என்று காட்டப்பட்டிருக்கும் பாடமே செடிநூலறிவோடு காணுங்கால் பொருத்தமான பாடமாகத் தெரிகின்றது. வீட்டின் முன்றிலில் முசுண்டைக் கொடி பந்தலைப் போலப் படர்ந்து நிழலைத் தந்ததாகப் புறம்,320ஆம் பாடல் கூறுவதைக் கவனிக்க வேண்டும். இக்காலத்தில் பூங்காக்களில் (Parks) அழகிய பந்தல்களில் ஏற்றப்படும் அழகிய பூக்களையுடைய கொடிகளில் முசுண்டையும் முக்கியமான

தாகும். இரவில் பூக்கும் சிறந்த அழகிய கொடிகளில் ஒன்றாகச் செடி நூலார் கருதிய முசுண்டையைச் சங்கப் புலவர்களும் சிறந்ததாகவும் அழகியதாகவும் கருதியது வியப்பே. தற்காலத்தில் முசுண்டையை 'முசுட்டை' என்பர். சங்க நூல்களில் ஒரு குறுநில மன்னன் பெயர் 'முசுண்டை' யென்றே கூறப்படுவதிலிருந்து இந்தப் பூவின் பெயரால் மக்களும் அழைக்கப்பட்டனர் என்று தெரிகின்றது. முசுண்டையை ஆங்கிலத்தில் (LEATHER Berried Bindwood) என்பர். தோலால் ஆகிய பழத்தையுடைய கொடி என்பதே ஆங்கிலச் சொல்லின் பொருள். இதே சங்க நூலில் 'கொட்டை' எனப் பட்டது. செடி நூலார் முசுண்டையை Rivea ornata என்று அழைப்பர்.

முல்லைநிலத்தில் காணப்பட்ட அழகிய பூங்கொடியான முசுண்டையைப்போல நெய்தல் நிலத்தில் காணப்படும் அழகிய பூங்கொடி அடும்பு எனப்படும். சங்க நூல்களில் இது பல பாடல்களில் கூறப்பட்டிருக்கின்றது.

"ஆடரை புதையக் கோடை யிட்ட
அடும்பிவர் மணற்கோ டூர நெடும்பனை"

(குறுந்தொகை, 248)

"குன்றோங்கு வெண்மணல் கொடியடும்பு கொய்தும்"

(நற்றிணை, 254)

கடற்கரையோரத்தில் மணற்குவியலில் எளிதாகக் காணப்படுவது அடும்பங் கொடியாகும். அடும்பு நெய்தலில் கூறப்பட்டிருப்பது செடி நூற்படி மிகப் பொருத்தமாகும். கடற்கரை யருகே வாழும் செடி கொடிகளில் முக்கியமானதாக அடும்பைக் கூறுவர்

அடும்பங்கொடி மணல்மேடுகளில் இவர்ந்து செல்வதைக் கடற்கரையில் எங்கும் காணலாம். 'அடும்பமர் எக்கர்' என்று அகம். 320 கூறும். அடும்பங்கொடி எக்கரை அணி செய்வதாக, "அடும்பிவ ரணி யெக்கர்" என்று கலி-132 கூறுகிறது. அடும்பங்கொடி பச்சையாகக் காணப்படும். இதைப் 'பாசடும்பு' என்று சங்க நூல்கள் கூறுகின்றன.

" ஆய்கொடிப் பாசடும்பு அரிய ஊர்பிழிபு " (அகம், 330)
" ஏர் கொடிப் பாசடும்பு பரியலூர் பிழிபு"
(ஐங்குறுநூறு, 101)

என்று அடும்பங்கொடி வர்ணிக்கப்படுகின்றது. அகநானூற்றில் ஒரு பாடலில் (80) 'செங்கேழ் மென் கொடி' என்று கூறப்பட்டிருக்கின்றது. அடும்பங் கொடியில் செந்நிறம் சிறிது காணப்படுவதுண்டு. இதையே 'செங்கேழ்' என்ற சொல் குறிப்பிடுகின்றது.

அடும்பின் இலை ஏனைய செடிகளின் இலைகளைப் போலன்றிச் சிறப்பானதொரு வடிவத்தையுடையதாயிருக்கின்றது.

" ஒண்பல் மலர கவட்டிலை அடும்பின்
செங்கேழ் மென்கொடி ஆழி அறுப்ப " (அகம், 80)
" மானடி யன்ன கவட்டிலை அடும்பின் "
(குறுந்தொகை, 243)

மேற்கூறிய பாடல்களில் அடும்பின் கவைத்த இலை தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. இதன் கவைத்த இலையின் காரணமாகவே இதற்குச் செடி நூற் பெயரில் (Biloba) என்ற சொல் வழங்கி வருகின்றது. இதன் பொருள் 'கவட்டிலை' என்பதேயாகும். இதன்

இலை கவைத்து இருப்பதால் ஆட்டின் குளம்படிக்கு ஒப்பிட்டு ஆங்கிலத்தில் அடும்பிற்கு Goats foot என்று பெயரிட்டனர். இதையே மிக அழகாக "மானடி யன்ன கவட்டிலை யடும்பு" என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது. மானின் குளம்பு இரு பிளவினதாக முன்பக்கத்தில் இருக்கும். அதைப்போலவே அடும்பின் இலை இருப்பதாகக் கூறியது மிகவும் பொருத்தமே.

"கான லடம்பின் கவட்டிலை - மானின்
குளம்பேய்க்கு நன்னுடன்..........."

என்று நளவெண்பாவும் கூறுகின்றது. அடும்பின் இலையை 'மானடியன்ன' என்று அழகாகக் கூறினதை மறந்து தற்காலத்தில் அடும்பை 'முசல் காதுக் கீரை' என்றழைக்கின்றனர். முயலின் காதிற்கும் அடும்பின் இலைக்கும் யாதொரு பொருத்தமும் இல்லை. அடும்பின் இலைகளை நோன்பு நோற்கும் மகளிர் கீரையாகக் கொண்டு உண்டதாக நற்றிணையால் தெரிகின்றது.

"படிவ மகளிர் கொடிகொய்து அழித்த
பொம்மல் அடும்பின் வெண்மணல் ஒருசிறை"

(நற்றிணை, 272)

அடும்பை இக்காலத்திலும் கீரையாக உண்பதுண்டு.

அடும்பின் பூ மிக அழகாக இருக்கும். இது இளஞ்சிவப்பான (Pink) நிறமுடையது. ஒலியெழுப்பும் மணிபோன்ற உருவமுடையது. அதனால்தான்

"தார்மணி யன்ன வொண்பூக் கொழுதி"

என்று குறுந்தொகைப் பாடலில் மாட்டிற்குக் கழுத்தில் கட்டும் மணிக்கு ஒப்பிட்டுக் கூறப்பட்டிருக்கின்றது. அடும்பின் பூவை இதுபோலவே செடி நூலிலும்

(Companulate) மணிக்கு ஒப்பிட்டுக் கூறுவர். அடும்பின் பூ தனித்துக் காணப்படும். மணற்குன்றில் பச்சை யிலைப் பரப்பில் அடும்பின் பூக்கள் மலரும்போது கடற்கரை அழகான காட்சியை அளிக்கும் என்று செடிநூலார் கூறுவர். சங்கப் புலவர்களும் இதே கருத்தைக் கொண்டிருந்தனரென்று தெரிகின்றது. கடற்கரையில் மணற்பரப்பை அடும்பின்பூ அணிசெய் வதாகக் கருதினர். அடும்பின் பூவைக் கொய்தும், கூந்தலில் அணிந்தும் மாலையாகத் தொடுத்தும் மகிழ்ந்தனர்.

"அடும்பி னும்மலர் விரைஇ நெய்தல்
நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்"

(குறுந்தொகை, 401)

"மாக்கொடி யடும்பின் மாயித மூலரி
கூந்தன் மகளிர் கோதைக் கூட்டும்" (நற்றிணை, 148)

"கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்"

(நற்றிணை, 149)

அடும்பின் பூவைச் சங்க காலத்தவர் சூடும்பூவாகப் பயன்படுத்தினர் என்று நன்கு தெரிகின்றது. அடும்பைச் செடிநூலில் (Ipomla Biloba) என்பர். ஆங்கிலத்தில் (GOATS FOOT) என்பர்.

---

## 13. இலவும் கோங்கும்

சங்க இலக்கியத்தில் பாடப்பட்ட அழகிய, நிறமுள்ள பூக்களுள் இலவின் பூவும் கோங்கின் பூவும் முக்கியமானவை. இலவ மரம் சங்க இலக்கியத்தில் பல பாடல்களில் கூறப்பட்டிருக்கின்றது. சங்ககால இலவ மரம் தற்காலத்தில் இலவம் என்றழைக்கப் படும் மரமன்று. இந்த வேற்றுமையை உணர்ந்து கொள்வது மிக முக்கியம். பஞ்சிற்காகவே பெரிதும் வளர்க்கப்படும் தற்கால இலவ மரம் வெண்மையான, அழகற்ற, கவர்ச்சியற்ற பூக்களையுடையவை. வெளி நாட்டிலிருந்து இந்தியாவிற்கு கொணரப்பட்ட செடி யாகும். சங்க இலக்கியத்தில் கூறப்பட்ட இலவ மரத் திற்குச் செக்கச்சிவந்த, அழகிய, பெரிய பூக்கள் உண்டு. மற்றும் சங்க இலக்கியத்தில் கூறப்பட்ட இலவ மரம் மிகப் பெரிய உயரிய மரமாகும். தற்காலத்தில் இலவ மென அழைக்கப்படும் மரம் அத்தகைய தன்று. சங்க காலத்து இலவ மரத்தை முள்ளிலவம் என்று தற்கா லத்தில் அழைக்கின்றனர்.

இலவ மரம் மிகப் பெரிய மரமாக வளருகிறது. இஃது இலையுதிர்ந்து காடுகளில் காணப்படும். இலவ மரத்தை அதன் பூவைக்கொண்டு எளிதில் கண்டு கொள்ளலாம். இதன் பூ பொதுவாகக் கருஞ்சிவப்பாகக் (Showy Scarlet flowers) காணப்படும். இளஞ்சிவப் பாகவும் காண்பதுண்டு. உள்குவிந்த கிண்ணம்போன்ற உருவுடைய இதன் பூவை ஒரு முறை பார்த்தால் மறக்க முடியாது. வெயிற்காலத்தில் இலவ மரம் பல நாட்கள் இலையின்றித் தோற்றமளிக்கும். அக்காலத்தில் இலையில்லாத கிளை முழுவதும் வரிசை வரிசையாகப்

பூக்கள் இலவ மரத்தில் காணப்படுவது கண்கொள்ளாக் காட்சியாகும். இலவின் பூவைப்பற்றிச் சங்க நூல்களில் பல பாடல்கள் கூறுகின்றன.

"இலையில மலர்ந்த முகையில் இலவம்"

(அகம். 11)

"இலையில மலர்ந்த இலவ மொடு"

(அகம். 185)

"... ... ... ... ... ... ...சாரல்
இலையில மலர்ந்த வோங்குநிலை இலவம்"

(ஐங்குறுநூறு. 338)

இலையில்லாமலிருக்கும் வெறுங்கிளையில் சிவந்த பூக்கள் தோன்றுவது இலவ மரத்தின் முக்கிய குணமாகும். இலையில்லாக் காலத்தில் இலவ மரம் மலருவதைச் (usually leafless at the time of flowering)சங்கப் புலவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். இத்தன்மையை இலவமரத்தை விளக்கும் செடி நூற்புலவர்கள் கூறுது விடுவதில்லை. இலவ மரத்தின் கிளைகள் பல கைகளைக் கிடைமட்டமாக விரித்தாற்போலச் சுற்றிலும் நீட்டிக் கொண்டிருக்கும். கிளைகளில் இலையில்லாக் காலத்தில் தனித்தனிப் பூக்களாக மலர்ந்து காணப்படுவது கார்த்திகை விளக்கு வைத்தாற்போலிருப்பதாகச் சங்கப் புலவர்கள் கூறியிருப்பது மிக அழகான – சுவையான உவமையாகும். இலவமரம் கொத்தாகப் பூப்பதில்லை. பொதுவாகத் தனித்தனிப் பூக்களாகக் காணப்படும். இதுவே தனித்தனியாக வரிசையாக வைக்கப்படும் கார்த்திகை விளக்கிற்கு ஒப்பிடப் பட்டிருக்கின்றது.

"வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம்
நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் அங்காட்
டிலையில மலர்ந்த முகையில் இலவம்

கலிகொள் ஆயம் மலிபுதொகு பெடுத்த
அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்
கயந்துகள் ஆகிய பயந்தபு கானம்''

(அகம். 11)

''நீளரை இலவத் தூழ்கழி பன்மலர்
விழவுத் தலைக்கொண்ட பழவிறல் மூதூர்
நெய்யுமிழ் சுடரில் கால்பொரச் சில்கி
வைகுறு மீனில் தோன்றும்
மைபடு மாமலை விளங்கிய சுரனே''

(அகம். 17)

''பைதற வெம்பிய கல்பொரு பரப்பின்
வேனில் அத்தத் தாங்கண் வானுலந்து
அருவி ஆன்ற உயர்சிமை மருங்கில்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலைஇல மலர்ந்த இலவமொடு
நிலையுயர் பிறங்கல் மலைஇறந் தோரே''

(அகம், 185)

இலவின் பூவிதழ்கள் குவிந்த கிண்ணம் போலிருப்பதுடன் நடுவில் மகரந்தத்தாள்கள் விளக்கின் பருத்த திரிபோல் திரண்டு காணப்படுகின்றன. இதனால் இலவின் விரிந்த பூவிற்குக் கார்த்திகை விளக்குப் பொருத்தமான உவமையாகும். காற்றடித்தால் இலவின் பூக்கள் எளிதாக விழுந்துவிடும். காற்றடிக்கும் பொழுது இலவின் பூக்கள் வீழ்ந்து விடுவதால் மரத்தில் பூக்கள் சிலவாகக் காணப்படும். இலவின் பூக்கள் விடியற்காலையில் காணப்படும் சில விண்மீன்கள் போலக் காணப்படுவதாக அகம் (17) கூறுவது அழகிய ஒப்புமையாகும்.

இலவின் பூ சிவந்து காணப்படுவதால் இதன் பூக்களை நெருப்புக்கு உவமித்துக் கூறியிருக்கின்றனர்.

"நிழல்படக் கவின்ற நீளரை யிலவத்து
அழலகைந் தன்ன அலங்குசினை யொண்பூ"
(அகம். 245)

"எரிபரந் தன்ன இலமலர் விரைஇப்"
(அகம்.)

"எரிப்பூ விலவத் தூழ்கழி பன்மலர்"
(ஐங்குறுநூறு. 368)

"எரியுரு உறழ இலவ மலரப்"
(கலித்தொகை. 33)

"எரிநிறத் திலவு முல்லையும் மன்றியும்"
(சிலப்பதிகாரம். 5 : 214)

இலவின் பூவை 'எரிப்பூ' என்றே அழைத்திருத்தலை நோக்கவும்.

"முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ
முழங்கழ லசைவளி யெடுப்ப வானத்
துருமுப்படு கனலி னிருநிலத் துறைக்கும்
கவலை யருஞ்சுரம் போயினர்"
(ஐங்குறுநூறு. 320)

கடுங்காற்றில் இலவ மரத்தின் பூக்கள் விழுவது இடியிடித்து மின்னல் விழுவது போலிருந்ததாக ஐங்குறுநூறு கூறுகிறது. மலைச்சாரலில் இலவு பூத்திருந்தது மலையே பற்றி எரிவது போலிருந்ததாக ஒரு சங்கப் புலவர் கூறுகிறார்:

"......... ...... ...... .........சாரல்
இலையில மலர்ந்த வோங்குநிலை யிலவம்
மலைபுறு தீயிற் சுரமுதற் றோன்றும்"
(ஐங்குறுநூறு. 338)

காட்டியல் அறிஞர்கள் (forester) முருக்க மரங்கள் கூட்டமாகப் பூக்குங்காலத்தில் காடே பற்றியெரிவது

போன்றிருக்கும் என்பர். காடு பற்றியெரிவதாக எண்ணி ஏமாந்திருக்கின்றனர். அதுபோன்றே சங்கப் புலவரும் இலவ மரங்கள் நிறைந்த மலையில் அவைகள் கூட்டமாகப் பூப்பதைக் கண்டு மலையே பற்றியெரிவதுபோல் தோற்றியதாகக் கூறுகிறதை எண்ணி இன்புறலாம்.

இலவமரம் வெயிலால் வறட்சியான காடுகளிலும் குன்றுகளிலும் வளர்வதாகக் கூறப்பட்டிருக்கின்றது. இலவமரத்தைப் பெரும்பாலும் பாலையிலே காட்டிலும் குன்றிலும் காணப்படுவதாகக் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். இலவமரம் உயர்ந்து 130 அடி வரை வளரக்கூடியது. அடிமரமும் நன்றாகப் பருக்கும் தன்மையுடையது. சுற்றளவு 12 அடிவரை வளரக் கூடியது. "நீளரை இலவம்" (அகம். 17. பெரும்பாண். 83), "ஓங்குநிலை இலவம்" என்று இலவமரம் குறிப்பிடப்படுவதிலிருந்து இலவு மிக உயர்ந்து வளர்வதைச் சங்கப் புலவர்கள் உணர்ந்திருந்தது தெளிவாகின்றது. இதன் அடிமரமும், கிளைகளும் முட்களையுடையன.

> "முளிகொடி வலந்த முள்ளரை இலவத்து
> ஒளிர்சினை அதிர வீசி விளிபட
> வெவ்வளி வழங்கும் வேய்பயில் மருங்கில்"
>
> (நற்றிணை, 105)

முள்ளரை இலவம்' என்று கூறப்படுவதைக் கவனிக்க வேண்டும். இது மிக உயரமாகவும் பல கிளைகள் கைகள்போல எதிரெதிராக விரிந்து நெடிதாகவும் வளர்வதால் காற்றடிக்கும்போது ஒரே இரைச்சலாக இருக்கும். காற்று வீசியடிக்கும்போது இதன் பூக்கள் எளிதில் விழுந்துவிடுகின்றன. மரத்

தடியில் விழுந்த பூக்கள் நிறையக் காணப்படும். காற்றடித்து இதன் பூக்கள் விழுவதைச் சங்கப் புலவர்கள் கூறியுள்ளனர். இலவின் பூவிதழ்களை மைனு, காக்கை முதலிய பறவைகள் விரும்பி உண்பதாகவும் அதனால் மகரந்தச் சேர்க்கை உண்டாகிக் கருவுறுவதாகவும் செடிநூலார் கூறுவர்.

" மானனை கொழுதிய மணிநிற இருங்குயில்
படுநா விளியா நடுநின் றல்கலும்
உரைப்ப போல ஊழ்கொள்பு கூவ
இனச்சிதர் உகுத்த இலவத் தாங்கண் " (அகம், 52)

இலவின் இதழ்களைத் தேனீக்கள் மொய்த்து உதிர்த்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது. இலவின் பூவில் தேன்நிறைந்து காணப்படுவதால் தேனீக்கள் இலவம் பூவை விரும்பி மொய்க்கின்றன. இலவமரத்தில் பெரிய பெரிய தேன்கூடுகள் கட்டப்படுவதை இன்றும் காடுகளில் காணலாம். இலவின் பூவிதழ் மிகவும் தடித்துச் சிவந்து காணப்பட்டதால் (Fleshy Petals) இதைச் சிவந்த நாக்கிற்கு ஒப்பிட்டுக் கூறினர்.

" இலமலர் அன்ன அஞ்செந் நாவிற்
புலமீக் கூறும் புரையோர் ஏத்த " (அகம், 142)

இலமலர் நாக்கைப்போல உருவிலும் நிறத்திலும் ஒத்திருக்கின்றது. சிலப்பதிகாரத்தில் 'இலவிதழ் செவ்வாய்' என்று மகளிரின் வாயிதழ்கள் ஒப்பிடப் பட்டிருக்கின்றன. இதிலிருந்து இலவிதழின் தடித்த தன்மையும் குறிப்பாக உணர்த்தப்படும்.

இலவமரத்தின் பூவையன்றிக் காயையும்பற்றிச் சங்கநூல்கள் குறிப்பிடுகின்றன.

"............வியன்காட் டியவின்
நீளரை யிலவத் தலங்குசினை பயந்த
பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற வணிலொடு கருப்பை யாடா"

(பெரும்பாண், 832-35)

"தோன்றுபூ விலவத் தங்கட் டொகை
கான்றமென் பஞ்சியணி லனைய பைங்காய்"

(சீவக சிந்தாமணி, 1701)

அணிலின் வரித்த மேற்புறம் பஞ்சுபோன்ற நீண்ட மயிருடையது. இது முற்றி மேற்புறம் வெடித்த இலவின் காயில் தோன்றும் பஞ்சுக்கு ஒப்பிடப் பட்டிருக்கின்றது. இலவின் பஞ்சை அக்காலத்தில் 'பூளை' என்றழைத்தனர். இதனுல் இம்மரத்தையே 'பூளை'யென்று பிற்காலத்தில் அழைத்தனர். மலையாளத்தில் 'பூளா' என்றனர். பூளா மரம்போல் பருத்துவிட்டான் என்பது மலையாளப் பழமொழி. இலவமரத்தின் அடிமரம் நன்கு பருக்குந் தன்மை யுடையது. ஆனுல் உறுதியற்றது. இதையே இந்தப் பழமொழி குறிக்கின்றது. இலவ மரத்தின் காய் பச்சையாக வளைந்து இருக்கும். மேற்புறமாக வெடித்து விதையுடன்கூடிய பஞ்சு காற்றில் சிதறிப் பரந்து வீழும். இலவுகாத்த கிளிபோல என்ற பழமொழி இலவு, மாமரம்போல் காயுடையதாகத் தோற்றினும் பழுக்காது, இனிமையற்ற, உண்ண முடியாத வெறும் பஞ்சையே தரும் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு தோன்றியது.

"களிறுபுறம் உரிஞ்சிய கருங்கால் இலவத்து
அரலை வெண்காழ் ஆலியில் தாஅம்
காடுமிக நெடிய என்னுர் கோடியர்"

(அகம், 309)

இலவங்காய் வெடித்து விதையுடன் கூடிய வெள்ளிய பஞ்சு காற்றில் பரவுவது ஆலங்கட்டி மழைபெய்வது போலிருந்ததாக ஒரு புலவர் கூறுகிறார். இலவின் விதை "அரலை வெண்காழ்" என்று அழைக்கப்படுகின்றது. அக்காலத்தில் இந்த இலவின் பஞ்சு தலையணைக்குப் பயன்பட்டதாகத் தெரிகின்றது. ஆனால் இக்காலத்தில் பெரும்பாலும் வெளிநாட்டிலிருந்து வந்த, தற்காலம் எங்கும் வளர்க்கப்படும் இலவிலிருந்தே பஞ்செடுக்கின்றனர். இதைப் "பஞ்சு மரம்" என்றும் அழைப்பர். சங்கநூலில் கூறப்படும் இலவமான முள்ளிலவும் ஓரளவு பஞ்சுக்காகப் பயன்படுகின்றது. சங்கநூல்களில் வழங்கும் இலவு செடிநூலில் (Bombax Malabaricum) அல்லது (Salmalia Malabaricum) எனப்படும். ஆங்கிலத்தில் (Red silk cotton tree) என்பர். தற்காலம்பேசப்படும் இலவு (Eriodendron anfractussum) எனப்படும்.

சங்க நூல்களில் கோங்கு என்னும் மரத்தின் பூவைப்பற்றிச் சில செய்திகள் வருகின்றன. கோங்கு இலவுடன் இனமான மரமாகவும் பிற்காலத்தில் கருதப்பட்டது. இந்தக் கோங்கு செடிநூற்படி எது என்பது ஆராயவேண்டிய செய்தியாகும். இலவமரத்தைப்போலவே வறட்சியான வேனிற்காலத்தில் இலையில்லா நிலையில் பூத்துக் காண்பது கோங்கின் சிறப்பியல்பாகும்.

"இலையி லஞ்சினை இனவண் டார்ப்ப
முலையேர் மென்முகை யவிழ்த்த கோங்கின்
தலையலர் வந்தன வாரா தோழி"

(குறுந்தொகை, 254)

இலவமரத்தின் இனமான கோங்கும் இலவத்தைப் போன்றே மலருங்காலத்தில் இலையின்றித் தோன்றும் என்று இங்கு உரை கூறப்பட்டிருக்கின்றது. நவம்பரி (November) லிருந்து மே (May) வரை சில திங்கள் இலையேயின்றி இம்மரம் காணப்படும் என்று செடி நூலார் கூறுவர். இலையின்றிக் கிடக்கும் கரிய கொம்பு களில் பிப்ரவரி (February) யில் பூப் பூக்கத் தொடங்கு கிறது. இதையே இளவேனிலில் கோங்கு 'தலையலர்' தந்ததாகக் குறுந்தொகை கூறுகின்றது. இளவேனிற் குரியது ஆங்கிலத் திங்களான பிப்ரவரி ஆதலின் குறுந்தொகையில் கூறப்பட்ட, 'தலையலர்' தோன் றும் செய்தி முற்றிலும் உண்மையான செய்தியாகும். இலவமரத்தைப் போன்று இலையற்றுக் காணப்படும் காலத்தில் அழகாக, நிறமாகப் பூக்கும் மரம் கோங் கைத்தவிர வேறு மரத்தைக் கூறமுடியாது.

கோங்கம் பூவின் உருவையும் நிறத்தையும் குறித் துச் செய்திகள் சங்கப் பாடல்களில் காணப்படுகின் றன. கோங்கின் பூ தட்டையான கிண்ணம்போல், பொன்னாலான தட்டுப்போல் அகன்று காணப்படும். இதன் காரணமாக ஆங்கிலத்தில் கோங்கு மரத்தை (Buttercup tree) என்றழைத்தனர்.

இதன் முகையும் பூவும் சங்க நூல்களில் அழகாக வர்ணிக்கப்படுகின்றன. இதன் குவிந்த மொக்கை மகளிரின் நகிலுக்கு ஒப்பிட்டுக் கூறுவதைக் காண லாம்.

"மாணிழை மகளிர் பூணுடை முலையின்
முகைபிணி யவிழ்ந்த கோங்கமொ டசைஇ" (அகம். 99)

"கோங்குமுகைத் தன்ன குவிமுலை யாகத்து" (அகம். 240)

"வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
முகைவனப் பேந்திய முற்று விளமுலை" (புறம். 336)

"யாணர்க் கோங்கின் எவிர்முகை யெள்ளிப்
பூணகத் தோங்கிய வெம்முலை முலையென"
(சிறுபாண். 25-26

"முலையேர் மென்முகை யவிழ்ந்த கோங்கின்"
(குறுந்தொகை,254)

கோங்கின் முகை உருவில் மாதரின் நகிலுக்கு ஒப்புமையுடையது என்பது உண்மையே. கோங்கின் விரிந்த பூவையும் சங்கப் புலவர்கள் கூறியிருக்கின்றனர். கோங்கம் பூ பொன்னாலான தராசுத் தட்டுப் போல இருந்ததாகக் "கோங்கலர் பொன்செய் கன்னம் பொலிய" என்று அகம் 317ஆம் பாடல் கூறுகின்றது. கோங்கின் பூ அகன்று பெரிதாக ஐந்து அங்குலம் அகலமுடையதாகக் காணப்படும் என்று செடி நூலார் கூறுவர். இதன் இதழ்கள் ஓரத்தில் ஒன்றோடொன்று தழுவிக்கொண்டு மொக்காக இருக்கும்போது காணப்படும். விரியும்போது இதன் மொக்கின் இதழ்கள் புரிவிடுவதுபோல் பிரியும். சங்க நூல்களில் 'முகை பிணி யவிழ்ந்த' என்று கூறுவதை நோக்குக. கோங்கின் பூவைக் 'குடைப்பூ' என்று அகநானூறு கூறுகின்றது. குடைபோல் ஓரம் வளைந்து குவிந்து காணப்படுகின்றது. "கோங்கு பொற்குடை கொண்டு கவித்தன" என்று யசோதர காவியமும் சொல்லுகின்றது.

"கைவல் வினைவன் தையுபு சொரிந்த
சுரிதக வுருவின வாகிப் பெரிய
கோங்கங் குவிமுகை யவிழ" (நற்றிணை, 86)

கைத்திறம் மிக்க ஒருவன் பொன்னால் செய்த 'சுரிதகம்' என்ற அணிகலன் போன்ற உருவை உடையதென்று கூறப்பட்டிருப்பதை நோக்குக. சுரிதகம் என்பது

திருகுப் பூப்போன்ற அணியென்பர். சுரிதகம் தட்டையான இதழ்களுடன் ஓரத்தில் சிறிது குவிந்து காணப்படுமெனத் தெரிகின்றது. "வள்ளம்போல் கோங்கு மலரும்" என்று நளவெண்பா கூறுகின்றது.

> "வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன
> குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்ட" (புறம், 321)

கோங்கின் மலரும்பருவத்தில் உள்ள பூ சிறிது விரித்திருப்பது எலியின் வளைந்த காதை உருவில் ஒத்திருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றது. செடி நூலில்கோங்கின் பூ (Petals five, obovate, inbricate or somewhat contorted,) ஐந்து இதழ்களுடன் ஓரந்தழுவித் திருகினதுபோல இருக்கும் என்று கூறப்பட்டிருக்கின்றது. கோங்கின் மலரிதழ்களின் நிறத்தை மிகத் தெளிவாகச் சங்கநூல்கள் குறிப்பிடுகின்றன.

> "பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ
> விரியிணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி"
>
> (ஐங்குறு நூறு, 367)

> "புதுமலர்க் கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்ப"
>
> (கலித்தொகை, 33)

> "புரிநிற நீள்பொன் அணிந்த கோங்கம்"
>
> (திணைமாலை நூற்றைம்பது, 63)

> "தண்ணறுங் கோங்க மலர்ந்த வரையெல்லாம்
> பொன்னணி யானைபோற் றோன்றுமே"
>
> (கலித்தொகை, 42)

> "விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
> பொருகளி றட்டோய் புரையு நின்னுடை"

மேற்காட்டிய பாடல்களில் கோங்கின் பூ பசும் பொன்னிறமானது, மஞ்சள் நிறமானது என்பது விளக்கப்பட்டிருக்கின்றது. நாலடியாரில் "நிறக்கோங்கு உருவ

வண்டு ஆர்க்கும் உயர்வரை நாட" என்ற வரிக்கு உரை யெழுதிய பதுமனார் முதலிய உரையாசிரியர்கள் 'நிறக் கோங்கு' என்பதற்குப் 'பொன்னிறம்' என்றே கூறி யிருப்பதைக் கவனிக்கவேண்டும். வெங்தெரி பசும் பொன்னிற்குக் கோங்கிதழின் நிறம் ஒப்பிடப்பட்டிருப் பது மிகவும் பொருத்தமாகும். கோங்கின் பூ ஒள்ளிய, பளபளப்பான பொன்னிறமானது.

" அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்
செஞ்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே" (நற்றிணை, 202)

இலவின் பூவைப்போலக் கோங்கின் பூவும் இலையில்லாக் காலத்தில் கரிய கொம்பில் பொன்னிறமாகப் பூத்துக் காண்பது கார்த்திகை விளக்கெடுத்தாற் போன்று காணப்படுகின்றது.

" ஓங்குவரை யடுக்கத் துயர்ந்த சென்னி
மீமிசை பொலிந்த வானிற் றோன்றித்
தேம்பாய்ந் தூர்க்குந் தெரியிணர்க் கோங்கின்
காலுறக் கழன்ற கண்கமழ் புதுமலர்
கைவிடு சுடரிற் றோன்று
மைபடு மாமலை விலங்கிய சுரனே" (அகம், 153)

கோங்கினுடைய காம்புடன் கழன்று விழும் புதுமலர் கையைவிட்டு விழும் சுடரைப்போலக் காணப்பட்ட தாகக் கூறியிருப்பதால் கோங்கின் பூ பளபளப்பான மஞ்சள் நிறமானது என்பதைச் சங்கப் புலவர்கள் தெரிந்திருந்தனரென்பது விளங்குகிறது.

" அன்றை யனைய வாகி இன்றுமெம்
கண்ணுள் போலச் சுழலும் மாதோ
பல்விதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ
வைகுறு மீனின் நினையத் தோன்றி
புறவணி கொண்ட பூநாறு கடத்திடை". (நற்றிணை, 48)

மேற்காட்டிய பாடலில் பாலை பாடிய பெருங்கடுங்கோ கோங்கின் ஓர் அழகிய காட்சியை விளக்குகின்றார். தலைவி தலைவனோடு பெற்றோர்க்குத் தெரியாமல் சென்று விடுகிறாள். போகும்போது ஓர் இடத்தில் மறவர்கள் தலைவனைத் தாக்குகின்றனர். அவன் அவர்களை வென்று தலைவியை அழைத்துக்கொண்டு செல்லுகின்றான். மறவரை வென்ற அதே தலைவன் தலைவியின் தந்தையர் தொடர்ந்து வருதலும் தலைவியைத் தனியாக விட்டு விட்டுக் காட்டில் மறைகின்றான். மறவரை வென்ற மறம் தன் தந்தையரைக் கண்டதும் எங்குச் சென்றதோ என்று நினைக்கிறாள் தலைவி. தலைவன் அன்று மறைந்த காட்டை அவள் அவனுடன் இல்லறத்தில் கூடி யுறையும்போதுகூட அவளால் மறக்க முடியவில்லை. அக்காடு தந்த காட்சியை மறக்க முடியவில்லை. அன்றைப் போலவே இன்றும் அவள் கண்ணில் அக்காட்சி சுழலுகிறது; அன்று அக்காடு எப்படிக் காட்சி யளித்தது? புல்லிய இதழ்களையுடைய கோங்கினுடைய மெல்லிய இதழையுடைய குடைபோன்ற பூ வைகறைப் பொழுதிலே தோன்றும் விண்மீன்களெனக் கருதும்படி அழகிய காட்சி தந்து காடெல்லாம் அழகும் மணமும் தந்து கொண்டிருந்தது. மலர்ந்த கோங்கின் காட்சியை அளித்த அக்காட்டு நெறியை அவளால் மறக்கவே முடியவில்லை. கண்ணில் சுழன்று கொண்டே யிருக்கிறது. இதுதான் பாலை பாடிய பெருங்கடுங்கோ கண்ட காட்சி. பாலையைப் பார்த்துச் சுவைத்துப் பாடிய பெருங்கடுங்கோ, தாம் கண்ணால் கண்ட கோங்கம் பூ மலரும் காட்சியைத் தம் பாட்டில் ஓவியம்போல் தீட்டிவிட்டார். இதிலிருந்து சங்கப் புலவர்கள் இயற்

கையை (Nature) நேரில் கண்டு களித்ததேயன்றி படிப்பவர்க்கும் கண்முன்னே காட்சி யளிப்பதுபோல் தோன்றுமாறு விளக்கிப் பாடினர் என்பது விளங்குகிறது.

கோங்கு மலைப் பகுதியிலும் வறட்சியான குன்றுப் பகுதியிலும் (Drier parts of Indian Peninsula — Characteristic of dry, hilly country — occupying the stoniest and hottest slopes) காணப்படும். மிக மிக வறட்சியான காலத்திலும் பூத்துக் குலுங்கும். சங்க நூல்களிலும் கோங்கு பாறையிலும், மலையிலும் (அகம். 317, 153) காணப்படுவதாகக் கூறப்பட்டிருக்கின்றது. கரடுமுரடான வெப்ப மிக்க உலர்ந்த குன்றுப் பகுதியில் காணப்படுவதால் 'கடத்திலும் சுரத்திலும்' காணப்பட்டதாகச் சங்கப் பாடல்கள் கூறுகின்றன. 'பொரியரைக் கோங்கு' என்று கூறப்படுவதும் உண்மையே. இதன் அடிமரம் பட்டை பொரிந்து (Deeply furrowed) காணப்படும் என்று செடி நூலும் கூறும். கோங்கு இளவேனிற் காலத்திலும் வேனிற் காலத்திலும் பூப்பதாகச் சங்கநூல்கள் கூறுகின்றன.

"வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன"

(புறம், 321)

"அவரோ வாரார் தான்வந் தன்றே
திணிநிலைக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை யுடையும் பொழுதே"

( ஐங்குறுநூறு, 343.)

ஐங்குறுநூறு கோங்கு இளவேனிலில் பூக்கத் துவக்கியும் தலைவன் வரவில்லையென்று தலைவி யேங்குவதைக் குறிப்பிடுகின்றது. கோங்கு வேனிலில் பூத்துக் காணப்பட்ட சில நாட்களில் தளிர்விடத் துவங்கும். பூத்த

பின் தளிர்விடும் தன்மை கோங்குக்கு உண்டு என்பதைச் செடிநூலார் அறிவர்.

"உய்தகை யின்றால் தோழி பைபயக்
கோங்குங் கொய்குழை யுற்றன" (அகம், 341.)

இலையில்லாதிருந்த கோங்கு முகைவிட்டுப் பூத்துக் குலுங்கிக் கொய்யத் தகுந்த தளிரைத் தரும் காலத்தை அடைந்துவிட்டது. இன்னும் தலைவனைக் காணோம். இனி உய்தியில்லை என்று கூறுகிறாள். முகைவிடும் இளவேனிலில் வரவேண்டிய தலைவன் பூத்துக் குலுங்கும் முதுவேனிலிலும் வரவில்லை. முதுவேனிலின் இறுதியில் கோங்கு தளிர்விடும் காலத்திலும் வரவில்லை என்று தலைவி கூறுகின்றாள். கோங்கின் பலவகைப் பருவ நிலைகளையும் சங்கப் புலவர்கள் உணர்ந்திருந்த புலமை போற்றத்தக்கது. கோங்கின் பூவிதழை நன்கு கண்டுணர்ந்த சங்கப் புலவர்கள் அதன் தாதையும் நுண்மையாகக் கண்டுணர்ந்தனரென்று தெரிகின்றது.

"இனச்சிதர் உகுத்த இலவத் தாங்கண்
சினைப்பூக் கோங்கின் நுண்தாது பகர்நர்
பவளச் செப்பின் பொன்சொரிந் தன்ன" (அகம், 25)

இலவின் கீழே விழுந்த பூவில் கோங்குமரத்தின் பூவிலிருந்து விழும் நுண்தாது பவளச் செப்பில் பொன் சொரிந்துகிடந்ததுபோல இருந்ததாகக் கூறப்பட்டிருப்பது மிக அழகிய உவமையாகும். இலவின்பூ உள் குவிந்த கிண்ணம்போலிருப்பது தெரிந்ததே. ஆதலால் இலவின் சிவந்த பூ பவளச்செப்பிற்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. அதன்மேல் கோங்குமலரின் மகரந்தத் தாது வீழ்வது பொன்சொரிந்தாற் போலிருக்கின்றது. கோங்கின் தாது மஞ்சள் நிறமானது; பொன்னிறமானது. கோங்கம் பூவின் நடுமையத்தில் மகரந்தத் தாள்கள்

நிறைய அடர்த்தியாக இருக்கின்றன. ஒவ்வொரு மகரந்தத்தாளின் நுனியிலும் மகரந்தப்பை உண்டு. அந்தப் பையில்(Anther) நிறைந்து இருக்கும் மஞ்சள் நிற மகரந்தத்தூள் பையில் துளை உண்டாகிக் (Opening by pores) கீழேவிழும். இச்செய்தியைச் செடிநூல் கூறு கிறது. செடிநூற்படி கோங்கு நிறைய மகரந்தத் தாது உடையது. கோங்கின் பொன்னிறமான மகரந் தத்தூள் சிவந்த இலவின் பூவில் விழுவதை மிக அழகான உவமையால் விளக்கிவிட்டார். கோங்கின் மலரில் தாது சூழ்ந்து இருப்பதை மதுரைக்காஞ்சி "தாது சூழ் கோங்கின் பூமலர் தாஅய்" என்று கூறு கின்றதைக் கவனிக்கவேண்டும்' "புதுமலர்க் கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்ப" என்று (கலித்தொகை 33) பொன்போன்ற தாது கீழே வீழ்வதைக் குறிக்கின்றது. பொன்போன்ற தாதை வீசும் நிறத்தையுடைய கோங்கு என்று நாலடியாரின் உரையாசிரியர்கள் எழுதி னர் ஆதலின் கோங்கின் பொன்னிற மகரந்தத்தாதை நன்குக உணர்ந்திருந்தனரென்று தெரிகின்றது. கோங்குமலரை இதன் காரணமாக வண்டுகள் மொய்ப் பதாகக் கூறப்பட்டிருப்பதும் உண்மையான செய்தியே. "கோங்காற் கோங்கின் கொய்ம்மல ரன்ன" என்று பெருங்கதை (205-6) கூறுகிறது.

கோங்கு செடிநூற்படி Cochlospermum gossypium எனப்படும். இதை ஆங்கிலத்தில் yellow silk cotton tree என்பர். இதைத் தமிழில் பல பெயரிட்டுத் தற் காலத்தில் வழங்குகின்றனர். சிலவிடங்களில் அரிதாகக் கோங்கு என்றும் கோங்கிலவு என்றும் வழங்குகின்ற னர். ஆனல் வெள்ளைக்கோங்கு, கருங்கோங்கு என்றும்

கோங்கு என்றும் வேறு பல மரங்களையும் பெயரிட்டு அழைப்பதால் கோங்கமரம் எதுவென்று அறிவது எளிதன்று. ஆனால் சங்கநூற் செய்திகளிலிருந்து கோங்கு எது என்பதை உறுதியாக அறுதியிட முடிகின்றது. 'கோங்கிலவு' என்று தற்காலத்தில் கோங்கை அழைக்கக் காரணம் என்ன ? கோங்கும் இலவும் இனமான மரங்கள் என்று கருதினர். இவைகளின் ஆங்கிலப் பெயர்கள் இவை ஒரே இனமானவை என்று கருதியதைத் தெரிவிக்கின்றன.

"பருவமில் கோங்கம் பகைமல ரிலவம்"

என்று பரிபாடல் (19 : 79) கூறுகின்றது. கோங்கின் பொன்னிறப் பூவிற்கு நேர் எதிரான நிறமுடைய பூவை யுடைய இலவம் என்று கூறுவதைக் கவனிக்கவும். இலவிற்கும் கோங்கிற்கும் இனங்கண்டனர் என்று தெரிகின்றது' இலவும் கோங்கும் இளவேனிலிலும் முதுவேனிலிலும் பூப்பதாகச் சங்கநூல்கள் கூறுகின்றன. இலையில்லாக் காலத்தில் மலர்வதாகக் கூறுகின்றன. கார்த்திகை விளக்கெடுப்பது போலவும் வைகறை விண்மீன் போலவும் பூப்பதாகக் கூறுகின்றன. மற்றும் இரண்டிற்கும் இலையுருவிலும் காயிலும் ஒப்புமை உண்டு. இரண்டுக்கும் பஞ்சு உண்டு. இத்தகைய காரணங்களால் இரண்டையும் இனமானவை என்று கருதிக்கோங்கைக் "கோங்கிலவு"என்றனர். ஆனால்செடிநூற்படி இலவும் கோங்கும் வெவ்வேறு குடும்பத்தைச் சார்ந்தவை. கோங்கைக் கன்னிகாரம்என்று நிகண்டுகள் கூறுகின்றன. கன்னிகாரம் என்பது வடசொல்.

"மணிபொரு பசும்பொன்கொல் மாவீன்ற தளிரின்மேல்
கணிகாரங் கொட்குங்கொல் என்றுங் கணிசெல"

(கலித்தொகை, 143)

"கடிமல ரவிழ்ந்த கன்னிகா ரத்துத்
தொடிவளைத் தோளி யொருத்தி தோன்றி"
(சிலம்பு, 11: 110)

கன்னிகாரம் கலித்தொகையிலும் சிலம்பிலும் கூறப்படுகின்றது. ஆனால் கன்னிகாரம் என்ற வடசொல் குறிக்கும் மரம் தமிழில் குறிக்கப்படும் கோங்குஅன்று. இதைச் செடிநூற்படி சிலர் "Pterospermum acerifolium" என்று கூறுகின்றனர். இது வெண்மையான பூவையுடையது. கணிகாரம் என்பதே கன்னிகாரம் ஆனதாகக் கூறுவர். கர்ணிகாரம் என்பது திருகுபூப்போன்ற ஓர் அணிகலன் என்று தோன்றுகின்றது. அதன் காரணமாக திருகுபூப்போன்ற பூவையுடைய கோங்கைக் கர்ணிகாரம் என்றனரோ? சுரிதகமே கர்ணிகாரம் என்றழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது. இது கர்ணப்பூ என்றழைக்கப்பட்ட பிற்காலக் காதணியென்று தெரிகின்றது. வடமொழியில் கர்ணிகாரம் முதலில் கோங்கையைக் குறித்து வந்து பிறகு பொருள் மாறி விட்டதாகத் தோன்றுகின்றது. கர்ணிகாரம் பசும் பொன்போன்று இருந்ததாகக் கலித்தொகை கூறுவதைக் கவனிக்கவும்.

கோங்குமரத்தைத் தற்காலத்தில் மஞ்சள் இலவு, மலைப்பருத்தி, காட்டிலவு, காட்டுப்பஞ்சு, மஞ்சள் தணக்கு என்றெல்லாம் அழைப்பர். மஞ்சள் பூ இருப்பதால் மஞ்சள் இலவு என்றும், கோங்கின் காயில் பஞ்சிருப்பதால் மலைப்பருத்தி, காட்டுப்பஞ்சு என்றும் அழைக்கின்றனர். சங்க காலத்தில் கோங்குமரத்தை அறிந்த அளவு தற்காலத்தில் மக்கள் உணராததால் இத்தகைய பெயர்கள் எழலாயின.

## 14. இலுப்பை

இலுப்பை என்றொரு மரத்தைப்பற்றிய செய்திகள் சங்க நூல்களில் காணப்படுகின்றன. இலுப்பை மரத்தைச் சங்க காலத்தில் இருப்பை என்றழைத்தனர். இலுப்பை மரத்தைப் பலரும் அறிந்திருப்பர். ஊர்ப்புறங்களில் எண்ணெய் எடுப்பதற்காகத் தோப்பாக வளர்க்கப்படுவதுண்டு. கோயில்களில் விளக்கெரிக்க இதன் எண்ணெய் பயன்பட்டுவந்தது. இயற்கையில் இலுப்பை மரம் தென்னிந்தியக் காடுகளில் காணப்படுகின்றது. இந்த இலுப்பை மரத்தைச் செடி நூலார் (Bassia Longifolia) என்றழைப்பர். வட இந்தியாவிலும் கேரளத்திலும் காணப்படும் இலுப்பை மரம் சிறிது வேறுபட்டது.

இலுப்பை மரத்தைப்பற்றிச் சில தெளிவான செய்திகள் சங்க நூல்களில் காணப்படுகின்றன. இலுப்பை மரத்தின் அடிமரத்தைப்பற்றி வரும் செய்திகள் செடிநூலார் கூறும் செய்திகளுக்கு ஒத்தே இருக்கின்றன.

"நீடுநிலை யரைய செங்குழை யிருப்பை" (அகம். 331)

"..........................பொரிகாற்
பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற"
(அகம், 95)

"குதிர்க்கா லிருப்பை வெண்பூ வுண்ணு" (அகம், 321)

"திரளரை யிருப்பைக் கொள்ளை வான்பூ" (அகம், 215)

"கருங்கோட் டிருப்பை யூரும்" (அகம், 321)

"கருங்கோட் டிருப்பை பூவுறைக் குந்து" (புறம், 384)

"கருங்கோட் டிருப்பை வெண்பூ முனையிற்" (அகம், 247)

இலுப்பை மரம் உயரமாக வளரும் என்பதையே 'நீடு நிலையரைய' என்று அகநானூறு குறிக்கின்றது. இலுப்பையின் அடிமரம் பெருத்துக் காண்பதால் அகநானூற்றில் "குதிர்க்கா லிருப்பை", "திரளரை யிருப்பை", மற்றும் "பொகுட்டரை யிருப்பை" என்று கூறப்பட்டுள்ளது. இலுப்பையின் அடிமரம் வளர வளரப் பெருத்துக் காணப்படும். 'கருங்கோட்டிருப்பை' என்று இருப்பையின் கருமையான அடிமரம் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. இலுப்பையின் அடிமரம் பட்டை பிளந்து பொரிந்து இருப்பதைக் கூடப் 'பொரிகால்' என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

இலுப்பையின் கொழுந்து இலையைப்பற்றிச் சில பாடல்களில் அழகாக வர்ணிக்கப்பட்டுள்ளது. இலுப்பை வெயிற்காலத் தொடக்கத்தில் கொழுந்துவிடத் துவங்கும். அக்காலத்தில் இலுப்பை மரமெல்லாம் ஒரே இளந்தளிராகத் தெரியும். இலுப்பையின் தளிர் செம்புத்தகடுபோலச் சிவந்து வெயிலின் ஒளியில் பளபளவென்று மின்னும். இதை நன்கு கண்ட சங்கப் புலவர்கள் இலுப்பையின் தளிரைப்பற்றிப் பாடியிருக்கின்றனர். அகநானூற்றில் இலுப்பை மரத்தின் அழகிய கொழுந்து, "செங்குழை யிருப்பை" (அகம். 331) "அங்குழையிருப்பை" (அகம். 107) என்றழைக்கப்படுகின்றது.

"செப்பட ரன்ன செங்குழை யகந்தோறு" (அகம். 9)

"......................................கதிர்தெறக்
கழலிலை யுகுத்த கால்பொரு தாழ்சினை
யழலகைந் தன்ன வங்குழைப் பொதும்பிற்"
(அகம், 351)

செப்புத்தகடுபோலச் சிவந்த கொழுந்துகள் தோன்றிய தாக அகநானூறு கூறியிருப்பது அழகிய பொருத்த மான உவமையே. இலுப்பை மரம் வெயிற் காலத் துவக்கத்தில் இலைகளை இழந்துவிடும். காய்ந்த இலை கள் சருகுகளாகக் கீழே கிடக்கும். அதே சமயத்தில் கொழுந்துகள் தோன்றும். இந்தக் காட்சியையே அக நானூறு 351ஆம் பாடல் விளக்குகிறது. காற்றடித்து இலைகள் கழன்று கீழே விழுகின்றன. நெருப்புப்பற்றி ஞற் போன்று கொழுந்துகள் தோன்றுகின்றன. இயற் கையில் காணப்படும் இந்த உண்மையான காட்சி யைப் படம்பிடித்தாற் போன்று அகநானூறு கூறுகின் றது. இந்த வர்ணனை அழகிய பூமரங்களைப்பற்றி ஆங்கிலத்தில் எழுதிய ஒரு பேராசிரியர் *வர்ணித்ததை விடச் சிறப்பாக இருப்பதைக் காணும்போது வியப்பி லாழ்த்துகிறது. இலுப்பையின் இலை நீண்டிருப்பதால் திருவாலவாயுடையார் புராணம், 'நெட்டிலையிருப்பை' என்று குறிப்பிடுகின்றது. இலை நீளமாயிருப்பதால் (Longifolia) என்று செடிநூலார் பெயரிட்டனர்.

இலுப்பையின் மிக முக்கிய பாகம் அதன் பூவா கும். இதன் பூவைப்பற்றிச் சங்க நூல்களில் விரிவான வர்ணனையைக் காணலாம்.

"வெருக்கடி யன்ன குவி முகி ழிருப்பை
மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான்பூ
மயிர்க்கா லெண்கி னீரினங் கவர" (அகம், 267)

---

* M. S. Randhawa. D. Sc. I. C. S. in "Flowering Trees in India" The spring ripens into summer. By the first week of April it starts getting warm....................Dry leaves fly about and wierd bonfires are seen under the Mahua trees......The rust-red young leaves of Mahuas are tipped with gold in the rays of the morning sun.

"செப்பட ரன்ன செங்குழை யகந்தோ
றிழுதி னன்ன தீம்புழற் றுய்வா
யுழுதுகாண் இணைய வாகி யார்கழல்
பாலி வானிற் காலொடு பாறித்
துப்பி னன்ன செங்கோட் டியவி
னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு
மத்தம்..... ......................................." (அகம், 9)

"அங்குழை யிருப்பை யறைவாய் வான்புழல்
புல்லுளைச் சிறுஅர் வில்லி னீக்கி" (அகம், 107)

"ஆடுதளி ரிருப்பைக் கூடுகுவி வான்பூக்
கோடுகடை கழங்கி னறைமிசைத் தாஅங்" (அகம், 135)

"புல்லரை யிருப்பைத் தொள்ளை வான்பூப்
பெருங்கை யெண்கி னிருங்கிளை கவரு
மத்த நீளிடைப் போகி நன்று" (அகம், 149)

"யாத்த தூணித் தலைதிறந் தவைபோற்
பூத்த விருப்பைக் குழைபொதி குவியிணர்
கழறுளை முத்திற் செந்நிலத் துதிர" (அகம், 223)

"நீடுநிலை யரைய செங்குழை யிருப்பை
கோடுகடைந் தன்ன கொள்ளை வான்பூ" (அகம், 331)

"பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற
வாலி யொப்பின் றூம்புடைத் திரள்வீ" (அகம், 95)

"குதிகா விருப்பை வெண்பூ வுண்ணு" (அகம், 321)

"கான விருப்பை வேனல் வெண்பூ
வளிபொரு நெடுஞ்சினை யுகுத்தலி னூர்கழல்பு
களிறு வழங்கு சிறுநெறி புதையத் தாஅம்
பிறங்குமலை யருஞ்சுர மிறந்தவர் படர்ந்து"
(குறுந்தொகை, 329)

"புழல்வீ யிருப்பைப் புன்காட் டத்தம்" (அகம், 351)

"கருங்கோட் டிருப்பை பூவுறைக் குந்து" (புறம், 384)

"அத்த இருப்பை ஆர்கழல் புதுப்பூ"

(அகம், 15)

"அத்த இருப்பைப் பூவின் அன்ன
துய்த்தலை இறவொடு தொகைமீன் பெறீஇப்"

(நற்றிணை, 111)

"நெய்தோய் திரியில் தண்சிதர் உறைப்ப" (நற்றிணை, 279)

இலுப்பையின் பூ வெண்மையாகவும் இதழ்கள் தடித்து உருண்டையாகவும் இருக்கும் (Globular corolla thick and white). இதன் தடித்த இதழ்கள் வெண்மையான கொழுப்புப்போல இருப்பதாக இரு பாடல்களில் கூறப் பட்டிருப்பதின் பொருத்தம் நேரில் கண்டோருக்கு நன்கு புலப்படும். "இழுதின் அன்ன பூ" வெனக் கூறியிருப்பதைக் கவனிக்கவும். இருப்பையின் அரும் பைப்பற்றி ஓர் உவமை அகநானூற்றில் (267) வருகின் றது. காட்டுப் பூனையின் காலடிபோல இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. இலுப்பையின் குவிந்த மலராத அரும்பைத் தலைகீழாக வைத்துப் பார்க்குங்கால் அதன் குறிய குவிந்த இதழ்கள் பூனையின் மடக்கிய விரல்கள் போலக் காணப்படுகின்றது. இதுவும் ஓர் அழகிய உவமையே. யானையின் தந்தத்தைக் கடைந்தெடுத் தாற்போல் இருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது, பூவின் வெண்மையைக் குறித்தும், உருவைக் குறித்துமாகும். "கோடு கடைந்தன்ன கொள்ளை வான்பூ" என்று அகநானூறு கூறுகின்றது. இலுப்பையின் பூ துளை யுடையதாயிருப்பதால் 'புழல்வீ' என்றும், 'தொள்ளை வான்பூ' என்றும், "தூம்புடைத் திரள்வீ" என்றும் அழைக்கப்பட்டுள்ளது. சிறுவர்கள் கையிலேந்திய வில் லின் துளையுடைய இதன் பூவைப் பாறையிலிருந்து

கோத்து எடுத்ததாக அகம். 107ஆம் பாடல் கூறு வதை நோக்குக. உறையிலிருந்து கொட்டிய கழன்று விழும் துளையுடைய முத்தைப்போல் இலுப்பைப்பூ விழுந்ததாகக்கூறுவதையும் கவனிக்கவேண்டும். இதன் பூவின் நுனிப்பாகம் குவிந்து காணப்படுவதால் "குழை பொதி குவியிணர்" "கூடுகுவி வான்பூ" என்று அழைக் கப்படுகின்றது. இலுப்பைப்பூ காற்றில் மிகுதியாகக் கீழே வீழ்வதைப்பற்றி முக்கியமாகக் கூறப்பட்டுள் ளது. வெண்மையான ஆலங்கட்டி வானிலிருந்து விழுந் தாற்போல இலுப்பைப் பூக்கள் விழுந்ததாகக் கூறுவது சங்கப்பாடல்களில் வழக்காகிவிட்டது. காற்றடிக்கும் போது இலுப்பைப் பூக்கள் ஏராளமாக விழுவது உண் மையானசெய்தியே. இலுப்பைப் பூக்கள் குலைபோலக் கொம்பில் குவிந்து இருப்பதையும் (Fascicled) சங்கப் புலவர்கள் கண்டு கூறியிருக்கின்றனர். "குவிகுலை" (அகம். 95) 'கூடுகுவி வான்பூ' (அகம். 135) என்று கூறுவதைக் காணலாம். இதுவும் செடிநூற்படி உண் மையான செய்தியேயாகும். இலுப்பைப் பூ காம்பி லிருந்து கழன்று விழுவதை "ஆர்கழல் புதுப்பூ" என்று அகநானூறு கூறுவதைப் பார்க்கலாம். இலுப்பைப்பூ காம்பிலிருந்து கழன்று விழுதலை "ஆர்கழல்பூ" வீழ்வ தாகச் சங்கப் பாடல்கள் (அகம். 9, குறுந்தொகை-329) கூறுவது அரிய உண்மைச் செய்தியாகும். இலுப்பை மரம் காடுகளில் காணப்படுவதுபோல வறட்சியான செந்நிலத்திலும் காணக்கூடியது. பவளம்போன்ற நிறமுடைய செந்நிலப்பாலை வழியில் இலுப்பைப் பூக் கள் ஆலங்கட்டிபோல விழுந்து நிலத்தை மூடியிருந்தது, சிவந்த இரத்தப்பெருக்கின் மேல் மிதந்த வெண் கொழுப்புப் போல் தோன்றிற்று என்று ஒரு புலவர்

மிக அழகாகக் கூறியுள்ளார். இலுப்பைப் பூவின் நுனியில் அதன் சூல்முடி கம்பி போலப் பூவிதழின் துளைக்குள்ளிருந்து வெளியே வந்து நீண்டிருக்கும். இதை ஒரு புலவர் 'துய்த்தலை இருவோடு' ஒப்பிட்டுக் கூறியிருக்கின்றார். இறு மீனின் தலையில் காணும் நீண்ட மீசைக்குப் பூவின்மேல் காணப்படும் நீண்ட சூல் முடி ஒப்பாகும். நெய்யில் தோய்த்த திரிபோல இலுப்பைப்பூ உதிர்ந்ததாக நற்றிணை (279) கூறு வதும் பொருத்தமே.

இலுப்பைப் பூவின் தடித்த இதழ்கள் இனிய சுவையுடையவை. வடநாட்டில் இந்த இதழ்களை உலர்த்தியும், சமைத்தும் உண்பர். இது சில பழங்குடி மக்களுக்கு முக்கிய உணவுப் பொருளாகும். தமிழ் நாட்டில் பழங்காலத்தில் இலுப்பைப் பூவிதழ்களைச் சர்க்கரைபோலப் பயன்படுத்தினர். "ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூ சர்க்கரை" என்ற பழமொழி வழங்கி வருகின்றது. இலுப்பைப்பூவைப்பற்றி விலங்கு நூலாரும் செடி நூலாரும் கண்டறிந்து எழுதிய செய்தியைச் சங்கப் புலவர்கள் சொல்லி யிருப்பது மிகுந்த வியப்பைத் தருகின்றது. கரடி களுக்கு இலுப்பைப் பூவின்மேல் மிகுந்த ஆசையுண்டு. இலுப்பைப் பூவின் இன்சுவைக்காகக் கரடிகள் இலுப்பைமரத்தைத் தேடி நெடுந்தொலைகூடப் போகு மாம். கரடிக்குத் தேன் என்றால் மிகுந்த ஆர்வமுண்டு. அதற்கடுத்து இலுப்பைப் பூவின்மேல் ஆசை யுண்டாம். இலுப்பைப்பூவைக் கண்டால் கரடிகள் கூட்டமாக உண்பதற்காகச் சேர்ந்துவிடும். கீழே கிடக்கும் பூவை மட்டுமின்றி மரத்தின் மேலேறிப் பறிப்பதும் உண்டாம்.

"கீழ்ப்படு தார முண்ணு மேற்சினைப்
பழம்போற் சேற்ற தீம்பூழ லுணீஇய
கருங்கோட் டிருப்பை யூரும்
பெருங்கை யெண்கின் சுரனிறந் தோரே" (அகம், 171)

கீழே கிடந்த இலுப்பைப்பூ உணவை உண்ணுது மரத்தின் மேலிருந்த பழத்தைப்போல இனிய சதையுள்ள பூவை உண்பதற்காக இலுப்பை மரத்தின்மேல் ஊர்ந்து ஏறும் பெரிய கையையுடைய கரடி என்று அகநானூறு கூறுவது மிக அரிய, அழகிய இயற்கைச் செய்தியாகும்.

"மருப்புக் கடைந்தன்ன கொள்ளை வான்பூ
மயிர்க்கா லெண்கி னீரினங் கவர" (அகம், 267)

"இருங்கிளை யெண்கி னழல்வா யேற்றை
கருங்கோட் டிருப்பை வெண்பூ முனையிற்" (அகம், 247)

"கோடுகடைந் தன்ன கொள்ளை வான்பூ
வாடுபரந் தன்ன வீன லெண்கின்
சேடுசினை யுரீஇ யுண்ட மிச்சல்" (அகம், 331)

"ஆலி யொப்பின் தூம்புடைத் திரள்வீ
ஈன லெண்கின் இருங்கிளை கவரும்" (அகம், 95)

"அத்த இருப்பை ஆர்கழல் புதுப்பூத்
துய்த்த வாய துகள்நிலம் பரக்கக்
கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி
வன்கை யெண்கின் வயநிரை பரக்கும்" (அகம், 15)

மேற்காட்டிய அகப்பாடல்களில் கரடிகள் இலுப்பைப் பூவை விரும்பி உண்ணுவதைப்பற்றி விளக்கமாகக் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்கலாம். குட்டியீன்ற சமயத்தில் கரடிகள் கூட்டமாக இலுப்பைப் பூவைக் கவர்ந்ததாகக் கூறுவதைக் காணலாம். கரடிகள் உயர்ந்த கிளைகளிலும் ஏறி இலுப்பைப் பூக்களை

உருவித் தின்பதையும் கூறியுள்ளனர். இலுப்பை மரத்தின் பழத்தையும் கரடி உண்பதுண்டு என்பதை அகநானூறு 81ஆம் பாடல் கூறுகின்றது. மற்றும் வௌவால் இலுப்பைப் பழத்தை விரும்பி உண்பதாக நற்றிணை கூறுவது இன்றும் சிற்றூர்களில் இலுப்பைத் தோப்புகளில் காணக்கூடிய செய்தியாகும்.

"வேம்பின் ஒண்பழம் முணைஇ இருப்பைத்
தேம்பாய் செற்ற தீம்பழன் நசைஇ
வைகுபனி உழந்த வாவல் சினைதொறு
நெய்தோய் திரியில் தண்சிதர் உறைப்ப"

(நற்றிணை, 279)

பனிக்காலத்தில் இலுப்பை மரத்தில் கனிகள் தோன்றும். அத்தகைய பனியில் வௌவால் இலுப்பையின் இனிப்பான சதையையுடைய கனியை விரும்பியதாகக் கூறியது உண்மைச் செய்தியே. வௌவால்கள் இலுப்பைத் தோப்பில் அடைவதை இன்றும் கண்கூடாகக் காணலாம்.

"கான விருப்பை வேனல் வெண்பூ
வளிபொரு நெடுஞ்சினை புகுத்தலி னூர்கழல்பு
களிறுவழங்கு சிறுநெறி புதையத் தாஅம்"
பிறங்குமலை யருஞ்சுர மிறந்தவர்ப் படர்ந்து

(குறுந்தொகை, 329)

காடுகளில் அடிக்கடி போவதற்கென்று யானைக் கூட்டங்கள் தனிவழி வகுத்துக்கொள்ளும். அந்தச் சிறு நெறியை மறைக்கும்படி காற்றடித்தலினால் இலுப்பைப் பூ நிறைய விழுந்து கிடப்பதாகக் குறுந்தொகை கூறுவது இயற்கையை நுட்பமாகக் கண்டு கூறிய காட்சியாகும்.

இலுப்பையைப் பழந்திராவிட மொழிகளில் 'இப்பை' என்றழைக்கின்றனர். இருப்பை என்ற சங்கநூல் வழக்கொடு நெருங்கிய தொடர்பு தெரிகின்றது. வடமொழியில் இலுப்பையை 'மதூகம்' என்றழைப்பர் இந்தி மொழியில் 'மாகுவா' என்றழைக்கின்றனர். மதூகம் என்ற சொல் நிகண்டுகளில் காணப்படுவது. இலுப்பையை வடமொழிப்பெயரின் அடிப்படையாக 'Madhuca Longifolia' என்றழைப்பதுமுண்டு.

# 15. தாழை

நெய்தற்றிணையில் கடற்கரைச் சூழலில் காணப் பட்டதாகச் சங்க நூல்களில் கூறப்பட்ட செடிகளில் தாழையுமொன்றாகும். தாழையைப்பற்றிப் பல புலவர்கள் பாடியுள்ளனர். தாழையின் அடிமரம் இலை, பூ, வீழ், வாழும் சூழ்நிலை ஆகியவைபற்றிச் செய்திகள் வருகின்றன. இச்செய்திகள் செடிநூலில் கூறப்படும் செய்திகளோடு பெரும்பான்மை ஒத்தே வருகின்றன. தாழையின் அடிமரம் நேரிதாக இல்லா மல் வளைவுடன் காணப்படும். "தடந்தாள் தாழை" (நற்றிணை 131, 230, 270) "தடவுமுதல்" (நற்றிணை 19, நற்றிணை 235) "தடவு நிலைத்தாழை" (குறுந்தொகை 219) என்று நற்றிணையிலும், குறுந்தொகையிலும் தாழையின் அடிமரம் பொருத்தமாகக் கூறப்படுகின் றது. தாழையின் மடல்கள் கீழே விழுந்து தாழையின் தாள் அல்லது அடிமரம் சருச்சரையுடையதாக இருப் பதைச் சங்கநூல்கள் குறிப்பிடுகின்றன. "பிணர் அரைத்தாழை" (அகம். 130) "பிணர்படு தடவுமுதல்" (நற்றிணை. 19, 235) என்று தாழையின் சுர சுரப்பான அடிமரம் விளக்கப்படுகின்றது. தாழையின் அடி மரத்தை மிக அழகாக "இறவுப் புறத்தன்ன பிணர்படு தடவுமுதல்" என்று நற்றிணை கூறுகின்றது. இரு மீனின் வளைவுகளுடன்கூடிய புறம் தாழையின் வீழ்ந்த மடல்களால் ஆன வடுவுடன் காணும் அடிமரத்தைப் போல் இருக்கின்றது. தாழையின் மிக முக்கியமான செய்தியாகக் கருதுவது அதன் விழுதேயாகும். தாழையின் விழுதைச் செடிநூலார் (Stilt roots) என்று கூறுவர். முதியவனுக்கு ஊன்றுகோல் உதவுவது

போல் தாழையைத் தாங்குவதற்கு இந்த விழுதுவேர் பயன்படுகின்றது.

> "வீழ்தாட் டாழைப் பூக்கமழ் கானல்" (நற்றிணை, 78)
>
> "வீழ் தாழை தாள் தாழ்ந்த" (பட்டினப்பாலை, 84)
>
> 'ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்
> தாழை வீழ்கயிற் றூசல் தூங்கிக்" (அகம், 20)
>
> "..............................தண்டாழை
> வீழூசல் தூங்கப் பெறின்" (கலித்தொகை, 131)
>
> "வீழ்தாழ் தாழை யூழுறு கொழுமுகை"
> (குறுந்தொகை, 228)

மேற்காட்டிய பாடல்களில் தாழையின் விழுது தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. தாழையின் விழுதைத் ஊஞ்சல் கயிறுபோல் பயன்படுத்தியதாகவும் கூறப்பட்டுள்ளது. "வீழ்கயி றூசல்" "வீழூசல்" என்று அழைக்கப்படுகின்றது. தென்னை மரமும் தாழையென்றே சங்க நூல்களில் அழைக்கப்படுகின்றது. அதை 'வீழில் தாழை' யென்று குறிப்பிட்டனர். வீழ் தாழையினின்று பிரித்துக்காட்டவே வீழில் தாழையெனப்பட்டது.

தாழையின் இலையைக் கண்டவர் யாரும் அதை மறக்கவே முடியாது. தாழையின் இலையை மடல் என்றழைப்பர். "மடல் பெரிது தாழை" என்று பிற்காலப் பாடல் கூறினபடி தாழையின் இலை மிகப் பெரியது. 15 அடி வரையில் நீண்டு வளரக்கூடியது. "நீடிலைத் தாழை" என்று கலித்தொகை (144) சொல்லுகின்றது. இலையோரங்களில் கூரிய, ஊறுதரும் கொடிய முட்கள் நிறைய இருக்கும். தாழையின் இலையைச் சங்க நூல்களில் அழகாக வர்ணித்துள்ளனர்.

"சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை" (நற்றிணை 19)
"சுறவுமருப் பன்ன முட்டோ டொசிய" (நற்றிணை, 203)
"அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை" (நற்றிணை, 235)
"எயிறுடை நெடுந்தோடு காப்பப் பலவுடன்" (அகம், 130)
"வாள்போல் வாய கொழுமடற் றாழை"
(குறுந்தொகை, 245)

தாழை இலையின் ஓரத்தில் உள்ள பற்கள் அராவுகின்ற வாளரத்தின் பற்கள்போல இருப்பதாகக் கூறியது முற்றிலும் பொருத்தமே. வாளரத்தைப்போன்று ஒரு திசையில் தாழையின் முட்கள் சாய்ந்திருக்கும். கொம்பன் சுறவின் முள் நிறைந்த கொம்பு போலிருப்பதாகக் கூறியதும் அழகிய உவமையாகும். சுறவின் கொம்பிற்குஇரண்டுபக்கமும் பற்கள் இருப்பதுபோலத் தாழை மடலிலும் இருபுறமும் முட்கள் உண்டு. செடி நூலிலும் இதன் இலையை "அரவு வாள்வாய", அஃதாவது (Serrate margin) என்றே கூறுவர். செடி நூலார் இட்ட பெயரைச் சங்ககாலத்திலேயே நம் புலவர்கள் படைத்துள்ளனர். தாழையின் நீண்ட இலையை மடல் (குறுந்தொகை. 245, அகம். 330, மணி மேகலை 17-8) என்றும் தோடு (அகம். 130, நற்றிணை. 211, குறுந்தொகை 245) என்றும் சங்க நூல்களில் அழைப்பர். தாழையின் இலை ஓலைபோல எழுதப் பயன்படுத்திய செய்தியைச் சிலப்பதிகாரம் கூறுகின்றது.

"மேதக தாழை விரியல்வெண் தோட்டு" (சிலம்பு, 2, 17)
"முதிர்ப்பூந் தாழை முடங்கல்வெண் தோட்டு"
(சிலம்பு, 8-49)

தாழையின் உள்மடல் வெண்மையானதாக இருக்கும். வெண்தோடு என்று சிலம்பு கூறுவது அகமடலையே,

யாகும். "முள்ளுடை நெடுந்தோடு" "எயிறுடை நெடுந்தோடு" என்று அகநானூறு (130, 180) கூறுவது பொருத்தமே.

தாழையின் இலையைவிட முக்கியமானதாகக் கருதியது அதன் பூவேயாகும். தாழையின் பூ மிக்க நறுமணமுடையது. தொலைவிலும் நறுமணத்தைத் தரக்கூடியது. தாழையின் பூவைச் சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர்.

"தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகென மலரும் பெருந்துறை" (குறுந்தொகை, 226)

"வீழ்தாழ் தாழை யூழுறு கொழுமுகை
குருகுள ரிடத்தின் விரிபுதோ டவிழும்"
(குறுந்தொகை, 228)

"தடந்தாட் டாழை முள்ளுடை நெடுந்தோட்
டகமடற் பொதுளிய முகைமுதிர் வான்பூங்
கோடுவார்ந் தன்ன வெண்பூத் தாழை" (நற்றிணை, 203)

"அலைநீர்த் தாழை யன்னம் பூப்பவும்"
(சிறுபாணாற்றுப்படை, 146)

"துறுகடற் றலைய தோடுபொதி தாழை
வண்டுபடு வான்போது வெரூஉம்" (நற்றிணை, 211)

"........................பெருந்துறை
வெள்வீத் தாழை திரையலை......" (குறுந்தொகை, 163)

"பெருங்களிற்று மருப்பினன்ன வரும்பு முதிர்பு'"
(நற்றிணை, 19)

தாழையின் பூ வெண்மையானது என்பதை 'வெள்வீ' என்றும், 'வான்போது' என்றும் குறிப்பிட்டுள்ளனர். தாழையின் பூ உருவில் சிறகுகளை மடக்கி அமர்ந்துள்ள வெண்மையான நாரைபோலிருப்பதாகக் கூறப்பட்

டிருப்பது அழகான ஒப்புமையாகும். இது நேரில் கண்டோருக்கே விளங்கும். வெண்மையான நாரைகள் மரத்தில் சிறிது தொலைவில் அமர்ந்திருப்பது தாழை மடலுடன் பூத்ததுபோலவே காணப்படும். இதன் காரணமாகவே 'குருகென மலரும்' என்றும் "அலைநீர்த் தாழை அன்னம் பூப்பவும்" என்றும் கூறினர். கடற்கரை ஊர்களில் தாழைச் செடிகளிலே நாரைகள் தங்குவதாகப் பல சங்கப் பாடல்கள் கூறுகின்றன. நாரையைத் தாழையில் பன்முறை பார்த்து நேரில் கண்ட ஒப்புமையையே குருகுடன் தாழை மலரை ஒத்திட்டுப் பாடும் மரபாகச் சங்க நூல்களிலும் பிற நூல்களிலும் வழங்கி வரலாயிற்று. தாழையின் அக மடல்களுக்குள் தோன்றும் தாழைப் பூ வரும்பு யானையின் கூரிய தந்தத்தைப் போல உருவில் தோன்றியதாகக் கூறுவதையும் நோக்குக. நுனி கூர்ந்து அடி பெருத்து வெண்மையாக இருக்கும் தாழை அரும்பு யானையின் தந்தத்திற்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது.

"எயிறுடை நெடுந்தோடு காப்பப் பலவுடன்
வயிறுடைப் போது வாலிதின் விரீஇப்" (அகம், 130)

முள்ளுடைய நெடிய தாழை மடல்களால் பாதுகாக்கப்பட்ட நடு இடத்தைப் பிறப்பிடமாக உடைய மொட்டுகள் விரியும் என்று அகநானூறு கூறும் விளக்கம் அரிய செய்தியாகும். தாழை அரும்பு மடல்களால் சூழப்பட்டு நடுவில் தோன்றும் தன்மையுடையது, பல மொட்டுகள் சேர்ந்து இருப்பது என்று கூறப்பட்டிருப்பது உண்மையான விளக்கமேயாகும்.

தாழையின் பூவை விளக்கிய சங்கப் புலவர்கள் அதன் பூவில் காணப்படும் அளவுகடந்த மகரந்தத்தையும்பற்றிப் பாடியிருப்பது வியப்புக்குரியது.

"ததர்பிணி யவிழ்ந்த தாழை வன்புதர்
தயங்கிருங் கோடை தாக்கலி னுண்டாது
வயங்கிழை மகளிர் வண்டிற் ருஅங்" (நற்றிணை, 299)

"யாழிசைக் கொண்ட இனவண் டிமிர்ந்தார்ப்பத்
தாழா துறைக்குந் தடமலர்த் தண்டாழை"
(கலித்தொகை, 131)

"கோடுடைத் தாழைக் கொழுமட லவிழ்ந்த
வால்வெண் சுண்ண மாடிய இதுகாண்"
(மணிமேகலை, 17-8)

கோடைக்காற்றால் தாக்கப்பட்ட தாழைப்புதரில் தாழை மலரின் நுண்ணிய தாது மகளிருடைய வளைகள் உடைந்து உதிர்ந்தாற்போலப் பரவி நிற்கும் என்று நற்றிணை கூறுவதைக் கவனிக்கவேண்டும். வண்டுகள் மொய்க்கும்போது மகரந்தத் தாது தாழாது உதிர்ந்து கொண்டேயிருக்கும் தாழை என்று கலித்தொகை கூறுகிறது. கொம்பு உடைந்ததுபோலக் கொழுமடல் அவிழ்ந்து வெள்ளையான சுண்ணப்பொடி ஆடியது போல் தாழையின் மகரந்தம் உதிர்ந்து பரவியதாக மணிமேகலை கூறுவதையும் நோக்குக. தாழைக்கு ஆண்பூ, பெண்பூ என்று தனித்தனிப் பாகங்கள் உண்டு. ஆண் பூவென்பது நிறைய மகரந்தத் தூள் நிறைந்த (Male flowers with numerous stamens) பாகமாகும். தனியாக உள்ள ஆண் பூவிலிருக்கும் மகரந்தப்பைகள் திறக்கும்போது பல்லாயிரக்கணக்கான மகரந்தத் தூள்கள் காற்றடித்துப் பரவும். இதையே மணமிக்க சுண்ணப்பொடி பூசியதுபோலப் பரவியதாகக் கூறியிருக்கின்றனர். சங்ககால மகளிர் சங்கு வளையல் களை அணிந்தனர். வெண்மையான அவ்வளையல்கள் உடைந்து உதிருவதுபோல் தாழை மகரந்தத்தை

உதிர்த்ததாகக் கூறியது அழகிய ஒப்புமையாகும். தாழையில் நிறைய மகரந்தம் இருந்ததால் 'தாழாது உறைக்கும்' என்று கலித்தொகை குறிப்பிடுகின்றது. தாழைபோன்ற புல்வகையை ஒத்த செடிகளுக்கு நிறைய மகரந்தம் உண்டு என்று செடிநூலார் கூறுவர். இத்தகைய செடிகளில் மகரந்தச் சேர்க்கையும் கருவுறு தலும் காற்றடித்து மகரந்தத் தூள் பரவுதலால் ஆகு மெனக் கூறுவர் · காற்றடிக்கும்போது எவ்வளவோ மகரந்தத்தூள்கள் தாழையின் பெண் பூவில் உள்ள சூல் முடியில் விழாது வீணுகின்றன. அப்படி வீணுவ தால் ஏதாவது சில மகரந்தத் தூள்களாவது சூல் முடியில் விழுந்து தாழை கருவுறுவதென்றால் அதற் காகப் பல்லாயிரக்கணக்கான மகரந்தத் தூள்கள் தேவையாகின்றன. அப்படிப் பரவி வீழ்ந்தால்தான் ஏதாவது ஒருசில மகரந்தத்தூள்களாவது தாழையின் நுண்ணிய சூல்முடியில் விழுந்து கருவுறும் வாய்ப்பு ஏற்படும் என்று செடி நூலார் கூறுவர். இயற்கையில் தாழைக்குள்ள பல்லாயிரக்கணக்கான மகரந்தத்தூள் கள் சிதறுவதைச் சங்கப் புலவர்கள் குறிப்பிட்டுப் பாடி யிருப்பது அரிய செய்தியே. அனுபவ வாயிலாக நுண்ணிய, அரிய அறிவியற் செய்திகளையும் தமிழ்ப் புலவர்கள் உணர்ந்திருந்தனர். மிகப் பிற்கால நூலாகிய 'விறலி விடுதூதில்' தாழையின் மகரந்தம் காற்றில் வீசுவதைப்பற்றி ஒரு நுண்ணிய செய்தி கூறப்பட் டிருப்பது பலரும் அறியாதது. மதனபிஷேகம் என்ற பெயருடைய பாட்டுடைத் தலைவியின் பிறப்பை விளக் கும்போது அவளுடைய தாய் அவளை அரிதின் முயன்று பெற்றதாகப் புலவர் கூறியிருக்கிறார். அவளுடைய தாயோ ஒரு கணிகை. காமுகர் பலர் அவளை நாடுவர்.



தாழையின் பழம்



தக்கணாமூர்த்தியும்
தாழையின் பழமும்

பக்கம் 173

அத்தகைய நிலையில் அவள் அரிதாகப் பெண் மகவு பெற்றதை,

"தாழைக் காற்றடிக்கக் காய்த்த கதைபோல"

என்று புலவர் வர்ணித்திருப்பது நுண்ணிய நகைப பைத் தரும் செய்தியாகும். தாழையானது காற் றடித்து ஏதோவொரு மகரந்தத்தாது பிடித்துக் காய்த்த கதைபோலவே பல காமுகர்கள் நாடியும் கணிகை கருவுற்ற கதை இருப்பதாகக் கூறியது நுட்ப மாக எண்ணி மகிழ வேண்டிய உவமையாகும். 'காற் றடிக்கப் பூத்த கதைபோல' என்று பதிப்பிக்கப்பட் டிருக்கும் பாடம் பொருத்தமன்று. அது தவறுடைய பாடமாகும்.

தாழையின் காயைப்பற்றியும் கலித்தொகை கூறுகிறது.

"நிலவுக் கானன் முழவுத் தாழைக்
குளிர்ப் பொதும்பர் நளித் தூவ"
(மதுரைக்காஞ்சி, 114-5)

"கான லணிந்த உயர்மணல் எக்கர்மேல்
சீர்மிகு சிறப்பினோன் மரமுதல் கைசேர்த்த
நீர்மலி கரகம்போல் பழந்தூங்கு முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்"
(கலித்தொகை, 133)

தக்கணாமூர்த்திதேவர் தாமிருந்த ஆலமரத்தே தாமிருப் பதற்கு முன்னே தூக்கிவைத்த நீர் நிறைந்த குண்டிகை போலத் தாழைப் பழந்தூங்கியதாகக் கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும். தாழையின் பழம் அன்னாசிப் பழத்தைப்போல, ஆனால் சிறியதாக இருக்கும். குண்டிகைபோல இருந்ததாகக் கூறப்பட்டது பொருத் தமே. குண்டிகையைச்சுற்றிக் கயிறுகோத்துத் தொங்க

விடப்படும்போது அது தாழையின் தொங்கும் பழத்தைப்போலிருந்ததாகக் கூறியது உருவில் பொருத்தமேயாகும். குடமுழாப் போலிருந்ததாகத் தாழையின் பழத்தை மதுரைக்காஞ்சி கூறுவதும் உருவத்தில் மிகப் பொருத்தமே.

தாழை இயற்கையில் வளரும் சூழ்நிலையையும் தெளிவாகக் கூறியுள்ளனர்.

"தலையவிழ் தாழைக் கானலம் பெருந்துறை" (அகம், 90)

"எக்கர்த் தாழை மடல்வயி னுனும்" (அகம், 330)

"வீழ்தாள் தாழை பூக்கமழ் கானல்" (நற்றிணை, 78)

"எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங்கோட்டுத்
துறுகடற் றலைய தோடு பொதி தாழை"
(நற்றிணை, 211)

"தயங்குதிரை பொருத தாழை வெண்பூ"
(குறுந்தொகை, 228)

"உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுதல்"
(நற்றிணை, 235)

"முழங்குதிரை கொழீய மூரி யெக்கர்
தடந்தாட் டாழை முள்ளுடை நெடுந்தோட்டு"
(நற்றிணை, 203)

தாழை கடற்கரையில் மணலில் காணப்படுவதைத் தெளிவாகக் கூறியுள்ளனர். கடற்கரையில் கடல் அலைகள் பொரும்படி தாழை இருந்ததாகக் கூறியுள்ளனர். கடல்நீர் தாழையின் வேர்களுக்குள் புகுந்து வருவதையும் அந்த வேர்களுக்கிடையில் நண்டு வளைகள் கட்டி வாழ்வதாகவும் கூறியிருப்பது இன்றும் கடற்கரையில் காணக்கூடிய காட்சியாகும்.

"கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்
தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம் அலவன்"
(அகம், 380)

'தாழை வேரளை' என்று தாழையின் வெளியே தெரியும் வேர் கூறப்பட்டுள்ளது. தாழையின் வேரில் அலைகள் மோதும்போது மணல் பறிக்கப்பட்டு வேர்கள் நிலத்தில் ஆழ்ந்து இருக்காது வெளியே நன்கு தெரியும். இதன் காரணமாகத் தாழை வளைந்து தாழ்ந்து கொடுக்கும் தன்மையுடையது. காற்றடித்தாலோ, அலை மோதினுலோ தாழை சாய்ந்து அசையும். தாழைக்கு எப்போதும் தலைகனத்து இருக்கும். ஏனெனில் இலைகள் தாழையின் தலையிலேயே குவிந்து இருக்கும்.

"தாழை தளரத் தூங்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடாக்"
(அகம், 40)

"தடந்தாள் தாழைக் குடம்பை நோனுத்
தண்தலை கமழும் வண்டுபடு நாற்றத்து"
(நற்றிணை, 270)

"வாடை தூக்க வணங்கிய தாழை
ஆடுகோட் டிருந்த அசைநடை நாரை"
(கலித்தொகை, 128)

காற்றடிக்கும்போது தாழை மரம் தளரத் தூங்கியதாகவும் வணங்கி ஆடியதாகவும் கூறியிருப்பதை நோக்குக. இது செடிநூலார் கூறிய உண்மையே. தாழை தலைகனத்துத் தளர்ந்து சாய்ந்து கொடுத்தாலும் கீழே விழாது ஊன்றுவதற்காகவே விழுதுகள் இருப்பதாகச் செடிநூலார் கூறுவர். நாரைகள் மேலே அமர்ந்தாலும், கூடுகள் கட்டியதாலும் தாங்காது சாய்ந்த

தாகவும் சங்கப்பாடல்களில் கூறப்பட்டுள்ளது. ஆனால் விழுந்ததாகக் கூறப்படவில்லை.

தாழையின் நறுமணமிக்க பூ கடற்கரையின் புலால் நாற்றத்தை நீக்கியதாகச் சில பாடல்கள் கூறுகின்றன.

'' கடற்புலவு கடிந்த மடற்பூந் தாழைச்
சிறைசெய் வேலி யகவயி னாங்கோர்
புன்னை நீழற் புதுமணற் பரப்பில்''

(சிலம்பு, 6-166-168)

கோவலனும் மாதவியும் மகிழ்ந்த இடம் தாழை மரங்கள் வேலிபோற் சூழ்ந்து மறைத்த இடம். அதன் நடுவில் புன்னையின் நிழலில் புதுமணற் பரப்பில் விதானங்கட்டிய இடத்தில் கோவலனும் மாதவியும் அமர்ந்து மகிழ்ந்தனர். கடலின் புலால் நாற்றத்தைக் கடிந்துபோக்கவே தாழை சூழ்ந்த இடத்தைக் காதலர்கள் தேடியதாகத் தெரிகின்றது.

'' முண்டகங் கெழீஇய மோட்டுமணல் அடைகரைப்
பேஎய்த் தலைய பிணர்அரைத் தாழை
எயிறுடை நெடுந்தோடு காப்பப் பலவுடன்
வயிறுடைப் போது வாலிதின் விரீஇப்
புலவுப்பொரு தழித்த பூநாறு பரப்பின்''

(அகம், 130)

மேற்காட்டிய அகநானூற்றுப்பாடல் தாழை மரத்தைப்பற்றிக் கூறும்வர்ணனை செடிநூலார் கூறக்கூடிய விளக்கம்போல் தெளிவாகவும் சுருக்கமாகவும் இருக்கிறது. தாழை காணப்படும் இடம், அடிமரம், இலைகள், பூ ஆகியவை குறிப்பாக விளக்கப்படும் திறன் வியக்கத்தக்கது. 'பேய்த்தலைய தாழை' என்று கூறியது

அழகிய உவமை. தாழையைக் கடற்புலால் நாற்றத்தை நீக்கவே வேலியாகப் பயிரிட்டதாகவும் தெரிகின்றது.

"மன்றப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றில் தாழையொடு கமழுந்"

(நற்றிணை, 49)

வீட்டு முன்றிலில் தாழையை நறுமணத்திற்காக வளர்த்தது தெரிகின்றது. தாழை கமழும் கானலைப் பழந்தமிழர் விரும்பினர் என்பது சங்க நூல்களில் நன்கு விளங்குகின்றது

தாழையைச் செடி நூலார் (Pandanus odoratissimus) என்றழைப்பர். மலையாளத்திலும் கன்னடத்திலும் 'கேதகி' என்பர். சிலப்பதிகாரம் 'கைதை' என்று கூறுகின்றது. கைதை என்ற தமிழ்ச் சொல் வடமொழியில் 'கேதகி' என்று மாறியதாக மொழிநூலார் கூறுவர்.

---

## 16. குருகு, குரவு, குருந்து

சங்க இலக்கியத்தில் பல நறுமணமுடைய செடிகளைப்பற்றிப் புலவர்கள் பாடியுள்ளனர். அத்தகைய செடிகளில் குருகு என்ற ஒரு கொடியைப்பற்றியும், குரா என்ற ஒரு குற்றுச் செடியைப்பற்றியும், குருந்து என்ற மரத்தைப்பற்றியும் சில செய்திகள் காணப்படுகின்றன. இவை மூன்றும் நறுமணமுடைய பூக்களை உடையன. மூன்றும் சூடும் பூக்களாகக் கூறப்பட்டிருக்கின்றன.

குருகு என்பது தற்காலத்தில் குருக்கத்தி என்று அழைக்கப்படும். மாதவி என்ற வடமொழிப் பெயராலும் வழங்கும். குருகு பசுமையான அழகிய பெரிய கொடியாகும். நறுமணமுள்ள பூக்களைத்தரும் கொடிகளில் மிகப்பெரியது குருக்கத்தியாகும். இஃது என்றும் பசுமையாகக்(Evergreen) காணப்படும். சங்க இலக்கியத்தில் அதன் காரணமாகவே 'பைங்குருக்கத்தி'' (குறிஞ்சிப்பாட்டு 90 வரி, நற்றிணை 97.) என்றழைக்கப்படுகின்றது. இதன் இலை பெரியதாகவும், நீண்டு கூரிய முனையுடன் கரும்பச்சையாகக் காணப்படும். இதன் இலை "பாசிலை" (பெரும்பாண். 376ஆம் வரி) என்றழைக்கப்படுகிறது. குருக்கத்தி தடித்த கொடியாக இருப்பதால் வலிமையான கொழுக்கொம்பில் ஏற்றிவிட்டால் நன்றாகப் படரும். இது பெரிய கொடியாக அடர்ந்து படர்வதால் நிறைய இடத்தை அடைக்கும். வெயில் நுழைய முடியாதபடி அவ்வளவு அடர்த்தியாகக் காஞ்சி மரத்தில் சுற்றிப்படர்ந்திருந்ததாகப் பெரும்பாண் கூறுகின்றது.

"வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்க்
குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடிப்
பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூ"
(பெரும்பாண், 374-6 வரிகள்)

"மாதவி யென்றோர்
பாசிலைக் குருகின் பந்தரிற் பொருந்தி"
(சிலம்பு - புறஞ்சேரி. 51-53 வரிகள்)

குருக்கத்திக் கொடி மிக நீண்ட கொடி என்பதை 'நெடுங்கொடி' என்றும், இது காஞ்சி மரத்தைச் சுற்றி ஏறுவதையும் பெரும்பாணாற்றுப்படை பொருத்தமாகக் கூறுகின்றது. இந்த நறுமணமுள்ள அழகிய கொடியைப் பந்தலில் ஏற்றி வளர்த்தனரென்பதைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. இதன் கொடி தடித்துக் காணப்படுவதால் 'கொழுங்கொடி' யென்றும் கூறப்படுகின்றது. குருக்கத்தியின் பூக்கள் நீண்ட கொத்துக்களில் தொங்கும் (laden with large trusses of pleasant Perfumed flowers) என்று செடிநூலார் கூறுவர். இதன் பூக்கள் நிறைந்த கொத்தைச் சிலப்பதிகாரம் 'கோதை மாதவி' என்று அழைக்கிறது.

"கோதை மாதவி சண்பகப் பொதும்பர்"
(சிலம்பு-மனையறம்படுத்த காதை. 18)

"கோதை மாதவி கொழுங்கொடி யெடுப்பக்
காவுங் கானமுங் கடிமல ரேந்தத்"
(சிலம்பு-ஊர்காண்காதை, 113-4)

செடிநூலாரும் குருக்கத்தி கொத்தாகப் பூப்பதைப் பற்றிக் (In panicles) கூறியிருக்கின்றனர்.

"துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு
பித்திகை விரவுமலர் கொள்ளீ ரோவென
வண்டு சூழ் வட்டியள் திரிதரும்
தண்டலை உழவர் தனிமட மகளே" (நற்றிணை, 97)

"பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூ"
(பெரும்பாண், வரி 376)

தலைப்பகுதியில் துய்யையுடைய இதழ்களுடன்கூடிய குருக்கத்திப் பூவொடு பித்திகை மலரை விரவிக்கட்டி அதை விலைக்கு விற்ற உழவர் மகளைப்பற்றி நற்றிணை கூறுவதைக் கவனிக்கவேண்டும். குருக்கத்திப் பூவில் மெல்லிய பட்டுப்போன்ற மயிர் இருப்பதாக (covered with soft silky hairs) செடிநூலார் கூறுவதையே 'துய்த்தலை இதழ்' என்று நற்றிணைப் பாடலில் சொல்லப்பட்டிருக்கின்றது.

குருக்கத்திக் கொடியைப் பிற நறுமணமுள்ள செடி கொடிகளோடு தோட்டங்களிலும் பூஞ்சோலைகளிலும் வளர்த்தனரெனத் தெரிகின்றது. வையை ஆறு "குல்லை வகுளங் குருக்கத்தி, பாதிரி" ஆகிய நறுமணமிக்க பூக்களைச் சுமந்துகொண்டு வருவதாகப் பரிபாடல் கூறுகின்றது. வடமொழி இலக்கியத்தில் குருக்கத்திக் கொடியை அழகிய பெண்களுக்கு உவமையாகக் கூறுவது வழக்கம். சிலப்பதிகாரத்திலும் மாதவியைக் குருக்கத்திக் கொடியோடு ஒப்பிட்டுக் கூறப்பட்டிருக்கின்றது. குருக்கத்திப் பூ முருகனுக்குரியதாகச் சிந்தாமணி(971) கூறுகின்றது. "கத்திகைக் கண்ணியை அணிந்த கடவுள்" என முருகனைப்பற்றிச் சொல்லுகின்றது. கத்திகையென்பது குருக்கத்தியாகும். குருக்கத்தி மக்கிய இலைகளுடன்கூடிய உரமுள்ள நிலத்தில் நன்கு வளரும். 'குப்பையில் முளைத்த குருக்கத்திபோல" என்று பழமொழி வழங்குகின்றது. குருகின் பூவெண்ணிறமானது. குருகைச் செடிநூலார் (Hiptage Madablata) என்றழைப்பர். இது இயற்கையில்

பசுங்காடுகளிலும் அருவிப்பள்ளங்களிலும் காணப்படும்.

"அருவி யதிரக் குருகிலை பூப்ப"

என்று திணைமொழி யைம்பது கூறுவதைக்காணலாம்.

குருகைப்போலவே நறுமணமுள்ள, வெண்மையான பூக்களையுடைய ஒரு செடி குரா என்பதாகும். இது குரா என்றும் குரவம் என்றும் சங்க நூல்களில் அழைக்கப்படும். குரா என்ற பெயர் இன்றும் அருகி வழங்குகிறது. குரா மரத்தின் பெயரால் 'குராப்பள்ளி' என்றொரு ஊரும் உண்டு. குராவை மரமென்று சொல்லமுடியாது. குற்றுச் செடியெனவே (Shrub) கூறலாம். இது குற்றுச் செடியென்பதைக் 'குறுங்காற் குரவு' (நற்றிணை 266) "குறுநிலைக்குரவு' (அகம், 237, நற்றிணை, 56) என்று சங்கநூல்கள் குறிப்பாகக் கூறுகின்றன.

குரவு முன்பனிக்காலத்தில் கொழுந்துவிட்டுப் பின்பனிக்காலம் சென்று இளவேனிலில் பூப்பதாக நற்றிணை கூறுவது செடிநூற் செய்திப்படி முற்றிலும் உண்மையே. குரவின் இலைகள் ஒள்ளிய (Shining) கரும் பசுமையானவை என்று செடிநூலும் கூறுகின்றது.

"பல்வீ பட்ட பசுநனைக் குரவம்
பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக் கொளாஅ"
(குறுந்தொகை, 341)

"கொல்லைக் கோவலர் குறும்புனஞ் சேர்ந்த
குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ
ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்" (நற்றிணை, 266)

"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
கண்களி பெறூஉம் கவின்பெறு காலை" (நற்றிணை, 56)

குரவின் பூ வெண்மையானது என்பதை 'வான்பூ, என்ற சொல் குறிப்பிடுகின்றது. குரவின் பூக்கள் ஒரே மட்டத்தில் குவிந்து கொத்தில் காணப்படும் (Corymbose Cymes) என்று செடிநூலார் கூறுவதையே 'குவியிணர்' என்று குறிப்பாக நற்றிணை கூறுகின்றது. குரவின் இணரில் பல பூக்கள் இருப்பதைப் "பல்வீ பட்ட பசுநனைக் குரவம்" என்ற வரி குறிக்கின்றது. அரும்பு நிலையில் இதன் பூக்கள் பச்சையான புறவிதழுடன் பசுமையாகக் காணப்படும் என்பதைப் "பசுநனைக் குரவம்" என்ற வரி குறிப்பிடுகின்றது. குரவின்பூ நல்ல நறுமணத்தைத் தருவது. குரவின் பூ வண்டு களைத் தருவிக்கின்ற நறிய நாற்றத்தைக் காற்றில் கலந்து ஈவதாக நற்றிணை 56 ஆம் பாடல் கூறுவதைக் கவனிக்கவேண்டும். இது சூடும் பூவாகப் பயன்பட்ட தென்பது இடைமகன் தலையில் சூடவே பூக்கும் குரவம் என்று நற்றிணை கூறுவதிலிருந்து நன்கு தெளிவாகின்றது. குரவம் பூவின் உருவம்பற்றியும் செய்திகள் வருகின்றன.

> " அரவெயிற்று அன்ன அரும்புமுதிர் குரவின்
> தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்" (அகம். 237)

> " குராவரும் பனைய கூர்வாளெயிற்று வெங்குருளை நாகம்"
> (கம்பராமாயணம்)

> " குரவங் கொண்ட குரும்பூழ் கொழுங்கான் முகை சுமந்தன"
> (சீவகசிந்தாமணி, 1651)

குராவின் அரும்பைப் பாம்பின் கூரிய பல்லிற்கு உவமித்துக் கூறியிருப்பது சிறந்த உவமையாகும். குரவின் அரும்பிற்கும் பாம்பின் நச்சுப் பல்லிற்கும் உருவத்தில் ஒப்புமை உண்டு. கூரிய வாள்போன்ற பாம்பின்

பல்லிற்கு உருவில் குரவின் அரும்பு ஒத்திருக்கின்றது. காடையின் காலில் பின்னேயிருக்கும் முள்ளிற்குக் குரவின் அரும்பை ஒப்பிட்டது மிகவும் பொருத்தமே.

"பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி
நுண்கோல் அறைகுறைந்து உதிர்வன போல
அரவ வண்டினம் ஊதுதொறும் குரவத்து
ஓங்குசினை நறுவீ கோங்கலர் உறைப்ப" (அகம். 317)

தராசுத் தட்டில் துண்டித்துப் போடப்படும் வெள்ளிக் கம்பிபோலக் குரவமலர் கீழே விழுந்ததாகக் கூறப் பட்டிருப்பது பொருத்தமான உவமையாகும்.

குரவ மலரைப் பாவையென்றல் சங்க காலத்தி லேயே வழங்கிய ஒரு மரபு. குரவமலரைப் பாவை யென்று வைத்து விளையாடுவது சங்க காலத்து மகளிர் வழக்கமெனத் தெரிகின்றது. பூவரசம் பூவைப் பாவையெனப் புனைந்து சிறுவர் விளையாடும் வழக்கத் தைச் சில ஆண்டுகளுக்கு முன் கூடக் கண்டிருக்கலாம்.

"நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப் பாவை கொய்யும் பொழுதே"
(ஐங்குறுநூறு, 334)

குரவின் பூவைப் பாவையெனக் கொண்டாடும் மரபு சங்க நூல்களிலும் பிற்கால நூல்களிலும் காணப் படுகின்றது. இந்த மரபு தற்காலம் மறைந்துவிட்டது. ஆனால் தெலுங்கில் இன்றும் வழங்கப்படும் குரவின் பெயரிலிருந்து இம்மரபு தெலுங்கு மொழி பேசும் நாட்டிலும் வழங்கி வந்ததெனத் தெரிகின்றது.

"ஈன்றாய் நீ பாவை யிருங்குரவே"
(திணைமாலை நூற்றைம்பது)

தெலுங்கு மொழியில் குரவு "பொம்மா பாப்படா" என்றழைக்கப்படுகின்றது. 'பொம்மை பாப்பா' என்பதே அதன் மொழி பெயர்ப்பு. சங்க இலக்கியத்தில் பாவையென்று வழங்கிய மரபு தெலுங்கு மொழியில் இன்றும் காணப்படுவது மிகுந்த வியப்பைத் தருகின்றது. பொம்மை யென்பதும் பாப்பா என்பதும் பாவையென்பதின் தற்கால வழக்கே. தமிழில் மறைந்த வழக்கு தெலுங்கில் காணப்படுவது வியப்பினும் வியப்பே. குராவைச் செடிநூலார் Chomelia Asiatica அல்லது Webera Corymbosa என்றழைப்பர்.

குருந்து என்றொரு மரத்தைப்பற்றிச் சங்க நூல்களில் சில செய்திகளே காணப்படுகின்றது.

" குருந்தங் கண்ணிக் கோவலர்
பெருந்தண் ணிலைய பாக்கமு முடைத்தே "
(ஐங்குறுநூறு, 439)

" கொல்புனக் குருந்தொடு கல்லறைத் தாஅம்
மிளைநாட்டு அத்தத்து ஈர்ஞ்சுவல் கவித்த "
(அகம், 133)

" கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த
வல்லிலைக் குருந்தின் வாங்குசினை இருந்து "
(அகம், 194)

" நனைப்பசுங் குருந்தின் நாறுசினை யிருந்து
துணைப்பயிர்ந் தகவுந் துணைதரு தண்கார் " (அகம், 85)

" அலங்குசினைக் குருந்தின் அல்குநிழல் வதிய "
(அகம், 304)

" குரவுந் தளவுங் குருந்துங் கோடலும்
அரவு கொண்டரும்ப "
(பெருங்கதை, 1:49)

" குருந்தொடு முல்லை குலைத்தன காண் "
(திணைமாலை நூற்றைம்பது, 112)

" குருந்தலை வான்படலை சூடிச் சுரும்பார்ப்ப
ஆயன்புகுதரும் போழ்தினுன்"
(ஐந்திணை எழுபது, 28)

" முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை" (கலி. 113)
" குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை "
(கலி. 111)

" குல்லையுங் குருந்துங் கோடலும் பாங்கருங்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர் "
(கலி. 103)

குருந்து ஒரு மரம். வறட்சியான பகுதிகளில் காணப் படும். கற்பாங்கான பகுதிகளிலும் வளரும் தன்மை யுடையது. சங்க நூல்களில் முல்லை நிலத்தில் கொல்லைப்புனத்தில் உள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. இதன் இலை மென்மையற்றது. ஆதலால் "வல்இலை" என்று அகநானூறு அழைக்கிறது. குருந்த மரம் கொன்றையோடு காணப்பட்டதாகச் சில பாடல்களில் கூறப்பட்டிருப்பது அக்கால இயற்கைச் சூழ்நிலையை அப்படியே கூறியதாகும். குருந்த மலரைத் தனி யாகவோ முல்லையொடு சேர்த்தியோ தலைமாலையாக அணிவது கோவலர்வழக்கமென்று (ஐங்குறுநூறு. 439; ஐந்திணை எழுபது. 28; கலி. 111) கூறப்பட்டுள்ளது. குருந்த மரம் கற்பாங்கான பகுதியில் வளர்வதைக் குருந்தம்பூ 'கல்லறையில்' பரவி விழுவதாக அகநானூறு கூறுவதிலிருந்து தெரிகின்றது. கல்லவும் கடத்தவும் குருந்தின் கமழ் கண்ணி மலைந்தனர் என்று கலித் தொகையும் கூறுகின்றது. குருந்தின் பூ நறுமண முடையது. " நனைப்பசுங் குருந்தின் நாறுசினை

விருந்து" என்ற அகநானூற்றுப் பாடல் வரி இதன் நறுமணமான பூங்கொம்பைப் பற்றிக் கூறுகின்றது.

"குருந்தின் குவியிணரை உள்ளுறையாக"

வண்டுகள் ஊதியதாகக் கார்நாற்பது கூறுவதையும் காணலாம்.

குருந்த மரம் நிழல் தரும் மரமன்று என்பதையும் இரு பாடல்கள் குறிப்பிடுகின்றன. குருந்த மரம் முல்லைத் திணைக்குரியதாகவும் ஆயர் அணியும் பூவாக வும் இருந்ததால் கண்ணன் ஒசித்த மரம் குருந்தெனத் தமிழ் நூல்களில் வழங்கியதாகத் தெரிகின்றது.

"கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தாற் பாடுதும்"
(சிலம்பு-ஆய்ச்சியர் குரவை. 20)

கோபியர் ஆடைகளைக் கவர்ந்து அவர்களுக்குக் குருந்தைக் கண்ணன் வளைத்ததாகப் பிற்கால நூல்கள் கூறும்.

குருந்து எலுமிச்சை, கிச்சிலி இனத்தைச் சார்ந்தது. தற்காலத்தில் புனவெலுமிச்சை, காட்டுநாரத்தை என்பர். கொல்லைப் புனத்துக் காணப்பட்டதால் புனவெலுமிச்சை எனப்பட்டதாகத் தெரிகின்றது. செடிநூலில் குருந்து Atlantis Missionis என்றழைக்கப் படும். குருகு, குரவு, குருந்து ஆகிய மூன்று செடி களின் பூக்களும் நறுமணமுடையனவாகையால் சூடும் பூக்களாகக் கருதப்பட்டனவென்பது சங்க நூல்களி லிருந்து தெளிவாகின்றது.

---

## 17. நெல்லி

நெல்லி மரத்தைப் பற்றிச் சங்க நூல்கள் பல இடங்களில் குறிப்பிடுகின்றன. நெல்லி மரத்தைப் பாலைத் திணைக் குரியதாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. நெல்லி மரம் வறட்சியான சூழ்நிலையில் வளரக் கூடியதென்பதைச் சங்கப் புலவர்கள் நன்கு உணர்ந்திருந்தனரென்பது விளங்குகின்றது.

" விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும்
அந்த நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய் " (அகம், 241)

" நெல்லி நீடிய கல்லறைக் கவா அன் " (அகம், 385)

" நெல்லி நீடிய கல்காய் கடத்திடை " (ஐங்குறுநூறு, 334)

" புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்
கல்லதர் மருங்கிற் கடுவளி யுதிர்ப்ப " (அகம், 363)

நெல்லி மரம் வறண்ட இலையுதிர் காடுகளிலும், 4,500 அடி வரை உயரமான குன்றுச் சரிவுகளிலும் இயற்கையில் வளர்வதாகச் செடிநூலார் கூறுவர். சங்க நூல்களிலும் 'கல்லறைக் கவான்,' 'கல்காய்கடம்,' 'மால் வரைச் சாரல்,' 'பெருமலை விடரகம்' ஆகிய இடங்களில் காணப்படுவதாகக் கூறியிருப்பதை நோக்குக. அத்தத்திலும், சுரத்திலும் காணப்பட்டதாகவே பொதுவாகக் கூறப்படுகின்றது.

நெல்லியின் இலையையும் காயையும் குறிப்பிட்டுக் கூறும் செய்திகள் சங்க நூல்களில் காணப்படுகின்றன. நெல்லியின் இலையைச் 'சிறியிலை' என்று குறிப்பிட்டுச் சொல்லியிருக்கின்றனர்.

" சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா " (புறம், 91)

" சிறியிலை நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய் " (அகம், 291)

நெல்லியின் இலை சிறியது என்று செடி நூலாரும் கூறுவர். நெல்லியின் இலை பறவையின் இறகு போன்று நீண்ட காம்பில் சிறுசிறு இலையாக விரிந்து காணப்படும் என்று செடி நூலார் கூறுவர். நெல்லியின் இலையைப் 'புல்லிலை' என்றும் சங்கநூல்கள் கூறும். 'நுண்ணிலை' என்று அகநானூறு கூறுவது மிகவும் பொருத்தம்.

நெல்லியின் காயைப்பற்றிய செய்திகள் தெளிவாக இதன் காயை வர்ணிக்கின்றன.

" கோடை யுதிர்த்த குவிகட் பசுங்காய்
அறுநாற் பளிங்கின் றுணைக்காசு கடுப்ப
வறுநிலத் துதிரும் அத்தம் கதுமெனக் " (அகம், 315)

" அணையணை திணையை யாகல் கணையரைப்
புல்லிய நெல்லிப் புகரில் பசுங்காய்
கல்லதர் மருங்கிற் கடுவளி யுதிர்ப்பப்
பொலஞ்செய் காசிற் பொற்பத் தாஅம்
அத்தம் நண்ணி அதர்பார்த் திருந்து " (அகம், 363)

" மையில் பளிங்கின் அன்ன தோற்றப்
பல்கோள் நெல்லிப் பைங்காய் அருந்தி
மெல்கிடு மடமரை ஓர்க்கும் அத்தம் " (அகம், 399)

" விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும்
அத்த நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்
வட்டக் கழங்கில் தாஅய்த் துய்த்தலைத் " (அகம், 241)

" முளிந்த ஓமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன் " (அகம், 5)

" கல்லாச் சிறுஅர் நெல்லிவட் டாடும் " (நற்றிணை, 3)

நெல்லியின் காய் உருண்டு திரண்டிருப்பதாகச் சங்கப் பாடல்கள் கூறுகின்றன. 'திரள்காய்', 'குவிகட் பசுங் காய்', என்று கூறுகின்றன. நெல்லியின் காய் பசிய தாய் இருந்து முற்றியதும் பளபளப்பாய்க் கண்ணாடிக் குண்டு போலக் காணப்படும். நெல்லியின் காயைப் பளிங்குடன் ஒத்திட்டுச் சங்கப் பாடல்கள் கூறுவது நெல்லிக்காயின் பளிங்குபோன்ற பளபளப்பான தன்மையைக் குறித்தே என்பதை உணர வேண்டும். "பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி" என்று கூறும் விளக்கம் மிகவும் பொருத்தமானது. நெல்லியின் முற்றிய காய் நூலறுந்துவிழுந்த பளிங்கு போன்ற துளையுடைய உருண்ட காசுபோல நிலத்தில் விழுந்து கிடந்ததாகக் கூறுவதைக் கவனிக்க வேண்டும். பொன்னாலான காசுபோ லிருந்ததாகக் கூறியிருப்பதை யும் பார்க்கலாம். அக்காலத்துக் காசுகள் உருண்டை யானவை என்பதை உணர்ந்து இந்த உவமையை இன் புற வேண்டும். நெல்லியின் காய் வட்டமான கழங்கு போலவும், சிறுவர் விளையாடும் வட்டுக்காய் போலவும் இருந்ததாகக் கூறுவதிலிருந்து நெல்லிக்காயின் உருட் சியும் திரட்சியும் விளக்கப்படுகின்றன. நெல்லிக் காயின் சுவையைப்பற்றிச் சங்கநூல்கள் அழகாகக் கூறுகின்றன. நெல்லிக்காய், இனிமையான புளிப்பை யுடையதென்பதைத் 'தீம்புளி நெல்லி' என்று கூறி னர். இதன் சுவையுடைய காய் பல்லைக் கூசச் செய் வதையும் ஒரு குறுந்தொகைப் பாடல் குறிப்பிடு கின்றது.

> " நெல்லி தின்ற முள்ளெயி று தயங்க
> உணலாய்ந் திசினு லவரொடு சேய்நாட்டு "
>
> (குறுந்தொகை, 262).

நெல்லிக்காயைத் தின்றதனால் மற்ற உணவை உண்ணத் தயங்கும் பற்கள் என்று சொல்லியிருப்பதை நோக்குக.

" பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி " (அகம், 54)

" சுவைக்காய் நெல்லிப் போக்கரும் பொங்கர்
வீழ்கடைத் திரள்காய் ஒருங்குடன் தின்று
வீசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த " (நற்றிணை, 271)

நெல்லிக்காயைத் தின்னும்போது புளிச்சுவை தெரியும். ஆனால், தின்றவுடன் நீர் அருந்தினால் வாயில் இன்சுவை தோன்றும். இதையே மேற்காட்டிய சங்கப் பாடல்கள் கூறுகின்றன. நெல்லிக்காய் நீர் வேட்கையைத் தணிக்கும் தன்மையுடையவை (Thirst Quenchers).

" குறும்பொறை மருங்கிற் கோட்சுர நீந்தி
நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்
செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லி " (அகம், 271)

பாலையில் நெடுவழி நடந்தவர்க்கு நீர்வேட்கையால் உயிர் போகாதிருக்க நெல்லிக்காய் உதவியதாகக் கூறியதைக் காணலாம். உண்ணும் நீர்போல் உதவி நீர் வேட்கையைத் தணித்ததால் "அறந்தலைப்பட்ட நெல்லியம் பசுங்காய்" என்று நற்றிணை கூறுகின்றது.

நெல்லியின் காயைப் புறாவும் வௌவாலும் உண்பதாகச் சங்கநூல்கள் கூறுகின்றன.

" புறவுக்குயின் றுண்ட புன்காய் நெல்லிக்
கோடை யுதிர்த்த குவிகட் பசுங்காய் " (அகம், 315)

" நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை
நெல்லி யம்புளி மாந்தி யயலது " (குறுந்தொகை. 201)

புறு உண்டதாகக் கூறியது அரிய செய்தியே. வெளவால் விரும்பி உண்டதாகக் கூறியது அறிஞர்கள் கண்டறிந்த செய்தியாகும். வெளவால் நெல்லிக் கனியை மாந்தியதாகக் கூறியதைக் கவனிக்க வேண்டும். வெளவால் கனிகளை அப்படியே விழுங்கி உண்ணும். புறவு குயின்று உண்டதாகக் கூறுவதை யுங் கவனிக்க வேண்டும். விலங்கினத்தில் மரையான் (Nilgai) எனும் விலங்கு நெல்லிக்காயை விரும்பி உண்டதாகக் கூறியிருப்பது விலங்கு நூலார் கூறிய செய்தியுடன் ஒத்திருப்பது வியப்பே.

"புரிமட மரையான் கருநரை நல்லேறு
தீம்புளி நெல்லி மாந்தி யயலது" (குறுந்தொகை, 317)

"கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி
மரையின மாரு முன்றிற்" (குறுந்தொகை, 235)

"பராரை நெல்லி யம்புளித் திரள்காய்
கான மடமரைக் கணநிரை கவரும்" (அகம், 69)

"பல்கோ ணெல்லிப் பைங்கா யருந்தி
மெல்கிடு மடமரை ஓர்க்கும் அத்தம்" (அகம், 339)

"மரைபிரித் துண்ட நெல்லி வேலி" (புறம், 170)

மரையான் இலந்தைக்காயையும் நெல்லிக்காயையும் விரும்பி உண்ணும் என்று விலங்கு நூலார் கூறுவர்.

நெல்லி மரத்தைத் தோட்டத்திலும் வீட்டு முற்றத்திலும் வேலியிலும் வளர்த்து வந்ததையும் சங்க நூல்கள் கூறுகின்றன. "நெல்லி வேலிப் பரலுடை முன்றிலங்குடிச் சீறூர்" என்று புறநானூறு கூறுகின்றது. வீட்டைச் சுற்றி நெல்லி மரத்தை இன்றும் சிற்றூர்களில் வளர்ப்பர். நெல்லிக்காயின் விதை கல்போல் உறுதியாக இருக்கும்; நெல்லிக்காயின்

விதையைப் 'பரல்' என்றும், 'புன்காழ்' என்றும் கூறுவர்.

சிலவிடத்துள் விளைந்த நெல்லி மரத்தின் காய் மிகுந்த சுவையுடையதாகக் குறிப்பிட்டுக் கூறியிருப்பது கவனிக்க வேண்டிய செய்தியாகும்.

"பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி" (அகம், 54)

"உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல்
ஓங்கல் அஞ்சினைத் தூங்குதுயில் பொழுதின்
வெல்போர்ச் சோழர் அழிசியம் பெருங்காட்டு
நெல்லியம் புளிச்சுவைக் கனவி யாஅங்கு" (நற்றிணை, 87)

பண்ணனின் சிறுகுடியின் தோட்டத்தில் விளைந்த நெல்லியின் காயினிமையை அகம் கூறுகின்றது. சோழர்க்குரிய அழிசியம் பெருங்காட்டில் விளைந்த நெல்லி மரத்தின் புளிச்சுவையை நினைத்து உள்ளூர் மரத்தில் தூங்கும் வெளவால் கனவு கண்டதாகக் கூறியிருப்பதைக் காணலாம்.

"பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா" (புறம், 91)

"ஆர்வ நன்மொழி யாயு மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த"
(சிறுபாணாற்றுப்படை. 99, 101)

அதிகமான் ஔவைக்குத் தான் அரிதாகப் பெற்ற சாகா மருந்தான கருநெல்லிப் பழத்தைக் கொடுத்த கதையைப் புறநானூறும், சிறுபாணாற்றுப்படையும் கூறுகின்றன. இயற்கையில் அத்தகைய குணமுடைய கருநெல்லிக்கனி இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால்,

நெல்லிக்காய் நிறைய மருந்துச் சத்துடையது. நெல்லிக்காயில் மிகுதியான விட்டமின்-சி. (Vitamin-c.) சத்து உண்டெனக் கண்டுபிடித்துள்ளனர்.

நெல்லி மரத்தைச் செடிநூலார் (Emblica officinalis) என்று கூறுவர். இதன் குடும்பத்தைச் சேர்ந்த அரிநெல்லி என்றொரு மரமும் உண்டு. இதன் கனியும் உண்பதற்குப் பயன்படும். அரிநெல்லி சங்க நூல்களில் கூறப்படவில்லை. சங்கநூல்களில் கூறப்படும் விளக்கமும் அரிநெல்லிக்குப் பொருந்ாது. "உள்ளங்கை நெல்லிக்கனிபோல" என்று கூறும் பழமொழியில் உருண்டு திரண்ட பளிங்கு போன்ற நெல்லிக்கனி கூறப்படுகின்றன. இது சங்க நூல்களில் வரும் நெல்லியின் கனியாகும். அரிநெல்லிச் செடி இந்திய நாட்டிற்குச் சொந்தமன்று. மலேயாவிலிருந்து கொண்டுவரப்பட்டது. தற்காலத்தில் அரிநெல்லியிலிருந்து பிரித்துணர்வதற்காகக் காட்டு நெல்லி என்றும், பெரு நெல்லியென்றும் சங்க காலத்தில் வழங்கிய நெல்லியை அழைக்கின்றனர். அரிநெல்லியைச் செடி நூலார் 'Phyllanthus Acidus' என்பர்.

———

## 18. கருவிளம், கூவிளம்

கருவிளம் என்ற மரத்தைப்பற்றியும் கூவிளம் என்ற மரத்தைப்பற்றியும் சங்க நூல்களில் சில செய்திகளே வருகின்றன. விளாமரம் என்பதே சங்க நூல்களில் விளவு, விளம் என்றும், வெள்ளில் என்றும் அழைக்கப்படுகின்றது. விளவிற்குப் பந்து போல் உருண்ட பழம் உண்டு. விளவ மரத்தை எளிதில் கண்டுணர இதன் பழம் உதவுகிறது.

"பொரியரை விளவின் புன்புற விளைபுழல்
அழலெறி கோடை தாக்கலிற் கோவலர்
குழலென நினையும் நீரில் நீளிடை"

(அகம். 219)

"பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்டு
உடும்படைந் தன்ன நெடும்பொரி விளவின்
ஆட்டொழி பந்திற் கோட்டுமூக் கிறுபு
கம்பலத் தன்ன பைம்பயிர்த் தாஅம்
வெள்ளில் வல்சி வேற்றுநாட் டாரிடை"

(நற்றிணை, 24)

"விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசிப்
பாசந் தின்ற தேய்கான் மத்த
நெய்தெரி யியக்கம் வெளீல்முதன் முழங்கும்"

(நற்றிணை, 12)

கம்பலத்தை விரித்தாலொத்த பசிய பயிரின்கண் ஆடுதலொழிந்து பந்து கிடப்பது போல விளாம்பழம் பரவியிருக்குமென்று நற்றிணை கூறுவதைக் கவனிக்க வேண்டும். விளாம்பழம் உருண்டு திரண்டிருப்பதை "விளங்காய் திரட்டினார் இல்லை" என்று நாலடியார் (107) கூறுகிறது. விளம்பழத்தின் இனிய புளிச்

சுவையைப் பழந்தமிழர் விரும்பினர். தயிரில் காணும் முடைதீர தயிர்த்தாழியில் விளம்பழத்தை இட்டு வைத்தனர் என்று நற்றிணை (12) கூறுவதைக் காணலாம். விளம்பழம் பழுக்கும் காலத்தைக் கவனித்து வைத்திருந்தனர். "களவும் புளித்தன, விளவுமப பழுநின" என்று அகநானூறு (294) கூறுவதை நோக்குக.

> ''சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
> இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார் - இறுகிறுகிப்
> பின்னறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
> பொன்னும் புளிவிளங்காய் ஆம்''
>
> (நாலடியார், 328)

சாகுங்காலத்தில் ஒருவன் சேர்த்து வைத்த பணத்தை அறஞ்செய்யச் செலவழிக்கச் சொல்வதற்காகப் பேச முயல்கிறான். நாவெழாமையால் கையால் குவித்துக் குறிப்புக் காட்ட அதைப் புரிந்தும் புரியாதது போல் விளம்பழம் தின்பதற்கு இது பருவமன்று என்று மனைவி கூறுகின்றாள். இதே செய்தியைச் சீவக சிந்தாமணியும் "ஐயா விளாம்பழமே என்கின்றீர் ஆங்கதற்குப் பருவ மன்றென் செய்கோ" என்று மனைவி கூறியதாகச் சொல்லுகின்றது. இதிலிருந்து விளம்பழம் பழுக்கும் பருவத்தை நன்கு உணர்ந்திருந்தனரெனத் தெரிகின்றது. நற்றிணையில் விளம்பழத்தை 'வெள்ளில் வல்சி' என்று கூறப்பட்டிருப்பதைக் கவனிக்கவும். விளாம்பழம் ஓர் உணவாகப் பயன்பட்டது எனத் தெரிகின்றது. நாலடியார் கூறியுள்ள கதையிலிருந்து சாகுங்காலத்தில் 'செல்வுழி வல்சி'யாக 'வெள்ளில் வல்சியைக்' கொடுக்கும் பழக்கம் இருந்ததாகத் தெரி

கின்றது. இன்றும் செத்தோர்க்குச் சாந்தியாக இடும் விருந்தில் விளம்பழத்தைப் பயன்படுத்துவதுண்டு. விளாம்பழம் திரண்டிருப்பதைக் கண்டு அதேபோல் திரட்டிச் செய்யும் பொரியுருண்டையைப் 'பொரி விளங்காய் உருண்டை' என்று இன்றும் வழங்குவர். நாலடியார் 'புளி விளங்காய்' என்று கூறுகின்றது. "வேழம் உண்ட விளம்பழம்" என்பதற்குச் சிலர் வேழம் என்பது ஒரு நோய் என்றும், அது விளாம்பழத்தின் உள் சதையை உண்டுவிட்டு ஓடாக விட்டுவிடும் என்றும் கூறுவர். சிலர் யானை உண்ட விளாம்பழம் என்று பொருள் கூறுவர். விளாம்பழத்தை நோய் தாக்குவதுண்டு. அதனால் உள்ளீடற்றதாக விளாம் பழம் காணப்படுவதுண்டு. அகநானூற்றுப் பாடலில் (219) விளாமரத்தின் புல்லிய புறத்தையுடைய பழம் பழுலையுடையதாய்க் கோடைக் காற்று வீசும்போது குழல்போல் ஓசையிட்டதாகக் கூறுவதைக் காணலாம்.

"மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்
கருங்கண் ணெயிற்றி காதன் மகனொடு
கான விரும்பிடிக் கன்றுதலைக் கொள்ளும்
பெருங்குறும் புடுத்த வன்புல விருக்கை"

(புறம், 181)

மரத்தின்கண்ணே இருந்த விளாமரத்தின் பழம் மனையிடத்தே வீழ்ந்து கிடக்க அதைக் கரிய பிடியினது கன்று வந்து எடுத்ததாகப் புறப்பாடல் கூறுகின்றது. யானை விளவினது பழத்தை உண்பதுண்டு என்பதைச் சங்கப் புலவர்கள் தெரிந்திருந்தனர். விளாமரத்தை மன்றத்திலும் வீட்டு முற்றத்திலும் வளர்த்தன ரெனத் தெரிகின்றது.



கருவிளம்
(இலையும், கனியும்)



கூவிளம்
(இலையும், கனியும்)

"பார்வை யாத்த பறைதாள் விளவின்
நீழன் முன்றி னிலவுரற் பெய்து" (பெரும்பாண். 95.)

"புள்ளிறை கூரும் வெள்ளின் மன்றமும்"

(மணிமேகலை, 6.85.)

வீட்டு விலங்குகளை மன்றத்தில் வளர்ந்த விளா மரத்தில் கட்டுவதைப் புறம் கூறுகின்றது.

விளாமரத்தின் வேர் நிலத்தைப் பிளந்து சென்றதாக நற்றிணை கூறுகிறது. விளாமரத்தின் பட்டை பொரிந்து கிடப்பதைக் குறிப்பாகப் 'பொரியரை விளவின்' என்று அகநானூறு கூறுகிறது. விளாமரம் பட்டை உரிந்து கிடப்பதை மிக அழகாக உடும்பு அடைந்து கிடப்பதுபோல விளாவின் அடிமரம் பொரிந்து கிடந்ததாகக் கூறியிருப்பதைக் காணலாம். "உடும்படைந் தன்ன நெடும் பொரி விளவின்" என்று கூறியது அழகான உவமையாகும். விளாமரத்தைப் பாலையிலும் முல்லையிலும் சங்கநூல்கள் கூறுவது பொருத்தமே. செடி நூலாரும் இயற்கையில் விளா மரம் வறட்சியான காடுகளிலும் (Dry forest) வறண்ட சூழ்நிலைகளிலும் காணப்படுவதாகக் கூறுவர். மக்கள் விரும்பி வளர்க்கும் மரங்களில் ஒன்றாகவும் கூறுவர். திருமுருகாற்றுப்படை விளவின் இலையைப் பற்றிக் கூறுகின்றது.

"வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெரியாக்"

(திருமுருகாற்றுப்படை, 37)

விளவினது சிறிய தளிரைக் கிள்ளி அழகுற ஒருவர் மேல் ஒருவர் அப்புவர் என்று கூறுகின்றது.

"அருகாது ஆகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா"

(நாலடியார். 261.)

வௌவால் விளாமரத்தைக் குறுகாமைக்குக் காரணம் ஓடும் முள்ளும் இருப்பதால் பயன்படாமை என்று உரை கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும். விளாமரத்திற்கு முள் இருப்பதால் விளாமரத்தில் பல பழங்கள் இருந்தாலும் வௌவால் அதை நாடுவதில்லை என்று கூறியிருப்பது உண்மையான செய்தியேயாகும்.

விளாமரத்தைவிட மிகஅரிதாகச் சொல்லப்படுவது கூவிளமரமாகும். கூவிளத்தைக் கூவிரம் என்று குறிஞ்சிப்பாட்டுக் கூறுகின்றது. (66) கூவிளத்தின் பூவைக் குறிப்பிடுகின்றது.

"பெருவரை நீழல் வருகுவன் குளவியொடு
கூவிளந் ததைந்த கண்ணியன் யாவதும்"

(நற்றிணை, 119)

"ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற்
கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியும்"

(புறம், 158)

கூவிளம் பூவை மாலையாகக் கட்டி அணிந்ததை நற்றிணை குறிப்பிடுகின்றது. எழினி எனும் தலைவன் 'கூவிளங்கண்ணி' அணிந்ததைப் புறம் கூறுகின்றது.

"கூவிள விறகி னாக்குவரி நுடங்கல்" (புறம், 372)

கூவிளமரத்தின் விறகை எரிக்கப் பயன்படுத்திய தாகப் புறம் கூறுகின்றது. சங்க நூல்களில் கூவிளத்தைப்பற்றி வேறு குறிப்புகள் இல்லை.

சங்க நூல்களில் கருவிளத்தை 'வெள்ளில்' என்று குறிப்பிட்டுள்ளனர். வெண்மையற்றது என்ற பொருளில் வெள்ளில் என்ற பெயர் தோன்றியதாகத் தெரிகின்றது. கருவிளத்திற்குக் கரிய அடிமரம் உண்டு. தமிழிலக்கணத்தில் செய்யுளியலில் கருவிளம், கூவிளம் என்ற பெயர்கள் வழங்குகின்றன. கருவிளமும், கூவிளமும் ஒரே இனத்தைச் (Rutacea) சார்ந்தவை. இரண்டுக்கும் இனிய புளிப்பான திரண்ட பழம் உண்டு. இதன் காரணமாகவே பழந்தமிழர் இரண்டையும் 'விளம்' என்றழைத்து, கருவிளம் என்றும் கூவிளம் என்றும் பிரித்துக் காட்டினரெனத் தோன்றுகின்றது. கூவிளத்தைப் பிற்காலத்தில் 'வில்வம்' என்றனர். ஆனால் மலையாளத்தில் இன்றும் பழந் தமிழ்ப்பெயரான கூவிளம் வழங்குகின்றது. கூவிளத்தைச் சிவனுக்கு உரிய மரமாகவும் அதன் இலையைப் பூசைக்குரிய பூவாகவும் கருதுவர். கருவிளத்தை 'Feronia Eleplantum' என்றும், கூவிளத்தை 'Aegle Marmelos' என்றும் செடிநூலார் அழைப்பர்.

---

# அட்டவணை

[எண் : பக்க எண்]

## அருஞ்சொற்பொருள் விளக்கம்

அரை - அடிமரம்
இணர் - பூங்கொத்து
உளைப்பூ - துய்யினையுடைய பூ
ஊழுற்ற - பருவம் ஒழிந்த
எயிறு - பல்
கவரி - இமயத்தில் வாழும் விலங்கு
குருதிப் பூ - இரத்த நிறமான பூ
கூடு - கொண்டை
செப்பு - சாடி
செம்மல் - காய்ந்த பூஞ்சருகு
தகடு - தகடு போன்று தடித்த புறவிதழ்
தாது - மகரந்தம்
தோடு - மடல்
நுதும்பு - செடிக்குருத்து
படார் - படரும் கொடி
பராரை - பெரிய அடிமரம்
பாந்தள் - பாம்பு
பஃறுடுப்பு - பல துடுப்பு
பையணந்தன்ன - பாம்பு படமெடுத்தாற் போல
முதல் - அடிமரம்
வயிறு - நடுவிடம்
வண்டு - ஒரு பூச்சி, வளையில்
வெருவரு - அச்சம் தரும்

---

## கலைச்சொல் விளக்கம்

(ஆங்கிலம் - தமிழ்)

Abrus Precatoris - குன்றிமணி
Adaptations இடத்துக்கேற்ற மாற்றங்கள்
Aegle Marmelos - கூவிளம்
Aesitivation - பூவிதழ்கள் ஒன்றோடொன்று பொருந்தும் அமைப்பு
Arisaema Leschenauli - பாம்புச் செடி
Backwaters - உப்பங்கழி
Bark - பட்டை
Bassia Longifolia - இலுப்பை மரம்
Biloba - கவட்டிலை (அடும்பு)
Bombax Malabaricum, Salmalia Malabaricum, Red silk cotton tree - இலவ மரம்
Botanist - செடிநூலார்
Botany - செடி நூல்
Bowstring Hemp - மருள்
Buttercup tree - கோங்கு மரம்
Cassia Fistula - கொன்றை
Climbing shrub - தவழுஞ் செடி
Colophyllum - அழகிய இலை

Colophyllum Inopyllum, Alexandran Laurel, Poon - புன்னை மரம்
Chlorophyll - இலைப்பச்சை
Crotons-அழகுச் செடிகள்
Crimson - கருஞ் சிவப்பு
Cymbopogon Nardus நரந்தம்
Deep intellect-திண்ணிய அறிவு
Dentate and Sinuate- ஆரப்பல் இலையின் ஓரம்
Dry forests - வறட்சியான காடுகள்
Easter tree - குடசம்
Environment - சூழ்நிலை
Etiolation - பச்சை இழந்து வெளிறிப் போதல்
Feronia Eleplantum-கருவிளம்
Ficus religiosa - கடவுளாலம்
Fistuler - குழாய் போன்ற துளை
Flame of forest-முருக்க மரம்
Flos-Regina (The Queen Flower)-மருத மரப்பூ
Forester - காட்டியல் அறிஞர்
Goats Foot - அடும்பின் பூ
Golden Shower - கொன்றைப் பூங்கொத்து
Heart - wood - வைரம்
Hilium-விதையின் ஓரத்தி லுள்ள தழும்பு
Hiptage Madablata - குருகு
Inflorescence - கொத்துக் கொத்தாகவுள்ள மலர்கள்
Ipomla Biloba - அடும்பின் பூ
Ivory wood - தந்தப்பாலை
Jasminum Auriculatum - முல்லைச் செடி
Madhuca Longefolia - இலுப்பை
Laburnam - கொன்றை
Leather Berried - Bindwood Revea ornato முகண்டை
Malapothram பலைப்பத்திரம்
Mimicry - போலிநிறம்
Nardin of gangetis - நரந்தம்
Natural Phenomenon- இயற்கை நிகழ்ச்சிச் செய்திகள்
Nilgai - மரையான் (ஒரு விலங்கு)
Nymphae Stellata - நெய்தற் செடி
Pandanus odoratissimus - தாழை
Pandanus - தாழஞ்செடி
Panicle, golden shower (streaming gold)- மகரணைறைப் பூங்கொத்து
parasites - புல்லுருவிகள்
Parasitism - புல்லுருவித் தன்மை
Partial root parasites- பாதிவேர்ப் புல்லுருவிகள்
Phyllanthus Acidus- அரிநெல்லி
Pollin - மகரந்தம்
Pollination-மகரந்தச்சேர்க்கை
Pongamia Glabra புன்கை
Proproots - தாங்குவேர்கள்
Protective colour-தற்காப்பு நிறம்
Psychology - உளநூல்
Semi parasites - அரைப் புல்லுருவிகள்
Serrate - அரம் போன்ற தன்மை
Serrate Margin - வேப்பிலை
Showy Scarlet Flowers- இலவம் பூக்கள்

Spices - மணப்பொருள்கள்
Stem - அடித்தண்டு
Stereospermum-Suaveolons - பாதிரி மரம்
Stilt roots - எழும் வேர்கள்
Subtle-Aesthetic Sense- நுண்ணிய அழகுணர்ச்சி
Thirst Quenchers - நெல்லிக்காய்
Terminalia Arjuna- வெள்ளை மருது, குலமருது
Town planners-நகரமைப்பாளர்
Unifloral Honey-தனிப் பூத்தேன்
Volupto - விழைவு
Waxy cuticle - மெழுகு பூசப்பட்டாற்போன்றதொரு தோல்
Wrightia tinctoria - பாலை
Xerophytic condition - பாலை நிலை

(ஆங்கிலம்)

Cilliate - Silky hairy
Colophyllum - beautiful leaf
Co panulate - bell shaped
Corymbose - flowers stalked and on the same level
Cyme - older flowers on the main axis
Entomophyly - Pollination by insects
Etiolation - withering of leaf due to want of sunlight
Fascicled - bundle - like
Fistular - Tubular inside
Imbricate - overlapping
Inflorescence - grouping of flowers together
Lanceolate - lance shaped
Mauve - a bright but delicate purple dye
Mimicry - Imitation in Plants
Obovate - broader part towards apex
Panicle - cluster of flowers
Parasite - living on other plants
Rotate - wheel shaped
Serrate - like the teeth of the saw
Waxy cuticle - wax - like smooth skin
Xerophytic - loving dry conditions or resistant to dry conditions
Zoophily - Pollination by animals and birds

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 5 | Aegle Marmelos | Feronia Elephantum |
| 9 | 12 | யொன்முறி | யொண்முறி |
| 12 | 2 | பாடங்களில் | பாடல்களில் |
| 16 | 15 | கழிநிறமாக | கருநிறமாக |
| 17 | 9 | (அகம்) | (நற்றிணை-268) |
| 21 | 9 | பூலாமரம் | பலா மரம் |
| 29 | 22 | மிகவுயரியதாகக் | மிகவரியதாகக் |
| 35 | 24 | மாணிக்கச் சுளை | மாணிக்கச் சுனை |
| 49 | 10 | சோலை வளங்களினும் | சோலைவளங்களினும் |
| 50 | 20 | free | tree |
| 54 | 24 | cyames | cymes |
| 61 | 25 | Hallarrhena | Hollarrhena |
| 62 | 2 | பாலையையும் | குடசப்பாலையையும் |
| 97 | 2 | கூதுகிற | கூறுகிறது. |
| 98 | 8 | Erythihina | Erythrina |
| 108 | 4 | துயர் வர | துயல் வர |
| 111 | 10 | காசிலை | பாசிலை |
| 111 | 12 | யுரைபு | புரையு |
| 116 | 22 | தூய்த்தலை | துய்த்தலை |
| 125 | 14 | மீன்கண் டன்ன | மீன்கண் ணன்ன |
| 127 | 11 | wasey | waxy |
| 128 | 26 | விளங்கின அவிழ்பொற் | விளங்கிண ரவிழ்பொந் |
| 138 | 20 | இலையுதிர்ந்து காடுகளில் | இலையுதிர் காடுகளில் |
| 146 | 27 | ஜுணுடை | பூணுடை |

அடுத்து வெளிவரும் நூல் :

**சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்**

ஆசிரியர் :

திரு. பி. எஸ். சாமி, பி. எஸ்ஸி.

---

